# சங்க இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு (Thesis)


ஆய்வாளர்

**ந. இராஜேந்திரன்**

*பதிவு எண் : 0003*

நெறியாளர்

**முனைவர் மு. சுதா**















**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

( தேசியத் தர நிர்ணயக் குழுவின் மறுதர மதிப்பீட்டில் 'A' மதிப்புப் பெற்றது )

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு**

**இந்தியா**


**ஜீன் – 2013**

**ந.இராஜேந்திரன்,**
பதிவு எண்.0003,
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.




நாள் : 12/06/2013.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்"** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இவ்ஆய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

12/6/13.
**(ந.இராஜேந்திரன்)**
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

12/6/2013

**முனைவர் மு.சுதா,**
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

**முனைவர் மு.சுதா,**

உதவிப்பேராசிரியர்,

தமிழ்த்துறை,

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி - 630 003.



நாள் : 12/06/2013.

# நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்"** என்னும் தலைப்பில் ஆய்வாளர் **திரு.ந.இராஜேந்திரன்** அவர்கள் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகச் செய்யப் பெற்ற இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னிச்சையாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

12/6/2013

**(மு.சுதா)**

நெறியாளர்
முனைவர் மு. சுதா
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி–630 003.

/ /2013

துறைத் தலைவர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003

# நன்றியுரை

**“சங்க இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்”** எனும் தலைப்பில் முனைவர்பட்டம் மேற்கொள்வதற்கு எனக்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர், தமிழ்த்துறைத் தலைவர் பேரா. முனைவர் மு.பாண்டி ஆகியோருக்கு முதற்கண் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்டத்திற்கு வாய்ப்பளித்த, அன்றுமுதல் இன்றுவரை என் முனைவர்பட்ட ஆய்வையும் வாழ்வையும் நெறிப்படுத்திவரும் என் ஆய்வு நெறியாளர் முனைவர் மு.சுதா அம்மா அவர்களுக்கும் மற்றும் துறை பேராசிரியர் பெருமக்களுக்கும் எனது நெஞ்சம் நிறைந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுக்கான தரவுகள் திரட்டுவதற்கும், நூல்கள் வாங்குவதற்கும், ஆய்வு செம்மையுற அமைவதற்கும் ஊக்கத்தொகை வழங்கிய பல்கலைக் கழக மானியக்குழுவிற்கு (UGC - JRF) என் மனமார்ந்த நன்றி.

தன்னைக் குறைத்து என்னை ஆளாக்கிய தந்தை பூ.நல்லதம்பி, தாய் ந.குப்பம்மாள் அவர்களுக்கும் என் அன்பிற்கினிய சகோதரர், சகோதரிகள் மற்றும் மைத்துனர்கள் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினைக் காணிக்கையாக்குகின்றேன்.

ஆய்வுக்குத் தேவையான நூலுதவி செய்ததோடு ஆய்வு தொடர்பான ஐயங்களையும் தீர்த்துவைத்து ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் முன்னாள் இராமசாமி தமிழ்க்கல்லூரி முதல்வர் நா.வள்ளி அவர்களுக்கும் நாச்சியார்புரம், தமிழ்நாடு கல்வியியல் கல்லூரி முதல்வர் திரு.த.முத்துக்குமார்அவர்களுக்கும் திருச்சி, பாரதிதாசன் பல்கலைக்கழகம்- பெரியார் உயராய்வு மையத்தின் துறைத்தலைவர் பேரா.முனைவர்

இரா.தாமோதரன் அவர்களுக்கும் சென்னை, பள்ளி ஆசிரியர் முனைவர் ப.சரவணன் அவர்களுக்கும் திரு.கூ.சரவணப்பெருமாள் (சிங்கப்பூர்) அவர்களுக்கும் புதுக்கோட்டை, அரசு கலைக்கல்லூரி உதவிப்பேராசிரியர் அ.செல்வராசு அவர்களுக்கும் பாகனேரி, வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் நூலகத்தின் அலுவலர் திரு.சரவணன் அவர்களுக்கும் நன்றி நவில கடப்பாடுடையேன்.

ஆய்வுக்குத் தேவையான தரவுகளைத் திரட்டுவதற்குப் பெரிதும் உதவிய நூலகங்கள்.

- அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை நூலகம், காரைக்குடி.
- அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகம், காரைக்குடி.
- சிவகங்கை மாவட்ட மைய நூலகம், சிவகங்கை.
- சிவகங்கை மாவட்ட கிளை நூலகம், காரைக்குடி.
- வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் நூலகம், பாகனேரி.
- மதுரைத் தமிழ்ச்சங்க நூலகம், மதுரை.
- மதுரை காமராஜர் பல்கலைக்கழக நூலகம், மதுரை.
- புத்தகத் தாத்த நூலகம், மதுரை.
- உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்நகர், சென்னை.
- கன்னிமாரா பொது நூலகம், சென்னை.
- மறைமலையடிகள் நூலகம், சென்னை.
- ரோஜாமுத்தையா ஆராய்ச்சி நூலகம், சென்னை.
- சென்னைப் பல்கலைக்கழக நூலகம், சென்னை.
- பெரியார் பல்கலைக்கழக நூலகம், சேலம்.
- பாரதிதாசன் பல்கலைக்கழக நூலகம், திருச்சிராப்பள்ளி.

பல்கலைக்கழக மானியக்குழு ஊக்கத்தொகை (JRF) ஈராண்டு நிறைவில் SRF-க்காக நிகழ்த்தப்பெற்ற வாய்மொழித் தேர்வில் என் ஆய்வுப்

பணியை மதிப்பிட்டு ஆய்வுக்குத் தேவையான கருத்துக்களை வழங்கிய முனைவர் ப.வேல்முருகன் (தியாகராசர் கல்லூரி, மதுரை) அவர்களுக்கு மனம் நிறைந்த நன்றி.

இவ்ஆய்வுக்கு எள்முனையளவும் மனம் கோணாது மெய்ப்புத் திருத்தி செம்மைப்படுத்தியுதவிய ஆய்வாளர் பா.கவிதா, முனைவர் மு.முனீஸ்மூர்த்தி, ஆய்வாளர் ம.லோகேஸ்வரன், மூ.அய்யனார் ஆகியோருக்கும் உளமார்ந்த நன்றிகள்.

இவ்ஆய்வேட்டில் ஆங்காங்கு இடம்பெற்றுள்ள ஆங்கில மேற்கோள்களை சரிபார்த்து, தமிழ்ப்படுத்தி உதவிய முதுமுனைவர்பட்ட ஆய்வாளர் முனைவர் ப.சிவமாருதி (பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி) அவர்களுக்கும், அழகப்பா பல்கலைக்கழக உயிரியல்துறை முனைவர்பட்ட ஆய்வாளர் பிரசாந் எம்.அய்யர் அவர்களுக்கும் மேலாண்மைத்துறை முனைவர்பட்ட ஆய்வாளர் ஜெ.அசோக்குமார் அவர்களுக்கும் ஆய்வேடு செம்மையுற அமைய உதவிகள் செய்த ஆய்வாளர்கள் யா.சாம்ராஜ், மா.மணிகண்டன், பா.தென்றல், க.சத்தியமூர்த்தி, ச.அன்னபூரணி, மா.லெட்சுமி, ஷா.பீமாபரிதா, சி.செந்தில்குமார், சு.இராதேஷ்கிருஷ்ணன், டி.ஆர்.முத்துராமன் மற்றும் என் உடன்பயிலும் சக மாணாக்கர்களுக்கும் நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.

இவ்ஆய்வேட்டினைக் குறுகியகாலத்தில் வெகு நேர்த்தியாக கணினியாக்கம் செய்து உதவிய மகேஷ்கணினி நிறுவனத்தின் உரிமையாளர் அண்ணன் சுப.சுரேஷ் அவர்களுக்கு நன்றி நவில்வதில் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்.

நன்றியுடன்...

**ந.இராஜேந்திரன்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| அகராதி. | - | அகராதிகள் |
| இளம். | - | இளம்பூரணம் |
| உ.வே.சா. | - | உ.வே.சாமிநாதையர் |
| உரை. | - | உரையாசிரியர் |
| உ.ஆ. | - | உரையாசிரியர்கள் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஔவை. | - | ஔவை சு.துரைசாமிப்பிள்ளை |
| க.வா. | - | கடவுள் வாழ்த்து |
| கலி. | - | கலித்தொகை |
| களஞ். | - | களஞ்சியம் |
| குறள். | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சேர. | - | சேரர் |
| சோழ. | - | சோழர் |
| த.செ.பாண். | - | தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் |
| திறனா.வா. | - | திறனாய்வாளர்கள் |
| தொகு. | - | தொகுதி அல்லது தொகுப்பு |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச்சர். | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| ப. | - | பக்கம் |

| | | |
|---|---|---|
| பக். | - | பக்கங்கள் |
| பதி. | - | பதிகம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர்கள் |
| ப.உ. | - | பழைய உரை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பதிற்.பதி. | - | பதிற்றுப்பத்து பதிகம் |
| பரி. | - | பரிபாடல் |
| பரி.செவ். | - | பரிபாடல் செவ்வேள் |
| பரி.தி. | - | பரிபாடல் திரட்டு |
| பரி.வையை. | - | பரிபாடல் வையை |
| பரிமே. | - | பரிமேலழகர் |
| பா. | - | பாடல் |
| பா.எ. | - | பாடல் எண் |
| பாண். | - | பாண்டியர் |
| பாரதி.க. | - | பாரதியார் கவிதை |
| புறநா. | - | புறநானூறு |
| பேரா. | - | பேராசிரியர் |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| ம. | - | மன்னர் |
| மேலது. | - | மேலே சுட்டியது |
| மொ.ஆ. | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| வ.எண். | - | வரிசை எண் |
| வர. | - | வரலாறு |
| வர.ஆ. | - | வரலாற்று ஆசிரியர் |
| வர.வி. | - | வரலாறு விளக்கம் |
| P. | - | Page |

# உள்ளுறை

# முன்னுரை

தமிழ்மொழி செம்மொழித் தகுதிப்பாடு அடைய முதற்காரணமாய் அமைந்தவை சங்க இலக்கியங்கள். இச்சங்க இலக்கியங்கள் இன்றளவும் தனக்கென ஒரு தனித்துவம் பெற்று விளங்குகின்றன. வீரத்தமிழனின் அடையாளச் சின்னமாகவும் பழந்தமிழருடைய வரலாற்றினை வெளிச்சத்திற்குக் கொண்டுவரும் கருவூலமாகவும் திகழ்கின்றன. அந்த வகையில் உலக வரலாற்றில் ஓர் உயர்ந்த இடத்தினைப் பிடித்திருக்கும் சங்க இலக்கியமான எட்டுத்தொகையில் பதிவுசெய்யப்பெற்றுள்ள மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவினைக் காலத்தால் அழியாவண்ணம் பதிவுசெய்து அதனை மதிப்பீடு செய்வதாக இவ்வாய்வு அமைகிறது.

### ஆய்வுத் தலைப்பு

**'சங்க இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்'** என்பது ஆய்வுக்குரிய தலைப்பாக அமைகின்றது.

### ஆய்வு நோக்கம்

பழைமை போற்றும் சங்க இலக்கியப் படைப்புகள் பண்டைக் கால மனித சமுதாயத்தைத் தாங்கிநிற்கும் தூண்களாகும். அத்தகைய மனித சமுதாயம் மாண்புற்றும், நெறிப்பட்டும் வாழ்ந்ததற்குச் சங்ககால மன்னராட்சிமுறை இன்றியமையாக் காரணமாக அமைந்தது. அத்தகைய மன்னராட்சியில் பல மன்னர்கள் வீரத்திலும் பண்புநலன்களிலும் மேம்பட்டும் சிலர் அதிலிருந்து விலகியும் அரசாட்சி புரிந்துள்ளனர்.

இத்தகைய வரலாற்றுப் பதிவுகளின் வழியாகத் தமிழ் மரபை வாழவைத்துக் கொண்டிருக்கும் பழந்தமிழ் இலக்கியங்களின் தனிச்சிறப்பை எடுத்துரைப்பதும் வரலாற்றுத்துறை அடிப்படையில் பழங்காலத்தை ஆண்ட மன்னர்கள் பற்றிய குறிப்புகளை இலக்கியச் சான்றுகளாகப் பதிவுசெய்வதும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

**கருதுகோள்**

எண்ணற்ற கருத்துச் செறிவுகளின் களஞ்சியமாகத் திகழும் சங்க இலக்கியங்களில் போற்றிப் பாதுகாக்க வேண்டிய வரலாற்றுப் பதிவுகள் பொதிந்துகிடக்கின்றன என்பது கருதுகோளாகக் கொள்ளப்பட்டது. இக்கருதுகோளின்படியே தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடத்தக்க வரலாற்றுப் பதிவுகளைக் கண்டறிந்து நிறுவப்பெற்றுள்ளன. இலக்கியச் சான்றுகளாகப் பின்வரும் ஆய்வுலகிற்குப் பயன்படும் வண்ணம் பதிவு செய்யப் பெற்றுள்ளது.

**ஆய்வு எல்லை**

'சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்கள்' ஆய்வு எல்லையாக அமைகின்றன.

**முன் ஆய்வுகள்**

பழந்தமிழ் இலக்கியமான சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பெற்ற வரலாறுகள் குறித்தும் அவ்வக்கால மன்னர்களின் மறவுணர்வுகள் மற்றும் மாண்புகள் குறித்தும் சில ஆய்வுகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. அத்தகைய ஆய்வுகள் முன்னாய்வுகளாக ஆய்வுக்குப் பயன்படுத்திக்கொள்ளப்பட்டன. அவை பின்வருமாறு:

1. கி.பாண்டுரங்கன், பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும், முனைவர்பட்ட ஆய்வேடு, 1983.
2. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள், முனைவர்பட்ட ஆய்வேடு, 1984.
3. அரங்க இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், முனைவர்பட்ட ஆய்வேடு, 1987.
4. கி.கீதா, சங்க இலக்கியத்தில் வரலாற்றுக் கூறுகள், முனைவர்பட்ட ஆய்வேடு, 2004.

5. ப.இலட்சுமி, பழந்தமிழ்போர் மறவர்தம் புறவாழ்வும் அகவாழ்வும், முனைவர்பட்ட ஆய்வேடு, 2008.

6. சு.முத்தையா, சங்க இலக்கியத்தில் மறவர்கள், ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு, 1977.

7. சி.பாலசுப்பிரமணியன், நற்றிணையில் வரலாற்றுச் செய்திகள், ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு, 1979.

8. மு.கவிதா, குறுந்தொகையில் வரலாற்றுச் செய்திகள், ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு, 2007.

9. ச.கல்பனா, புறநானூற்றில் புலப்படும் சங்ககால போர் நெறிகள், ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு, 2008.

## ஆய்வு அணுகுமுறை

'வரலாறு' குறித்த பொருண்மையை நிகண்டுகள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள், திறனாய்வாளர்களின் கருத்துகள் போன்றவற்றை விளக்கிவரைய விளக்கவியல் அணுகுமுறையும், தோற்றம் முதல் ஆராய்வதற்கு வரலாற்றியல் அணுகுமுறையும், சமூக நோக்கில் ஆராய சமூகவியல் அணுகுமுறையும், பண்டைய காலத்து மன்னர்களின் ஆட்சிமுறையினையும் வரலாற்றுப் பதிவுகளையும் மதிப்பீடு செய்யும் முகமாக மதிப்பீட்டாய்வு அணுகுமுறையும் இவ்வாய்வின் அணுகுமுறைகளாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

## முதன்மைச் சான்றாதாரங்கள்

எஸ்.மர்ரேராஜம் பதிப்பினை முதன்மையாகக் கொண்டு 2003 இல் என்சிபிஎச் இன் வழியாக வெளியிடப்பெற்ற தொகைநூல்கள் இவ்வாய்வின் முதன்மைச் சான்றுகளாக அமைந்துள்ளன.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

இவ்வாய்வு தொடர்பான திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், கல்வெட்டுக்கள் போன்றவை துணைமைச் சான்றுகளாக அமைந்துள்ளன.

**இயல் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்களாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளன. அவை,

1. வரலாறு : விளக்கமும் பதிவுப் பின்புலமும்
2. அக இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்
3. புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்
4. அகப்புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்
5. வரலாற்றுப் பதிவுகள் ஒரு மதிப்பீடு

என்பனவாகும்.

**இயல் விளக்கம்**

'வரலாறு:விளக்கமும் பதிவுப் பின்புலமும்' எனும் முதலாமியலில் வரலாற்றுக்கான விளக்கம், வரலாறு குறித்து தமிழ் அகராதிகள், கலைக் களஞ்சியங்கள், ஆங்கில அகராதிகள் தரும் விளக்கமும், தமிழ் மற்றும் மேலைநாட்டு அறிஞர்கள் தரும் வரலாறு குறித்த வரையறைகளும் தொகுத்துரைக்கப் பெற்றுள்ளன. மேலும் இவ்வரலாறு இலக்கியத்தில் பதிவுசெய்ததற்கானப் பின்புலத்தினையும் எடுத்துரைப்பதாக இவ்வியல் அமைந்துள்ளன.

'அக இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்' எனும் இரண்டாமியலில் நற்றிணையில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் ஏழு இடங்களிலும், சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 11 இடங்களிலும், பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 10 இடங்களிலும், குறுநில மன்னர்கள் குறித்த

வரலாற்றுப் பதிவுகள் 39 இடங்களிலும், குறுந்தொகையில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் மூன்று இடங்களிலும், சோழர் குறித்த வரலாற்றுப் பதிவு ஓர் இடத்திலும், பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவு ஓர் இடத்திலும், குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 26 இடங்களிலும், ஐங்குறுநூற்றில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவு ஓர் இடத்திலும், சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் இரண்டு இடங்களிலும், பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் மூன்று இடங்களிலும், குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 12 இடங்களிலும், கலித்தொகையில் பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் மூன்று இடங்களிலும், அகநானூற்றில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 32 இடங்களிலும், சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 27 இடங்களிலும், பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 29 இடங்களிலும், குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 165 இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தும் மூவேந்தர்கள் மற்றும் குறுநில மன்னர்களின் வீரம், புகழ், கொடை என மூன்று பகுதிகளாகப் பகுத்து விளக்கப் பெற்றுள்ளன. மேலும் இப்பதிவுகள் அனைத்தும் அகரநிரல் படுத்தி பின்னிணைப்பாக இணைக்கப் பெற்றுள்ளது.

'புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்' எனும் மூன்றாமியலில் பதிற்றுப்பத்தில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 84 இடங்களிலும், புறநானூற்றில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 28 இடங்களிலும், சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 74 இடங்களிலும், பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 39 இடங்களிலும், குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 182 இடங்களிலும் பதிவுசெய்யப்பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தும் மூவேந்தர்கள் மற்றும் குறுநில மன்னர்களின் வீரம், புகழ், கொடை என மூன்று பகுதியாகப் பகுத்து விளக்கப்பெற்றுள்ளன. மேலும் இப்பதிவுகள் அனைத்தும் அகரநிரல் படுத்தி பின்னிணைப்பாக இணைக்கப் பெற்றுள்ளன.

‘அகப்புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்’ எனும் நான்காமியலில் பரிபாடலில் பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் வையைப்பாடலில் ஏழு இடங்களிலும், மதுரைப் பாடலில் ஏழு இடங்களிலும், பரிபாடல் திரட்டில் இரண்டு இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தும் பாண்டியனின் வீரம், கொடை என இரண்டு பகுதியாகப் பகுத்து விளக்கப் பெற்றுள்ளன. மேலும் இப்பதிவுகள் அனைத்தும் அகரநிரல் படுத்தி பின்னிணைப்பாக இணைக்கப் பெற்றுள்ளன.

‘வரலாற்றுப் பதிவுகள் ஒரு மதிப்பீடு’ எனும் ஐந்தாமியலில் தொகைநூலான அக இலக்கியத்தில் சேர, சோழ, பாண்டியர் மற்றும் குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள், புற இலக்கியத்தில் சேர, சோழ, பாண்டியர் மற்றும் குறுநில மன்னர்களின் வரலாற்றுப் பதிவுகள் ஆகியன கண்டறியப்பெற்று மதிப்பீடு செய்யப் பெற்றுள்ளன. அகம் மற்றும் புற இலக்கியங்களில் மூவேந்தர்களைக் காட்டிலும் குறுநில மன்னர்களின் வரலாற்றுப் பதிவுகள் அதிகமாகப் பதிவுசெய்யப் பெற்றிருப்பதால் அதற்கானப் பின்புலமும் விளக்கப் பெற்றுள்ளன. மேற்குறித்த வரலாற்றுப் பதிவுகளை நோக்குங்கால் மூவேந்தர்களைக் காட்டிலும் குறுநில மன்னர்களின் பதிவுகள் அதிகமாகப் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இவற்றிலிருந்து மூவேந்தர்களுக்கும், புலவர்களுக்குமான உறவுநிலையைக் காட்டிலும் குறுநில மன்னர்களுக்கும் புலவர்களுக்குமான உறவுநிலை இணக்கமான நிலையில் இருந்திருக்கின்றது என்பது தெளிவாகின்றன.

ஆய்வில் கண்டறியப்பெற்ற முடிவுகள் முடிவுரையில் கொடுக்கப் பட்டுள்ளன. ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலாக இணைக்கப் பெற்றுள்ளன. மேலும் ஆய்வுத் தரவுகள் அட்டவணை படுத்தப் பெற்று பின்னிணைப்பாக இணைக்கப் பெற்றுள்ளன.

# இயல் ஒன்று

# வரலாறு : விளக்கமும் பதிவுப் பின்புலமும்

மனித இனத்தின் தொடக்கக் காலம் தொடங்கி இன்று வரை அவரவர் வந்த வழியினை, அடையாளத்தினை, இருப்பினை, பின்புலத்தினை அறிவது வரலாறு. இவ்வரலாறு ஏட்டில் உருப்பெறத் தொடங்கிய காலம் முதல் இன்றுவரை பல்வேறு மாற்றங்களையும் மரபுகளையும் கடந்து வந்துள்ளது. இத்தகு வரலாறு குறித்து அறிஞர் பெருமக்கள் பல்வேறு விளக்கங்களைத் தந்துள்ளனர். இவ்வரலாற்றைச் சங்கப் புலவர்கள் பழந்தமிழ் இலக்கியத்தில் பதிவு செய்ததற்கான பின்புலத்தினை எடுத்துரைக்கும் முகமாக இவ்வியல் அமைகின்றது.

## வரலாறு : விளக்கம்

முன்நிகழ்ந்த நிகழ்வுகளைக் கோவைப்பட அமைத்து அவற்றின் தன்மையையும் அவற்றை நிகழ்த்தியவரின் தன்மையையும் ஆராய்ந்து மதிப்பிட்டு அந்நிகழ்ச்சிகளுக்கு இடையே காணக்கூடிய காரணகாரியத் தொடர்பை எடுத்து விளக்கிக் கற்போர் களிப்பும் பயனும் எய்துமாறு பதிவுசெய்யப்பெறுவது வரலாறு. இவ்வரலாறு (Historia) என்னும் சொல் கிரேக்க மொழியிலிருந்து உருவானதாகும். "சட்டத்துறை பற்றிய பூசலில் சான்றுகளை ஆய்வு செய்வதை ஹோமர் (Homer) வரலாறு என்னும் தொடரால் குறிப்பிட்டார்."[1]

## வரலாறு : தமிழ் அகராதிகள், களஞ்சியங்கள் தரும் விளக்கம்

இன்று நிகழ்ந்து நாளைய வரலாறாக உருப்பெறும் ஒரு நிகழ்விற்கு அகராதிகள் பல விளக்கங்கள் தந்துள்ளன. வரலாறு எனும் சொல்லுக்கு யாழ்ப்பாணர் அகராதி "ஒழுங்கு, மூலம்"[2] எனப் பொருள் தந்துள்ளது.

நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதியும் "ஒழுங்கு, மூலம்"[3] என வரலாறுக்குப் பொருள் தருகின்றது.

வரலாறு எனும் சொல்லுக்கு "ஒழுங்கு, மூலம்"[4] என இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதியும் பொருள் தருகின்றது.

"சங்கதி, மூலம்"[5] எனப் பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி பொருள் தருகின்றது.

"வரலாறு எனும் சொல்லுக்கு (Order of events) நிகழ்ச்சிமுறை, (History) சரித்திரம், (Antecedents) பூர்வ சரித்திரம், (Circumstances) சங்கதி, (Details) விவரம், (Meansdevice) உபாயம்"[6] என்று பல பொருள்களைத் தருகின்றது (Tamil Lexicon) தமிழ் லெக்சிகன்.

"ஒழுங்கு, மூலம், உபாயம், உதாரணம், வமிசாவழி, வரலாற்று முறைமை, பரம்பரையாகக் கையாளப்படும் அடிப்படை வழக்கு"[7] எனப் பல பொருள்களைத் தருகின்றது மதுரைத் தமிழ்ப் பெயரகராதி.

வரலாறு எனும் சொல்லுக்கு "சரித்திரம்"[8] எனப் பொருள் தருகின்றது செந்தமிழ் அகராதி.

"நிகழ்ச்சி முறை, சரித்திரம், பூர்வ சரித்திரம், சங்கதி, விபரம், உபாயம், உதாரணம்"[9] எனப் பல பொருள்களைச் சுட்டுகின்றது தமிழ்ப் பேரகராதி.

"கதை, விவரம், சரித்திரம், வருதலின் வழி வரலாறு"[10] என்கிறது கோனார் தமிழ் அகராதி.

வரலாறு எனும் சொல்லுக்குச் "சரித்திரம் (History) பண்டைய வரலாறு (arncient history) இடைக்கால வரலாறு (medium history), வாழ்க்கை வரலாறு

(biography), தன்வாழ்க்கை வரலாறு (autobiography), வரலாறு காணாக் கூட்டம் (unprecedented crowd) என்கிறது"[11] மாணவர் மொழியாக்க அகராதி.

"ஒரு நாட்டின் அல்லது உலகத்தின் அரசியல் சமூக பொருளாதாரத்துறைகளில் நடைபெற்ற நிகழ்ச்சிகளையும் அவற்றின் காரணங்களையும் விளைவுகளையும் கால அடிப்படையில் அறியும் படிப்பு சரித்திரம்"[12] என்கிறது க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி.

வரலாறு என்பதற்குச் "சரித்திரம்"[13] என்று பொருள் தருகிறது நர்மதாவின் தமிழ் அகராதி.

"சரித்திரம், முன்வரலாறு, நிகழ்ச்சிமுறை, செய்தி, விவரம், ஒழுங்கு, வழிவகை, எடுத்துக்காட்டு"[14] என வரலாறு எனும் சொல்லுக்குப் பலபொருள்களைத் தருகின்றது மெய்யப்பன் தமிழ் அகராதி.

கௌரா தமிழ் அகராதி, வரலாறு எனும் சொல்லுக்கு "ஒழுங்கு, மூலம், சரித்திரம்"[15] எனப் பல பொருள் தருகின்றது.

"இக்காலத்தில் வரலாறு என்னும் சொல் மனிதர்கள் தங்கள் சமூக வாழ்க்கையில் நாளடைவில் நடத்திவந்த எல்லாக் காரியங்களையும் குறிக்கும். முன்போல் இன்றும் வரலாற்று நூல்களில் அரச பரம்பரைகளும் அவைகளுக்குள் ஏற்பட்ட போராட்டங்களும் மிக விரிவாக எடுத்துக் கூறப்படுகின்றன. ஆயினும் அம்மட்டிலும் வரலாறு அடங்கிவிடாது. உற்று நோக்கினால் வரலாற்றில் அடங்கும் விஷயங்களுக்கு எல்லையேயில்லை. மனிதர்கள் செய்துவந்த ஒவ்வொரு செயலும் மனத்தால் கருதிய ஒவ்வோர் எண்ணமும்கூட, நாம் அவற்றைச் சரிவரத் தெரிந்துகொள்வதற்கு வேண்டிய ஆதாரங்கள் இருந்தால் வரலாற்றிற்கு ஏற்ற பகுதிகளாக அமைக்க முடியும். அரசியல் திட்டங்களும், கோட்பாடுகளும், மதக் கொள்கைகளும், வேதாந்த









சித்தாந்தங்களும், விவசாயம், கைத்தொழில், வாணிகம் முதலியவைகளும் மனிதர்களுடைய ஊண், உடை, நடத்தை, விளையாட்டு முறைகள் முதலியவை எல்லாம் வரலாற்றில் அடங்கும்"[16] என்கிறது கலைக்களஞ்சியம்.

"வரலாறு எனும் சொல்லுக்குச் சரித்திரம், சரிதம், சரிதை, பூர்வீக சரித்திரம், விருத்தாந்தம், வாழ்க்கை வரலாறு, ஜீவிதசரித்திரம், சுயவரலாறு, சுயசரித்திரம், சுயசரிதம், சுய சரிதை, வண்டவாளம் எனப் பல பொருண்மைகளைச் சுட்டுகிறது"[17] தற்காலத் தமிழ்ச்சொற்களஞ்சியம்.

ஒழுங்கு, மூலம், சங்கதி, நிகழ்ச்சிமுறை, சரித்திரம், பூர்வசரித்திரம், விவரம், உபாயம், உதாரணம், வமிசாவலி, வரலாற்றுமுறைமை, பரம்பரையாகக் கையாளப்படும் அடிப்படை வழக்கு, கதை, வருதலின் வழி, பண்டைய வரலாறு, இடைக்கால வரலாறு, வாழ்க்கை வரலாறு, தன் வாழ்க்கை வரலாறு, வரலாறு காணாத கூட்டம்,கால அடிப்படையில் அறியும் படிப்பு, முன் வரலாறு, செய்தி, வழிவகை, எடுத்துக்காட்டு, சரிதை, விருத்தாந்தம், ஜீவித சரித்திரம், சுயவரலாறு, சுயசரித்திரம், சுய சரிதம், சுய சரிதை, வண்டவாளம், அரசியல் திட்டங்களும் கோட்பாடுகளும், மதக்கொள்கைகளும் வேதாந்த சித்தாந்தங்களும், விவசாயம், கைத்தொழில், வாணிகம் முதலியவைகளும் மனிதர்களுடைய உணவு, உடை, நடத்தை, விளையாட்டு முறைகள் முதலியவை எல்லாம் மேற்குறிப்பிட்ட வரலாறு எனும் சொல்லுக்குப் பொருளாக அமைகின்றன.

**வரலாறு : ஆங்கில அகராதிகள் தரும் விளக்கம்**

வரலாறு எனும் சொல்லுக்கு "சங்கதி, ஒன்றுக்கொன்று தொடர்புடைய, விவரம், மூலம், இலக்கணம் அல்லது அறிவியல் ரீதியான வார்த்தைகளைப் பயன்படுத்துதல், பெருளடக்கப் பட்டியல், உள்ளதை

உள்ளபடி கூறுதல்"[18] எனப் பல பொருள் தருகின்றது தமிழ் - ஆங்கிலம் அகராதி.

ஆக்ஸபோர்டு ஆங்கிலஃரெப்ரன்ஸ் அகராதி வரலாறு எனும் சொல்லுககு "முக்கியமான சமூகநிகழ்வுகளை, அவை நடந்த ஆரம்பகாலகட்டம் முதல் இறுதிக் காலகட்டம் வரைத் தொடர்ச்சியாகப் பதிவுசெய்வதாகும்"[19] என்று பொருள் தருகின்றது.

வரலாறு எனும் சொல்லுக்கு "ஆதிகாலம், நடைபெற்ற நாட்கள், பாரம்பரியம், வரலாற்று நிகழ்வுகள், முந்தைய நாட்கள், இறந்த காலம், 2, வாழ்க்கை வரலாற்றுப் பதிவுகள், ஆரம்பம் முதல் இறுதிவரையுள்ள குறிப்புகள், வாய்மொழி வரலாறு, பதிவுகள்"[20] என்று பொருள் தருகின்றது புதிய ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி.

"ஒரு நாட்டின் வளர்ச்சி நிலையை அதன் முந்தையகால நிகழ்வுகளுடன் கணக்கிட்டுப் பதிவுசெய்தல் வரலாறு"[21] என்கிறது லிப்கோ அகராதி.

வரலாறு எனும் சொல்லுக்கு "சரித்திரம், வர்த்தமானம், வரலாறு, இதிகாசம், விவரணம்"[22] எனப் பல பொருள் தருகின்றது பெர்சிவல்ஸ் தமிழ் அகராதி.

"வழித்தடம், வழிமுறை, வரிசைப்படுத்துதல், திட்டமிடுதல், பரம்பரை"[23] எனப் பல பொருள்தருகின்றது தமிழ் - ஆங்கிலம் அகராதி.

வரலாறு எனும் சொல்லுக்கு "தொடர்ச்சி, பதிவுசெய்தல், வாய்மொழி வரலாறு, நிகழ்வுகளின் தொகுப்பு"[24] எனப் பல பொருள் தருகின்றது.

மேற்குறித்த ஆங்கில அகராதிகள் வரலாறு எனும் சொல்லுக்கு சங்கதி, ஒன்றுக்கொன்று தொடர்புடைய, விவரம், மூலம், இலக்கணம் அல்லது அறிவயல் ரீதியான வார்த்தைகளைப் பயன்படுத்துதல், பொருளடக்கப் பட்டியல், உள்ளதை உள்ளபடி கூறுதல், முக்கியமான சமூக நிகழ்வுகளை அவை நடந்த ஆரம்ப காலகட்டம் முதல் இறுதிக் காலகட்டம் வரைத் தொடர்ச்சியாக பதிவுசெய்தல், ஆதிகாலம், நடைபெற்ற நாட்கள், பாரம்பரியம், வரலாற்று நிகழ்வுகள், முந்தைய நாட்கள், இறந்தகாலம், வாழ்க்கை வரலாற்றுப் பதிவுகள், ஆரம்பம் முதல் இறுதிவரையுள்ள குறிப்புகள், வாய்மொழி வரலாறு, பதிவுகள், முந்தைய நிகழ்வுகளைப் பதிவுசெய்தல், சரித்திரம், வர்த்தமானம், வரலாறு, இதிகாசம், விவரணம், வழித்தடம், வழிமுறை, வரிசைப்படுத்துதல், திட்டமிடல், பரம்பரை என்றெல்லாம் பொருள் தருகின்றன.

**வரலாறு பற்றித் திறனாய்வாளர்களின் விளக்கம்**

இருபதாம் நூற்றாண்டில் உருவான மறுமலர்ச்சிச் சிந்தனைகள்தான் வரலாற்றைப் புதிய நோக்கில் ஆராய முற்பட்டன. பழைய சிந்தனைகள் வரலாற்றை நிகழ்ச்சிகளின் தொகுப்பாகவும், மன்னர்களின் பட்டியலாகவும் பார்த்தன.

ஏன்? எதற்கு? எப்படி? எங்கே? எப்போது? யார்? யாரால்? யாரை? போன்ற வினாக்களைத் தொடுக்கும்போது விடை மட்டுமல்லாது வரலாறும் பிறக்கும். அந்த வகையில் இவ்வினாக்களுக்கான விடைகளை அடிப்படைச் சான்றுகளாக வைத்துக்கொண்டு வரலாற்றினை விளக்க முற்படும் போது திறனாய்வாளர்களின் கருத்துகள் முக்கியத்துவம் பெறுவது மட்டுமல்லாமல் வலிமை சேர்க்கும் சான்றுகளாகவும் அமைகின்றன.

"வரலாறு என்பது முடியுடை மூவேந்தரின் சிறப்பினையும் அவர்தம் ஆட்சியின் மாட்சியினையும் மட்டும் பகர்வது அன்று. மக்களின் பழக்க வழக்கங்களையும் பண்பாட்டுக் கூறுகளையும் எடுத்தியம்புவது"[25] என்கிறார் தி.இராசகோபாலன்.

"இறந்த காலத்தை நிகழ்காலத்தில் நினைவுகூர்ந்து எதிர்காலத்தைச் செம்மைப்படுத்தும் பணியை நிறைவேற்றும் பொறுப்பு வரலாற்றிற் குரியது"[26] என்கிறார் ச.சிவகாமி.

ஓர் இனமக்களின் "வரலாறு என்பது போர்க்களத்தோடும் அதனில் நின்று கொண்டு இருந்த மன்னர்களின் புயபல பராக்கிரமத்தோடும் ஒடுங்கி முடிந்துவிடுவதில்லை. மன்னர்களையும் அவர்களின் ஆட்சி நலத்தையும் பண்பு நலத்தையும் அவர்கள் காலத்து மற்றத் துறையினரின் நடவடிக்கைகளையும் ஒருங்கே சொல்வதுதான் வரலாறு"[27] என்கிறார் சாலை இளந்திரையன்.

"மனிதக் கூட்டம் சென்ற காலம், இடைக்காலம், இன்றைய காலத்தில் தாம் எதிர்கொண்ட பிரச்சினைகளுக்கும் சவால்களுக்கும் முகம்கொடுத்து வாழ்ந்த, வாழ்கின்ற முறைமையினைச் சரியானபடி தருகின்ற ஒரு பயில்நெறி (Discipline) வரலாறு"[28] என்கிறார் சி.மௌனகுரு.

"வரலாறு என்பது கடந்த கால நிகழ்ச்சிகளைத் தொகுத்து உரைப்பது அன்று; கடந்தகால நிகழ்ச்சிகளைக் காண்பதற்கு உரிய தொலைநோக்கியேயாகும்"[29] என்று எஸ்.இராதாகிருட்டிணன் அவர்களின் கருத்தினை மேற்கோள் காட்டுகிறார் க.த.திருநாவுக்கரசு.

"மக்களினம் நினைவுக்கு எட்டாத தொல்பழங்காலத்தில் தொடங்கிய வாழ்க்கைப் பயணத்தில் இன்றுவரை அடைந்துள்ள வெற்றி,

தோல்விகளையும், பெருமை சிறுமைகளையும் வாழ்வு தாழ்வுகளையும் இன்பதுன்பங்களையும் ஏமாற்றங்களையும் சுவையோடு முறையாகக் கூறும் தொடர்கதையே வரலாறு"[30] என்பர் க.த.திருநாவுக்கரசு.

"மனிதன் காட்டில் திரிந்து காய்கனி முதலியன தின்று விலங்குகளிடையே வாழ்ந்து வந்த காலம் முதற்கொண்டு, சமுதாய அறிவைப்பெருக்கிக் கலைகளை வளர்த்துக் கருத்து வகையால் உயர்ந்த நாகரிகத்தை அடைந்த காலம் வரை அவர் பெற்ற அனுபவக் கருவூலமாக விளங்குவதே வரலாறு"[31] என்கிறார் க.த.திருநாவுக்கரசு.

மேலும் "தனிமனிதன் பிறமக்களோடு கொண்ட தொடர்பினையும் ஓர் இனத்தைச் சேர்ந்தமக்கள் வேற்று இனமக்களோடு கொண்ட உறவையும் அவர்கள் தங்களுக்குள் விட்டுக்கொடுத்துப் பொறுமையுடன் வாழ்க்கையை நன்கு அமைத்துக் கொண்டதையும் எடுத்து இயம்புவதே வரலாறு"[32] என்கிறார்.

"மக்களின் வாழ்க்கை கடந்த காலத்தில் எப்படி இருந்தது? என்பதை விளக்க முயலுவதே வரலாறு"[33] உலகில் உள்ள கலைகள் அனைத்தையும் ஈன்றெடுத்துப் பாலூட்டிச் சீராட்டித் தாலாட்டிப் போற்றி வளர்த்த பெருமை வரலாற்றிற்கு உரித்தாகும். இக்காரணத்தினால்தான் அறிவியலின் அன்னை என்று வரலாற்றை அறிஞர்கள் பாராட்டுகின்றனர் என்கிறார் க.த.திருநாவுக்கரசு.

"வரலாறு என்பது ஆள்வோரின் வரலாறாக (அரசுகளின் வரலாறாக) ஓர் ஒற்றைச் சொல்லாடலாக தட்டையானதோர் ஒற்றைத் தடத்தில் தொடர்ந்து செல்லும் ஒன்றாகவே பதிவு செய்யப்பட்டுள்ளது"[34] என்கிறார் பிலவேந்திரன்.

“வரலாறு என்பது அறநூலும் அறிவியல் நூலும் மட்டுமன்றி ஒரு கலைப்படைப்புந்தான்”[35] என்கிறார் சொ.ஞானசம்பந்தன்.

வரலாறு என்பது வெவ்வேறு காலக்கட்டங்களில் நடைபெற்ற அப்பட்டமான உண்மை நிகழ்ச்சிகளை மட்டுமே எடுத்துக்கூறி மக்களின் அறிவுக்கு மட்டுமே விருந்தளிக்கும்”[36] என்பர் தி.இராசகோபாலன்.

“வரலாறு என்பது கடந்த காலத்தை மட்டும் கூறுவதன்று. இன்றைய செய்திகள் கூட நாளைய வரலாறாக மாறிவிடும்.”[37] கடந்தகாலச் செய்திகள் நிகழ்காலத்தில் நிரல்படுத்தப் பெற்று வருங்காலத்திற்கு இலட்சிய வாழ்க்கையை எடுத்தியம்புவதாக வரலாறு இருத்தல் வேண்டும் என்கிறார் இரா.பாலசுப்பிரமணியன்.

“வரலாறு செய்தித் தொகுப்பன்று. சமுதாய மாற்றங்களின் திசைவழியை அறிய உதவும் விஞ்ஞானம்”[38] என்கிறார் நா.வானமாமலை.

சமூக உருவங்களின் பரிணாமத்தையும் சமூகம் அமைக்கப்பட்டிருந்த விதத்தையும் மாறாமல் நிலைத்திருந்த பண்பாட்டுக் கூறுகளின் அளவையும் சமூக மாறுதல்கள் நிகழ்ந்த போது அவற்றின் தன்மைகள் எவை என்பதையும் ஆராய்ந்து நாம் மறுமதிப்பீடு செய்வது அவசியமாகும். இம்மதிப்பீட்டுக்கு வரலாற்றுச் சான்றுகள் மிக முக்கியமான காரணமாக அமைகிறது.

வரலாறு என்பது கால ரீதியான நிகழ்வுகளின் தொகுப்பு என்று ஒற்றைப் பரிமாணமுறையில் புரிந்து கொள்ளப் பட்டிருக்கிறது. இது மட்டும் வரலாறு அல்ல. ஓர் இனம் எவ்வாறு காலங்காலமாக உருவாகிப் பரிணமித்து வந்திருக்கிறது என்பதையும் அப்பரிணாம வளர்ச்சியில் தன்னை அடையாளப்படுத்திக் கொள்ள என்னென்ன காரணங்களை,

செயல்பாடுகளை அவ்வினம் மேற்கொண்டதோ அவற்றையும் வரலாறு என்று நாம் புரிந்துகொள்கிறோம்"[39] என்கிறார் சே.ச.மாற்கு.

உலகில் அநேகமாக எல்லாச் சமூகங்களிலும் மதம், கடவுள், ஆன்மா, கோவில், வழிபாடு, புரோகிதம், சடங்குகள் முதலியவை இல்லாமல் இல்லை. பல்வேறு வரலாற்றுச் சூழலில் இவை தோன்றுகின்றன. அல்லது தோற்றுவிக்கப்படுகின்றன. உயிர்கள் எப்படித் தோன்றின, சூரியன், சந்திரன், இயற்கைப் படிவ மாற்றங்கள் எவ்வாறு இயங்குகின்றன, மனிதப் பிறப்புகள் எவ்வாறு ஏற்படுகின்றன என்ற இக்கேள்விகள் மனிதர்களுக்குக் கிடைத்த அறிவு வெளிச்சம். ஆனால் இதற்கான விடைகள் ஒரே மாதிரியாக இருப்பது சாத்தியமில்லை. வரலாற்றில் அனுபவங்கள் சேரும் பொழுது மாறுபட்ட விடைகள் முரண்பட்ட விளக்கங்கள் ஆகியவையும் எழுகின்றன. தனிவுடைமை, அரசதிகாரம், வர்க்கப்பிரிவுகள் ஆகியவை தம் தேவைகளுக்கு ஒத்த முறையில் இவற்றைத் தமக்கேற்ற வகையில் திரிபுபடுத்துவதற்கும் வாய்ப்புகள் உண்டு. எனவே, வரலாறு என்பது மிகக் கவனமாகவும் நுணுக்கமாகவும் செயற்படுவதால் இதனைத் தனியொரு பயில்துறையாகவே வளர்த்தெடுக்க வேண்டும் என்பர் கா.சிவத்தம்பி.

"வரலாறு என்னும் ஆய்வுத்துறையில் அவ்வரலாற்றினை எழுதுவதற்கு அடித்தளமாக அமையும் நோக்கங்கள், மனப்பாங்குகள், ஆய்வுமுறைகள், அணுகுமுறைகள் என்பனவற்றை, அதாவது வரலாறு எழுதப்படும் முறையை, ஆராய்வதே தனியொரு பயில்துறையாக வளர்ந்துள்ளது. ஆங்கிலத்தில் அதனை "ஹிஸ்ற்றோறியோகிறாஃபி"[40] (Historiography) என்பர்.

"வரலாறு எழுதுபவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட நிகழ்கால மற்றும் எதிர்கால நோக்கம் உண்டு."[41] இந்த நோக்கங்களை உள்ளடக்கி வரலாற்றை அவர்கள் கட்டமைக்கிறார்கள். கல்வெட்டு ஆவணங்கள், இலக்கியங்கள்,

பயணிகளின் குறிப்புகள் போன்றவற்றிலிருந்து கிடைத்த ஆதாரங்களைத் தம் நோக்கங்களுக்கு ஏற்ற முறையில் பொருள்படுத்துகிறார்கள் அல்லது வரலாற்றைக் கட்டமைக்கிறார்கள்.

தமிழர் வரலாறு குறித்து வெளிநாட்டவர் சிலரும் ஆராய்ந்துள்ளனர். கல்வெட்டு ஆய்வறிஞர்கள் சிலரும் விடாமுயற்சியாகத் தம் ஆய்வுகளைத் தொடருகின்றனர். தமிழ் மக்களிடம் இடம்பெற்று வருகின்ற மரபுகள் குறித்தும் பழக்கவழக்கங்கள் குறித்தும் ஆய்வு செய்து வருகின்றார் தொ.பரமசிவம்.

**வரலாறு குறித்துத் தமிழ் அறிஞர்கள் போல் பிற நாட்டு அறிஞர்களும் கருத்துத் தெரிவித்துள்ளனர். அக்கருத்துகள் பின்வருமாறு**

"வரலாறு என்பது கலையும் அறிவியலும் கலந்ததொரு இனிய கலவை என்பது டிரெவெல்யான் (Trevelyan) போன்ற வரலாற்று ஆசிரியர்களின் கருத்தாகும்."[42] இக்கருத்தே பெரும்பாலருக்கும் ஏற்புடையதொன்றாகும் என்கிறார் தி.இராசகோபாலன்.

"கடந்த காலம் என்னும் எல்லையில்லாப் பெருவெளியில் காலத்தச்சன் காட்டியுள்ள அனுபவம் என்னும் மாபெரும் கோபுரமே வரலாறு"[43] (H.W.வான்லூன்). இப்பழம்பெரும் கோபுரத்தின் கொடுமுடியில் ஏறி, அங்கிருந்து அப்பெருவெளியின் முழுத்தோற்றத்தைக் காணமுயல்வது எளிய செயலன்று எனினும் இளைஞர்கள் ஆற்றல் மிக்கவர்கள். அவர்கள் முயன்றால் அப்பெருவளியின் முழுத் தோற்றத்தையும் காணலாம் என்று H.W.வான்லூன் கூற்றினைக் க.த.திருநாவுக்கரசு தம் நூலில் சுட்டிக் காட்டுகின்றார்.

அரிஸ்டாடில் (Aristotle) என்னும் கிரேக்கப் பேரறிஞர் "நிகழ்ந்தது மறுபடி நிகழாது என்பது வரலாற்றின் தன்மை"[44] என்று வரலாற்றின் இயல்புநிலையைச் சுட்டுவார்.

"வீரதீரர்களின் வாழ்க்கை வரலாறுகளின் தொகையே வரலாறு என்பது எமர்சன் (Emerson), கார்லைல் (carlyle) ஆகியோர் கருத்து. பியூரி (J.B.Bury) என்பார் 'அது ஒரு விஞ்ஞான இயல் போன்றது' அவ்வளவே என்கிறார். 'மனிதர் பல்வேறு சுதந்திரங்களுக்காக இடும் இடைவிடாப் போர்தான் வரலாறு எக்காரணத்திற்காகவேனும்' என்றவர் ஆக்டன் பிரபு (Lord Acton), காலிங்வுட் (Colling wood) முதலியோர். அது வரலாற்றாளரின் கற்பனைக் காட்சி என்றனர். பலர் அக்கருத்தை ஏற்றனர். வால்டேர் (voltaire), கிப்பன் (Gibban) என்போர், அது மக்களினத்தின் குற்றம் குறைபாடு ஆகியவற்றின் கதை என்றனர். ஹென்றிபோர்டு (H.Ford) மற்றும் பிரெஞ்சுப் பேரரசர் நெப்போலியன் (Napoleon) என்போர் வரலாற்றைப் பொய்யின் பெரும்பொதி என்றனர். ஈ.எச்.கார் (E.H.Carr) அது நிகழ்ச்சித் தொகுதிக்குப் பொருள்காண்பது, உரை கூறுவது (interpretation) என்றார். அஃதாவது வரலாற்றிற்கு மொத்தமாகப் பார்க்குமிடத்து ஒரு பொருள் உண்டு என்று அவர் கருதியது போதரும். ஆதலால்தான் அவர் வரலாற்றிற்குக் கார்ல்மார்க்ஸ் (Karlmarx) என்பாரைப் போலப் பொருள் (Meaning and not wealth) தேடி அது வரலாறு என்ன கூறுகிறது என்பதைக் கண்டுபிடித்துரைத்தல் (interpretation) என்றார். இவையெல்லாம் அவரவர்கள் வாழ்க்கை அனுபவ வாயிலாகவும், கற்ற கல்வி, படித்த நூல்கள் முதலியவற்றின் தன்மையாலும் தாக்கத்தாலும் பெறப்பட்டவை."[45]

“வரலாறு கற்பனைக் கதையன்று, உண்மை என்று நம்பத்தக்க சான்றுகளின் உதவிகொண்டு நாம் ஏற்றுக்கொள்ளும் ஒருசெய்தித் தொகை”[46] என்கிறார் ஈ.எச்.கார்.

“பொது நோக்கமாகப் பார்த்தால் இதுகாறும் நடந்தவை எல்லாம் வரலாறு”[47] என்ற ஹென்றி ஜான்சன் (Henry Johnson) கருத்தினை மேற்கோள் கட்டியுள்ளார் ஆர்.திருஞானசம்பந்தம்.

“மனித இனம் கூறியது, செயலாற்றியவை, அவற்றிற்கு மேலாக அவர்கள் நினைத்த எண்ணங்கள் யாவுமே வரலாறு”[48] என்பர் மெயித்லாந்து (Maitland).

“குற்றங்களையும் இடையூறுகளையும் வருணிப்பது வரலாறு” என்று வால்டேர் (Voltaire) கூறுகிறார். மனித இனத்தின் குற்றச்செயல்கள், தவறுகள், இடையூறுகள் போன்றவற்றின் பதிவேடுதான் வரலாறு”[49] என்று கிப்பன் (Gibbon) கூறியுள்ளார்.

“நாட்டு மக்களைப் பற்றியும் வரலாற்றில் கூறவேண்டுமென்றும், வரலாற்றைச் சமூகமயமாக்க வேண்டுமென்றும் கூறுவர்”[50] ரூஸோ (Rouseau) (கி.பி.1712-78).

மேற்குறித்த பதிவுகளை நுணுகிப் பார்க்கும்போது வரலாற்றின் பொருள் விரிந்தது என்பதும், அது காலந்தோறும் விரிந்து வளர்ந்து வருகின்றது என்பதும் தெளிவாகின்றது. இதன்வழி வரலாறு நிலையானது அல்ல. காலமாற்றத்திற்கு ஏற்பவும் மக்கள் மன மாற்றத்திற்கு ஏற்பவும் மாறக்கூடியது என்ற கருத்து முன்வைக்கப்படுகின்றது.

**வரலாறு : இலக்கியத்தில் பதிவுசெய்ததற்கான பின்புலம்**

படைப்பாளி தான் வாழ்ந்த காலக்கட்டத்தில் நிகழ்ந்த அல்லது பார்த்த அல்லது கேட்ட வரலாற்று நிகழ்வினை இலக்கியத்தில் ஏன் பதிவுசெய்தான், அப்பதிவிற்கான பின்புலம் என்னவென்பதை ஆராயும் முகமாக இப்பகுதி அமைகின்றது.

சங்க இலக்கியக் காலக்கட்டம் முதற்கொண்டு புலவர் மரபு அல்லது படைப்பாளி தான் படைக்கக் கூடிய படைப்பில் வரலாற்றினைத் தனித்துவப் படுத்தியும் பிற இலக்கியத்தோடும் வரலாற்று நிகழ்வினை இணைத்தும் படைக்கும் பழக்கம் இருந்திருக்கின்றது. எனவே "இந்தியர்கள் வரலாற்று உணர்வில்லாதவர்கள், அவர்கள் தங்களது வரலாற்று ஆவணங்களைப் பாதுகாத்து வைக்கவில்லை என்பது ஒரு பொதுஜன நம்பிக்கை."[51] இந்தியர்கள் தங்களது ஆவணங்களைப் பாதுகாத்துத்தான் வைத்திருக்கிறார்கள். எவை முக்கியத்துவமானவை எனப் பண்டைய இந்தியர்கள் கருதினார்களோ அவற்றையெல்லாம் காப்பாற்றி வைத்துள்ளார்கள். கொடி வழிப்பட்டியல்கள், கோயிலொழுகுகள், விகாரை வரலாறுகள் போன்ற சில சமய நிறுவனங்களின் சரித்திரங்கள் இவையெல்லாம் இன்று கிடைக்கின்றன. இவை வரலாற்று மரபின் மூலப்பகுதிகள்தாம் என்பர் ரொமிலாதாப்பர்.

"எழுத்து மொழி ஆவணங்கள் வரலாற்றுக்கு மிக முக்கியமான சான்று. எழுத்துமொழியின் வரலாறு நினைவுகளை, கடந்தகால எச்சங்களை, நடந்து முடிந்தவைகளை அடிப்படையாகக் கொண்டது. எழுத்தின் நிலைத்த தன்மை, மீண்டும் பார்க்க அது தரும் வாய்ப்பு"[52] என்கிறார் ப.மருதநாயகம். இத்தகைய எழுத்துமொழி உருப்பெறக் காரணகாரியமாக இருந்தவை வாய்மொழிப் பாடல்கள். இவ்வாய்மொழிப் பாடல்களைப் பாடிவந்தவர்கள்

பாணர்மரபினைச் சேர்ந்தவர்கள். 'இப்பாணர் மரபின் சத்தான பகுதிகளைச் செறித்துக் கொண்டுதான் புலவர் மரபு தோற்றம் பெற்றது' என்பர் பிரபஞ்சன். இம்மரபின் வழியாகத்தான் சங்க இலக்கியங்கள் ஓலைச் சுவடியில் எழுத்துருக்கொண்டு சங்கத் தமிழரின் வரலாற்றுப் பேழையாகக் காட்சியளிக்கின்றன.

வாய்மொழியாக வழங்கும் தரவுகளைப் பயன்படுத்தி வரலாறு எழுதும் முறை மிகவும் பழைமையான ஒன்று. ஏதென்ஸ் மற்றும் ஸ்பார்ட்டா குடியரசுகளுக்கிடையே கி.மு.431 தொடங்கி கி.மு.404 முடிய நிகழ்ந்த பெலப்பனீசியப் போர் குறித்துத் தூஸிடைஸ் (1960-22) என்ற கிரேக்க வரலாற்று ஆசிரியர் பெலப்பனீசியப் போர் என்ற நூலை எழுதியுள்ளார். அந்நூலை எழுதுவதற்கு வாய்மொழிச் சான்றுகளைப் பயன்படுத்தியுள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார். இக்குறிப்பின்படி ஒரு நாட்டின் வரலாற்றை நிர்ணயிப்பதில் வாய்மொழிச் சான்றுகளும் முக்கிய இடத்தினைப் பெறுகின்றன என்பது தெளிவாகின்றது.

இத்தகைய வாய்மொழிப் பாடல்களிலிருந்து பரிணாம வளர்ச்சி பெற்ற சங்க இலக்கியத்தில் அகம் காதல் குறித்துப் பேசினாலும் அவற்றினூடே புறநிகழ்வுகளும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. புறம் மூவேந்தர்கள், குறுநில மன்னர்கள், இன்னபிறரின் வரலாறுகள் குறித்தும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகளின் பின்புலத்தினை இருநிலைகளில் பகுத்து விளக்க முடிகிறது.

1. அகப்பாடல்களில் வரலாற்றுப் பதிவுகள்
2. புறப்பாடல்களில் வரலாற்றுப் பதிவுகள்.

## அகப்பாடல்களில் வரலாற்றுப் பதிவுகள்

சங்க இலக்கிய அகத்திணைக் கூறுகளில் வரலாற்று நிகழ்வு பற்றிய பதிவுகள் நேரடியாக மட்டுமல்லாது பல இடங்களில் உவமையாகவும், உள்ளுறையாகவும் பதிவுசெய்யப்பெற்றிருக்கின்றன. இப்பதிவுகள் செவிலிக் கூற்றாகவோ, தோழி கூற்றாகவோ தலைவி கூற்றாகவோ இருக்கலாம். இக்கூற்றுகளின் வாயிலாகத் தான் பார்த்த அல்லது கேட்ட வரலாற்று நிகழ்வுகளைப் பலரும் அறியும் வண்ணம் புலவர்கள் பதிவு செய்திருக்கின்றனர்.

அகமாந்தர்கள் தங்கள் அக உணர்வுகளை வெளிப்படுத்தும் நிலையிலும் தான் சார்ந்த அல்லது தன்னைச் சார்ந்த உறவுகளின் மனநிலையை, செயல்நிலையை வெளிப்படுத்தும் நிலையிலும் புறநிகழ்வுகளை அதாவது வரலாற்றுச் செய்திகளை ஒப்பீட்டு நோக்கில் பதிவுசெய்துள்ள திறத்தினை அறிய முடிகின்றது.

## புறப்பாடல்களில் வரலாற்றுப் பதிவுகள்

சங்க இலக்கியப் புறப்பாடல் முறைமையில் உள்ள சுவை அல்லது அதனுடைய வீர அம்சங்கள் வரலாற்றைப் பதிவுசெய்யும் கவித்துவம் என்ற நிலையில் முக்கியத்துவமானதாக நீண்ட நெடுங்காலமாக இருந்து வருகிறது. புற இலக்கியத்தில் ஆட்சியாளர்களுக்குப் புலவர்கள் சில கருத்துக்களை அறிவுறுத்திக் கூறுகின்ற பண்புகள் காணப்படுகின்றன. சங்க இலக்கியப் புறத்திணைக் கூறுகளில் வரலாற்றுப் பதிவுகள் நேரடியாகவும் மறைமுகமாகவும் பல இடங்களில் உவமையாகவும் உள்ளுறையாகவும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அரசர்களைப் புகழ்வதும், புகழ்கின்ற அரசனிடம் உதவி கேட்பதும், தங்களுடைய சுக துக்கங்களை வெளிப்படுத்திக் கொள்வதும் புறத்தினுடைய நுண்ணிய அம்சங்களாகும்.

ஏனென்றால் அது வரலாற்று இருப்பைச் சார்ந்தது. இவ்வரலாற்று இருப்பைப் பிற மன்னர் வரலாற்றோடு ஒப்புமைப்படுத்தி முன்னைய வரலாற்று நிகழ்வினை நினைவுகூறும் வண்ணம் புற இலக்கியங்கள் கட்டமைக்கப் பெற்றுள்ளன.

மேற்குறிப்பிட்ட அக, புறக் கட்டமைப்புத் தளம் மிக முக்கியமானதாகும். அது மனித உறவுகளை அல்லது மனித நடவடிக்கைகளை விளக்குவதற்கான ஒரு இலக்கியத்தளம். இவ்விலக்கியத்தளத்தில் வரலாறு பதிவு செய்வதற்கான பின்புலத்தினைப் பின்வரும் ஐந்து நிலைகளில் பகுத்துவிளக்க முடிகிறது.

1. உவமையாக
2. வாசகனின் உயர் சிந்தனைக்காக
3. உயர்வு நவிற்சியாக
4. கூடுதல் வலிமைக்காக
5. வரலாற்றுணர்வை அறிவதற்காக

மேற்குறிப்பிட்ட ஐந்து கருத்துப் புலப்பாட்டு நெறிகளும் உவமை (உவமையாக) எனும் உத்திக்குள் ஏனைய நான்கும் அடங்கும் என்றாலும் இடம்பொருள் விளக்கத்திற்காகவும் நுண்ணிய வேறுபாட்டிற்காகவும் தனித்தனியாக விளக்கப் பெறுகின்றன.

**உவமையாக**

உவமை என்பது கவிஞனின் அனுபவப் பொருளாகும். பொருள் என்பது கவிஞன் காணும் புதிய பொருளாகும். கவிஞன் ஏற்கனவே கண்டு வைத்தபொருளைப் புதிதாகக் காணும் பொருளோடு பொருத்திப் பார்த்து அப்பொருளின் உயர்வு, தாழ்வுகளை அளந்து அறிவிக்கின்றான். பொதுவாகப் பொருளின் சிறப்பை உணர்த்துவதற்கு உவமை கையாளப்படுகின்றது.

சங்க காலப் புலவர்கள் தாங்கள் பிறந்த மண்ணின் பெருமையையும், வளப்பத்தையும் மட்டுமின்றித் தம்மைப் போற்றிய புரவலர்களின் புகழையும் தகுந்த இடத்தில் நிலைநாட்ட வேண்டும் என்ற நன்றியுள்ளம் கொண்டவர்கள். அவர்கள் காலத்தில் நடந்த உள்ளம் கவர்ந்த வரலாற்று நிகழ்வுகளைப் பதிவுசெய்யும் நோக்கத்துடன் மன்னனை, அவனது நாட்டை, நகரை, மலையை, காட்டை, வீரத்தை, புகழை, கொடையை வாய்ப்புக் கிட்டும் போதெல்லாம் உவமை வாயிலாகச் சங்க இலக்கியத்தில் போற்றிப் பதிவுசெய்துள்ளனர்.

சங்கத் தமிழ் மக்களின் வாழ்வியல் வரலாற்றோடுப் பின்னிப் பிணைந்திருந்தமையால் புலவர்கள் அவர்களின் ஒழுகலாறுகளை வரலாற்று உவமைகொண்டு அழகுறப் புனைந்தனர். ஏனெனில் சங்ககால மக்களின் வாழ்வியலைத் தெளிவுறுத்துவதற்கு உவமையே சிறந்த கருவியெனப் புலவர்கள் அறிந்திருந்தனர்.

களவுக்காலத்தில் தலைவனைப் பிரிந்து தலைவி வருந்துகிறாள். வருத்தமுறும் தலைவியைக் கண்ட தோழி, இரவு நேரத்தில் தலைவியைக் காணவரும் தலைவன் முன் எதிர்ப்பட்டு பகலிலும், இரவிலும் வந்து தலைவியைப் பார்த்துவிட்டுப் பிரிந்து விடுகின்றாய். நீ பிரிந்து சென்றதும் தலைவி பெரிதும் வருந்துகின்றாள். இவள் வருத்தம் நீடிக்குமாயின் ஒருநாள் இறப்பது உறுதி என்பதை,

“இழைஅணி நெடுந்தேர் களிறொடு என்றும்
மழைசுரந் தன்ன ஈகை, வண்மகிழ்,
கழல்தொடித் தடக்கை, கலிமான், நள்ளி
நளிமுகை உடைந்த நறுங்கார் அடுக்கத்து,
போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்

*மென்பிணி முகை சுவிழ்ந்து அலர்ந்த*

*தண்கமழ் புதுமலர் நாறும்நறு நுதற்கே?"*

*(அகநா.238:12-18)*

*எனும் பாடலடிகள் விளக்குகின்றன. மேற்சுட்டிய பாடலடியின்வழி 'நள்ளி' எனும் குறுநில மன்னன் பாணர் முதலியோர்க்குப் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட தேரினையும், களிற்றையும் கொடையாகக் கொடுத்து மகிழும் உள்ளம் உடையவன். கழலும், வீரவளையினை அணிந்த பெரிய கையினையும், செருக்குக் குதிரைகளையும் உடையவன். இவனது மலைப்பகுதி அரும்புகள் மலர்ந்து மணம் கமழக்கூடியவை. அப்பகுதியில் வளரக்கூடிய பனைமரத்தின் அடியில் புதிதாகப் பூத்து மணங்கமழும் மெல்லிய காந்தள் மலரைப் போல மணக்கும் நெற்றியை உடையவள் தலைவி. அவளைப் பிரிந்து செல்லாதே இறந்துவிடுவாள் என்பது பாடலின் கருத்து.*

*தலைவன் விரும்பக்கூடிய தலைவியின் நெற்றி மணம் கமழக்கூடியதென வெறுமனே கூறினால் இலக்கியச் சுவை நலம் பயக்காதென்றெண்ணிப் புற இலக்கியக் கூறுகளில் ஒருவனான 'நள்ளி' எனும் குறுநில மன்னனை அகத்துறைக்கு அறிமுகம்செய்து அவனின் வீரத்தையும், கொடைவன்மையையும் மெச்சுகின்றார். அப்படிப்பட்ட மன்னனின் மலையில் புதிதாகப் பூத்த மெல்லிய காந்தள் மலர் எவ்வாறு நறுமணங்கமழுமோ அதைப்போல தலைவியின் அழகு நெற்றி மணங்கமழக்கூடியது என்று ஒரு குறுநில மன்னனின் ஊரினைத் தலைவியின் நெற்றிக்கு உவமைப்படுத்தி அழகுறப் புனைந்துள்ளார் கபிலர்.*

*மேற்குறித்தப் பதிவுகளின் வழிச் சங்கப் புலவர்கள் தான் பார்த்த அல்லது கேட்டு அறிந்த வரலாற்று நிகழ்வுகளைப் பதிவுசெய்யவேண்டும்*

என்ற வேட்கையில் சங்க இலக்கியத்தினை நல்ல வாய்ப்பாகக் கருதிப் பதிவுசெய்துள்ளனர். பண்டைத் தமிழ் இலக்கியத்தினை உலகறியச் செய்ய வேண்டும் என்பதற்காக தான் பார்த்த அல்லது கேட்டு அறிந்த வரலாற்று நிகழ்வுகளைப் பதிவுசெய்து சங்க இலக்கியத்தின் தன்மையினை உயர்த்தியுள்ளனர்.

**வாசகனின் உயர்சிந்தனைக்காக**

எச்செயலைச் செய்தாலும் அதில் பயன் இருக்க வேண்டுமெனக் கருதுவது தமிழர் மரபு. இலக்கியத்தைப் படிப்பதனால் இருவகைப் பயனைப் பெறுகின்றனர் வாசகர்கள்.

1. வாசகனின் உயர்சிந்தனைக்காக
2. மனத்தைப் பண்படுத்துவதற்காக.

சங்க இலக்கியப் பாடல்களைப் பாடிய புலவர்கள் அழகுமிக்க பொருள்களையும் எழில்மிகு காட்சிகளையும் கண்ணாரக் கண்டு முழுமையாகப் பரக்க விரித்து நுட்பமான சொல்திறத்தால் எப்பொருளையும் சுவைபடக் கூறுவதில் வல்லமை மிக்கவர்கள். உள்ளத்தில் ஏற்படும் உணர்ச்சிகள், அனுபவங்கள் ஆகியவற்றைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றல் வல்ல சங்கப்புலவர்கள் தேவையற்ற, பொருத்தமற்ற, சுவைபயக்காத, வெறுஞ்சொற்கற்பனைகளையோ, வெற்றுச் சொல் விளக்கங்களையோ, தொடுத்துக் கற்போருக்குக் கவனச் சிதறல்களை ஏற்படுத்தவில்லை. இயற்கையையும், வரலாற்று நிகழ்வுகளையும் நேரிடையாகக் கண்டு உணர்ந்தவற்றையே சுவைபடப் பாடும் இயல்பினர். சில சமயங்களில் தான் பார்த்தறியாத தொலைதூர நாடுகளின் காட்சிகளைப் பதிவுசெய்ய வேண்டிய நிலையிலும் அக்காட்சி அல்லது வரலாற்று நிகழ்வுகளை விளக்கமுற வருணிக்காமல் மேம்போக்காகவே

பதிவுசெய்துள்ளனர். புறநானூறு 161 ஆம் பாடலில் வரும் கங்கையின் காட்சி, பதிற்றுப்பத்தில் முதல் பாட்டில் குறிக்கப்படும் இமயமலையின் அடிவாரத்தில் காணப்படும் கவரிமானின் தோற்றம், ஏழாம் பத்தில் கொடையாகக் கொடுக்கும் இடத்தைக் குறிப்பிட்டு வரையறை செய்யாமல் 'நன்றா' எனும் குன்றின் மேல் ஏறி நின்று கண்ணுக்கெட்டிய தூரத்தைக் காட்டிக் கொடுத்தான் என்பதையும் மேற்குறித்த புரிதலுக்குச் சான்று பகர்கினறது.

மேலும் சங்க இலக்கியங்களைச் சுவைபடக் கூற எண்ணிய புலவர்கள் சங்க இலக்கியத்தில் வரலாற்று நிகழ்வினை இணைத்துக் கற்போர்ச் சுவையுறும்படிப் புனைந்துள்ளனர்.

தலைவன் தலைவியை விடுத்துப் பிரிந்து சென்றுவிட்டான். இப்பிரிவினைத் தாளாத, தலைவியின் உடல் மெலிந்து துயில்கொள்ளாமல் வருந்துகிறாள். இப்பகுதியைச் சுவைபடக் கூற எண்ணிய வெள்ளிவீதியார், ஆட்டன் அத்தியின் (சேரமன்னன்) பிரிவினைத் தாளாத ஆதிமந்தி (கரிகால் வளவனின் மகள்) எவ்வாறு வருந்தினாலோ அதைப்போலத் தலைவி வருந்துவதாகவும், கடலிலும் வெற்றிபெற்ற சேரன் வானவரம்பனின் தாக்குதலுக்குள்ளான பகைவர்களின் அரண்கள் எவ்வாறு சிதைந்து காணப்படுமோ அதைப்போலத் தலைவி மனம் சிதைந்து கண்துயில் கொள்ளாமல் இருக்கின்றாள் என்பதைத் தலைவி தன் தோழியிடம் கூறுவதாக இரு வரலாற்று நிகழ்வினைத் தலைவியின் துன்பத்திற்கு ஒப்புமைப்படுத்திச் சுவைபடப் புனைந்துள்ளார் புலவர். இதனை,

"ஆதிமந்தி போலப் பேதுற்று
அலந்தனென் உழல்வென் கொல்லோ - பொலந்தார்
கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்,

வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய

உடைமதில் ஓர் அரண் போல,

அஞ்சுவரு நோயொடு, துஞ்சாதேனே" (அகநா.45:14-19)

என்ற அடிகள் விளக்குகின்றன. புலவனின் பட்டறிவின் பரப்பும், பாடும் திறனும் சிறியதே ஆயினும் பெரியதே ஆயினும் தான் வாழ்ந்த காலக்கட்டத்தில் 'தான் கண்ட, எண்ணிய, உணர்ந்த, முழுமையாய் அறிந்த இவற்றை வாய்மையுடன் வெளிப்படுத்துவதே புலவனின் தலையாய கடமை' என்ற அட்சனின் கூற்று சங்கப் புலவர்களுக்கே பெரிதும் பொருந்தியுள்ளது.

சங்க இலக்கியப் பாடல்கள் உள்ளதை உள்ளவாறே புனைந்து சுவைபடக் கூறுவன. புலவர் பெருமக்கள் பாடிய அகமாயினும் புறமாயினும் மனிதகுலத்தின் நிகழ்நடவடிக்கைகளை மாண்புற அமைத்துச் சுவைபடக் காட்டுவனவே தவிர வரையிகந்த கற்பனையும், வாய்மை நீங்கிய வாய்முழக்கமும் அல்ல. சங்க இலக்கியங்கள் மானுடம்பாடி, மானுடம் வளர்த்து, மானுடம் திருத்தி, மானுடம் காத்த பாடல்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

**உயர்வு நவிற்சியாக**

சங்கப் புலவர்கள் சங்க இலக்கியங்களை உயர்வு நவிற்சியாக மனம்போன போக்கில் புகழ்ந்து பாடவில்லை. அவர்கள் தொல்காப்பியச் செய்யுள் கூறும் விளக்கங்களை உள்வாங்கிக் கொண்டு ஒவ்வொரு கவிதையையும் நுட்பமாகப் பதிவுசெய்துள்ளனர். அதன் பொருத்தத்தை எடுத்துரைப்பதாகக் கவிதையின் சொல்லும் பொருளும் ஒன்றிச் செயல்படுவதை யாவரும் அறியும் வண்ணம் சொல்லுவதையே தமது கடமையாகக் கொண்டனர்.

"சாறுதலைக் கொண்டெனப் பெண்ஈற்று உற்றெனப்
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ
ஊர்கொள வந்த பொருநனொடு
ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே" (புறநா.82:1-6)

மழை பெய்துவிட்ட கதிரவன் மறைந்த மாலைப்பொழுதில் ஊரில் விழா தொடங்கியதாகவும், வீட்டில் மனைவி குழந்தை பெற்றாளாகவும் இரண்டிடங்களுக்கும் செல்லவேண்டிய விரைவுநிலையில் கட்டில் பின்னுவோன் கையிலுள்ள வார்குத்தூசி எவ்வளவு விரைந்து இயங்குமோ அவ்வளவு விரைந்து ஆமூர் மல்லனொடு போர் புரிந்தான் பெருநற்கிள்ளி என்பது மேற்குறித்தப் பாடலின் வழி அறியமுடிகின்றது.

இக்கருத்தின்வழி சமுதாயத்தின் இரண்டு கோடிகள் என்று கருதப்பெறும் வேந்தனையும் இழிசினனாகிய கட்டில் பின்னுவோனையும் சொல்லாட்சியால் சங்கக் கவிதை இணைத்துவிடுகிறது. புலைமகன் என்று அழைக்கப்படுவோன் அரசனுக்கு உவமையாவதோடு அரசனுக்கு ஒப்பான சிறப்பிடம் பெறுகின்றான். நெடுந்தகையின் போர்த்திறன் இரண்டு வரிகளில் சொல்லப்பட, இழிசினனின் செயலாற்றல் நான்கு வரிகளில் பேசப்படுகிறது. ஊசிக்குப்பல அடைகளைச் சேர்க்கும் புலவன் போகத் தொழிலுக்கு எவ்வித அடையும் கூறவில்லையாயினும் அதனை உயர்வு நவிற்சியால் உய்த்துணரமுடிகின்றது. ஏனெனில் அரசன் தனக்குள்ள உண்டாட்டு, கொடை போன்ற வேறு கடமைகள் இருப்பதை மனதிற்கொண்டு பெருநற்கிள்ளி போரை விரைவாக முடிக்க முயல்கின்றான் என்ற வரலாற்று நிகழ்வினைக் கட்டில் பின்னுபவனின் வினையின் விரைவுக்கு நலமிக்க சொற்களை ஒப்புமைப்படுத்தி உயர்வு நவிற்சியினை வெளிப்படுத்தியுள்ளார்.

**கூடுதல் வலிமைக்காக**

வாய்மொழி இலக்கியமாகத் தொன்றுதொட்டு வழங்கிவந்த பாடல்கள் பின்பு வரிவடிவம் பெற்றுச் சங்க இலக்கியமாக உருமாறின. இச்சங்க இலக்கியங்களில் அகத்திணையாயினும் புறத்திணையாயினும் பெரும்பான்மை வரலாற்று நிகழ்வு இடம்பெறாத பாடல்கள் இல்லை. அந்த அளவிற்கு வரலாறு குறித்த புரிதல்கள் சங்கப் புலவர்களிடம் இருந்திருக்கின்றது. இத்தகைய வரலாற்றுப் புரிதல்கள்தான் சங்ககால மக்களின் சிறப்புகளை உலகறியப் பறைசாற்றின.

ஓர் இலக்கிய வெற்றிக்கு உறுதுணையாவது சொல்லும் முறை. இம்முறையைச் சங்கப் புலவர்கள் நன்கு அறிந்திருந்தமையால் கருத்தாழமும் பயனும் கருதித் தங்கள் படைப்பாக்கங்களுக்கு வலிமை சேர்க்கும் வண்ணம் தம் காலத்து அல்லது தனக்குத் தெரிந்த வரலாற்று நிகழ்வுகளைச் சங்க இலக்கியத்தில் பொருத்தமான இடங்களில் பதிவுசெய்துள்ளனர்.

"தடந்தாள் தாழைக் குடம்பை நோனாத்
தண்டலை கமழும் வண்டுபடு நாற்றத்து
இருள்புரை கூந்தல் பொங்குதுகள் ஆடி
உருள்பொறி போல எம்முனை வருதல்,
அணித்தகை அல்லது பிணித்தல் தேற்றாப்
பெருந்தோட் செல்வத்து இவளினும் எல்லா!
எற்பெரிது அளித்தனை, நீயே ; பொற்புடை
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்தர் ஓட்டிய ஏந்துவேல் நன்னன்
கூந்தல் முரற்சியின் கொடிதே" (நற்.270:1-10)

தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையின்பால் சென்றுவிட்டான் என்பதுதான் மேற்சுட்டிய பாடலின் மையக்கரு. இந்நிகழ்வினை விளக்குவதற்கு உவமையைக் கையாளுகின்றார் புலவர். தாழம்பூப் போன்ற இயற்கை மணம் பெற்ற தலைவியை விடுத்து, விரைவில் வாடக்கூடிய மகளிர் சூடியுள்ள பூப்போன்ற பரத்தையை நாடிச் சென்ற உன் செயல் கொடியது என்கிறார் புலவர். மேலும் வலிமை சேர்க்க எண்ணிய பரணர் தமக்குத் தெரிந்த ஒரு வரலாற்று நிகழ்வினை இணைத்துக் காட்டுகின்றார்.

நன்னன் எனும் குறுநில மன்னன் பகைவேந்தர்களைத் தோற்கடித்து அம்மன்னர்களின் மனைவிமார் கூந்தலை மழித்துக் கயிறாகத் திரித்து அவர்தம் யானைகளைப் பிணித்துவந்தான். இது போன்ற ஒரு கொடுஞ்செய்கையை எந்த அரசரும் செய்யவில்லை. அந்த அளவிற்குக் கொடியது என அக இலக்கியத் தலைவன் செயலுக்குப் புற இலக்கியக் குறுநில மன்னனின் வரலாற்றினை எடுத்துரைத்து இலக்கியத்திற்கு வலிமை சேர்க்கின்றார்.

மேற்குறித்த வரலாற்றுப் பதிவின் வழி ஒரு மன்னன் பகை மன்னனை வென்றுவிட்டால் அவனைச் சிறைபிடிப்பது மட்டுமல்லாது அவனின் மனைவிமார்களையும் சிறைபிடித்து அவர்களின் கூந்தலை மழித்து அவமானப்படுத்தும் ஒரு பழக்கம் அல்லது தண்டனை சங்க காலத்தில் இருந்துள்ளது என்பதை அறியமுடிகின்றது.

**வரலாற்றுணர்வை அறிவதற்காக**

சங்க இலக்கியத்தின் மிக முக்கியமான பண்பு அகம், புறம். இவ்விரண்டனுக்குள்ள தனித்தன்மைகள் ஒன்று உள்ளீடாகவும், மற்றொன்று வெளிப்படையாகவும் அமைக்கப் பெற்றுள்ளன. இச்சங்க இலக்கியங்கள் ஒரேமாதிரியான தன்மைகள் உடையனபோல் இருப்பினும் ஒவ்வொரு

பாடலிலும் ஒவ்வொரு புலவரின் வெவ்வேறு நேர்த்தியான கலைத்திறமைகளைக் கண்டு வியக்கும் வண்ணம் வடிவமைக்கப் பெற்றுள்ளன. தன் அனுபவ அறிவினால் தன் கால வரலாற்று நிகழ்வுகளைச் சங்க இலக்கியங்களுக்குப் பொருத்தமான இடத்தில் பதிவுசெய்து வரலாற்று உணர்வினை அறியச் செய்துள்ளனர்.

"பறம்பிற் கோமான் பாரியும் ; பிறங்குமிசைக்
கொல்லி ஆண்ட வல்வில் ஓரியும்;
காரி ஊர்ந்து பேரமர்க் கடந்த,
மாரி ஈகை, மறப்போர் மலையனும் ;
ஊராது ஏந்திய குதிரைக், கூர்வேல்,
கூவிளங் கண்ணிக், கொடும்பூண், எழினியும்;
ஈர்ந்தண் சிலம்பின் இருள்தூங்க நளிமுழை,
அருந்திறல் கடவுள் காக்கும் உயர்சிமைப்,
பெருங்கல் நாடன் பேகனும் ; திருந்துமொழி
மோசி பாடிய ஆயும் ; ஆர்வமுற்று
உள்ளி வருநர் உலைவு நனிதீர,
தள்ளாது ஈயும் தகைசால் வண்மைக்,
கொள்ளார் ஓட்டிய, நள்ளியும் - என ஆங்கு
எழுவர் மாய்ந்த பின்றை..." (புறநா.158:4-17)

என்ற இப்பாடலில் போர் முரசு குறுந்தடியால் அடிக்கப்படவும் வெண்சங்கு முழங்கவும், மூவேந்தரோடு எதிர்த்துப் போரிட்ட தலைமை அமைந்து நீண்டு உயர்ந்த பக்கமலையில் ஒலிக்கின்ற வெள்ளருவிகள் கற்களை உருட்டிப் பாய்கின்ற பறம்புமலைக் கோமான் பாரியும், உயர்ந்து விளங்கும் உச்சியையுடைய கொல்லிமலையை ஆண்டிருந்த வல்வில் ஓரியும், காரியெனும் பெயர் அமைந்த குதிரையைச் செலுத்தி ஓரியுடன் செய்த

பெரும்போரில் வென்ற மழைபோலும் வள்ளல் தன்மையையும் மறப்பண்பு மிக்க போரினையும் உடைய மலையமான் திருமுடிக்காரியும், செலுத்தப்படாது உயர்ந்த குதிரையென்னும் மலையையும் கூர்வேலையும் கூவிளங்கண்ணி (வில்வமாலை)யையும், வளைந்த முத்தாரத்தையுமுடைய எழினியென்னும் அதியமான் நெடுமான் அஞ்சியும், மிக்க குளிர்ந்த மலையில் இருளே தூங்கும்படியான பெரிய குகையையும் எதிர்த்துப் போரிடுவதற்கரிய வலிமையமைந்த தெய்வம் காக்கும் உயர்ந்த சிகரங்களையுமுடைய பெருமலை நாடன் பேகனும், திருந்திய மொழியையுடைய முடமோசியார் என்னும் புலவரால் பாராட்டிப் பாடப்பெற்ற ஆய் அண்டிரனும், ஆர்வமுற்றுத் தன்னை நினைத்து வருவோருடைய வறுமை மிக நீங்கத் தவிராது கொடுக்கும் தகுதிசான்ற வள்ளல் தன்மையுடையவனாகிய பகைவரை வென்று ஓட்டிய கண்டீரக்கோப் பெருநள்ளியும் என்று சொல்லப்பட்ட வள்ளல்கள் எழுவரும் இறந்தபின் பாடிவரும் இரவலர்களுக்குப் பரிசுதரும் கொடை வள்ளலாகத் தோன்றியவன் குமணன் என்று பெருஞ்சித்திரனார் பதிவுசெய்துள்ளார்.

வரலாற்றுணர்வை அல்லது உண்மையை அறியச் செய்ய வேண்டும் என்றெண்ணிய பெருஞ்சித்திரனார் குமணனின் கொடைத் தன்மையை விளக்குவதுபோல் அவனின் வரலாற்றையும் அவனுக்கு முன் தோன்றிய கடையெழு வள்ளல்களின் வரலாற்றையும் விளக்குகின்றார்.

ஆய்அண்டிரன் கி.மு.275-250, பாரி கி.மு.250-225, காரி கி.மு.250-225, ஓரி கி.மு.250-225, நள்ளி கி.மு.250-225, பேகன் கி.மு.250-225, எழினி கி.மு.225-200 ஆகியோரின் காலத்தினைப் பெருஞ்சித்திரனார் நன்கு அறிந்திருந்ததால் குமணனின் காலமான கி.மு.150-125தைக் கடையெழு வள்ளல்களின் காலத்தோடு ஒப்பிட்டு

அவர்களுக்குப் பின்தோன்றியவன் என்ற வரலாற்றைப் பதிவுசெய்துள்ளார். இப்பதிவின் வாயிலாகப் பெருஞ்சித்திரனாருக்கு வரலாற்று உணர்வு மேலோங்கி இருந்துள்ளது என்பது தெளிவாகின்றது.

மேற்குறித்த வரலாற்று உண்மையைப் பின்னோர் அறியவேண்டும் என்பதற்காகப் புறநானூற்றில் இவ் வரலாற்றைப் பதிவுசெய்துள்ளார். இவ்வகையான வரலாற்றுப் பதிவுகள்தான் தமிழரின் வரலாறாக உருப்பெற்று உயர்ந்து பிறர் மதிக்கத்தக்க பெருமையை அடையச் செய்துள்ளன.

**தொகுப்புரை**

- மனித இனத்தின் தொடக்ககாலம் தொடங்கி இன்றுவரை அவரவர் வந்த வழியினை, அடையாளத்தை, இருப்பை, பின்புலத்தினை அறிவது வரலாறு.
- வரலாறு எனும் சொல் கிரேக்க மொழியிலிருந்து உருவாயிற்று. சட்டத்துறை பற்றிய பூசலில் சான்றுகளை ஆய்வுசெய்வதை ஹோமர் வரலாறு எனும் தொடரால் குறிப்பிட்டுள்ளார்.
- வரலாறு எனும் சொல்லுக்கு நிகழ்ச்சிமுறை, சரித்திரம், பூர்வ சரித்திரம், சங்கதி, விபரம், உபாயம், உதாரணம், ஒழுங்கு, மூலம், கதை, விவரம், வருதலின்வழி, ஜீவித சரித்திரம், சுயவரலாறு, சுயசரித்திரம், சுயசரிதம், சுயசரிதை, வண்டவாளம் எனப் பல பொருண்மைகளைத் தமிழ் அகராதிகள், களஞ்சியங்கள் சுட்டுகின்றன.
- இக்காலத்தில் வரலாறு என்னும் சொல் மனிதர்கள் தங்கள் சமூக வாழ்க்கையில் நாளடைவில் நடத்திவந்த எல்லாக் காரியங்களையும் குறிக்கும். அரசியல் திட்டங்கள், கோட்பாடுகள், மதக்கொள்கைகள், வேதாந்த சித்தாந்தங்கள், விவசாயம், கைத்தொழில், வாணிகம் முதலியவைகளும் மனிதர்களுடைய ஊண், உடை, நடத்தை, விளையாட்டு முதலியவைகளும் வரலாற்றில் அடங்கும் என்கிறது கலைக்களஞ்சியம்.
- இருபதாம் நூற்றாண்டில் உருவான மறுமலர்ச்சிச் சிந்தனைகள்தான் வரலாற்றைப் புதிய நோக்கில் ஆராய முற்பட்டன. பழைய சிந்தனைகள் வரலாற்றை நிகழ்ச்சிகளின் தொகுப்பாகவும், மன்னர்களின் பட்டியலாகவும் பார்த்தன.

- ஓர் இனமக்களின் வரலாறு என்பது போர்க்களத்தோடும் அதனில் நின்று கொண்டு இருந்த மன்னர்களின் புயபல பராக்கிரமத்தோடும் ஒடுங்கி முடிந்துவிடுவதில்லை. மன்னர்களையும் அவர்களின் ஆட்சி நலத்தையும், பண்புநலத்தையும், அவர்கள் காலத்து மற்ற துறையினரின் நடவடிக்கைகளையும் ஒருங்கே சொல்வதுதான் வரலாறு.
- வரலாறு என்பது கலையும் அறிவியலும் கலந்ததொரு இனிய கலவை.
- வரலாறு கற்பனைக் கதையன்று, உண்மை என்று நம்பத்தக்க சான்றுகளின் உதவிகொண்டு நாம் ஏற்றுக்கொள்ளும் ஒரு செய்தித்தொகை.
- பண்டைத் தமிழர்கள் வரலாற்று உணர்வில்லாதவர்கள் அல்லர். அவர்கள் காலத்து முக்கிய வரலாற்று ஆவணங்களைப் பாதுகாத்திருக்கின்றனர். அவ்வாவணங்கள்தான் இன்று வரலாற்று மரபின் மூலப்பகுதியாக விளங்கிவருகின்றன.
- ஒரு நாட்டின் வரலாற்றை நிர்ணயிப்பதில் வாய்மொழிச் சான்றுகளும் முக்கிய இடத்தினைப் பெறுகின்றன.
- சங்க இலக்கியத்தில் அகம் : காதல் குறித்துப் பேசினாலும் அவற்றினூடே புறநிகழ்வுகளும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. புறம் : மூவேந்தர்கள், குறுநில மன்னர்கள், இன்னபிறரின் வரலாறு குறித்தும் பதிவுசெய்துள்ளது.
- அகம், புறமெனக் கட்டமைக்கப் பெற்ற சங்கப் பாடல்களை உலகறிய வேண்டுமென எண்ணிய பண்டைய புலவர்கள் தம் காலத்தில் நிகழ்ந்த அல்லது பார்த்த, கேட்ட வரலாற்று நிகழ்வுகளைச் சுவைக்காக, உயர்வு நவிற்சியாக, கூடுதல் வலிமை சேர்க்க, வரலாற்றுணர்வை அறியச் செய்ய, உவமையாக எனும் கருத்து வெளிப்பாட்டு நிலையில் சங்க இலக்கியங்களில் பதிவுசெய்துள்ளனர் என்பதனை இவ்வியல் வழி அறியமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. *ஆர்.திருஞானசம்பந்தம், வரலாறு கற்பித்தல் முறைகள், ப.3*
2. *யாழ்ப்பாணர் அகராதி, ப.409.*
3. *நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப.1238.*
4. *இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, ப.301.*
5. *பவானந்தர் தமிழ்ச்சொல்லகராதி, ப.409.*
6. *தமிழ் லெக்சிகன் அகராதி* (Tamil Lexicon), *ப.3511.*
7. *மதுரைத் தமிழ்ப் பெயரகராதி, ப.528.*
8. *செந்தமிழ் அகராதி, ப.662.*
9. *தமிழ்ப் பேரகராதி, ப.3511.*
10. *கோனார் தமிழ் அகராதி, ப.562.*
11. *மாணவர் மொழியாக்க அகராதி, ப.380.*
12. *க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, பக்.900-901.*
13. *நர்மதாவின் தமிழ் அகராதி, ப.577.*
14. *மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.1036.*
15. *கௌரா தமிழ் அகராதி, ப.604.*
16. *கலைக்களஞ்சியம், ப.148.*
17. *தற்காலத்தமிழ்ச் சொற்களஞ்சியம், ப.324.*
18. *தமிழ் - ஆங்கிலம் அகராதி, ப.918.*

   "History (Circumstances, adjuncts, details) - *சங்கதி*, (Origin) *மூலம்*, (Example in grammar, or science of the use of words) - *உதாரணம்*, (A table of contents) - *அட்டவணை*, (To witnamely as follows, on this wise)"

19. Oxford English Reference Dictionary, Thesaurus, P.669

   "A Continuous use of chronological record of important or public events"

20. New Compact Oxford Dictionary, P.424

"Antiquity, bygone days,heritage, historical events, the old days, the past, 2, Annals biography, chronicles diaries, narratives, records"

21. Lifico Dictionary, P.451

History "an account of past events in a nation's progress, description *சரித்திரம், வரலாறு*"

22. Percivals English - Tamil Dictionary, P.196

23. A Tamil - English Dictionary, P.630.

"The way, mannar, order of succesion, a schedule, a genealogical list"

24. The Excelsior School Dictionary, P.453.

"Chronicles, annals, narration, an account of an event ; *சரித்திரம், காலவர்த்தமானம், வரலாறு, இதிகாசம், விவரணம், புராணம்*"

*25. தி.இராசகோபாலன், வரலாற்று நாவல்களில் வரலாற்றுச் செய்திகள், (க.பொன்னுச்சாமி, திறனாய்வுரை), முதற்பக்கம்.*

*26. ச.சிவகாமி, பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.4.*

*27. சாலை இளந்திரையன், சங்ககால மன்னர் காலநிலை வரலாறு (பாராட்டுரை), ப.*XVI

*28. சி.மௌனகுரு, பண்டைத் தமிழர் வரலாறும், இலக்கியமும், ப.13.*

*29. க.த.திருநாவுக்கரசு, தமிழர் நாகரிக வரலாறு, ப.9.*

*30. மேலது, ப.9.*

*31. மேலது, ப.9.*

*32. மேலது, ப.10.*

*33. மேலது, ப.10.*

*34. பிலவேந்திரன், சனங்களும் வரலாறும், ப.v(5).*

*35. சொ.ஞானசம்பந்தன், லத்தின் இலக்கிய வரலாறு, ப.81.*

36. தி.இராசகோபாலன், வரலாற்று நாவல்களில் வரலாற்றுச் செய்திகள், (கே.ஆர்.ஹனுமந்தன் - மதிப்புரை), ப.2

37. இரா.பாலசுப்பிரமணியன், நாவல் களங்கள், ப.9.

38. நா.வானமாமலை, வரலாறும் வக்கிரங்களும் (முன்னுரை), ப.5.

39. சே.ச.மாற்கு, சனங்களும் வரலாறும் (அருந்ததியர் தோற்றக்கதைகள்), ப.38.

40. கா.சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு (முன்னுரை), ப.VIII.

41. ஞானி, வரலாற்றில் தமிழர் தமிழ் இலக்கியம், ப.180.

42. தி.இராசகோபாலன், வரலாற்று நாவலர்களில், வரலாற்றுச் செய்திகள், (கே.ஆர்.ஹனுமந்தன் - மதிப்புரை), ப.2

43. க.த.திருநாவுக்கரசு, தமிழர் நாகரிக வரலாறு, ப.8.

44. ஈ.எச்.கார், வரலாறு என்றால் என்ன? ப.6

45. மேலது, ப.6.

46. மேலது, ப.4.

47. ஆர்.திருஞானசம்பந்தம், வரலாறு கற்பித்தல் முறைகள், ப.2.

48. மேலது, பக்.2-3.

49. மேலது, ப.7.

50. மேலது, ப.9.

51. ரொமிலாதாப்பர், வரலாறும் வக்கிரங்களும், ப.8.

52. ப.மருதநாயகம், சனங்களும் வரலாறும் (அணிந்துரை), ப.XXV (25).

53. பிரபஞ்சன், உயிர்மெய் (மாத இதழ்).

# இயல் இரண்டு

# அக இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்

தமிழர்களின் தனிப்பெரும் அடையாளமாகவும் தமிழ் இனத்தின் கொடையாகவும் விளங்குவது சங்க இலக்கியம். இச்சங்க இலக்கியத்தில் மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் அதிகமாகப் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் புற இலக்கியத்தில் எந்த அளவிற்கு முக்கியத்துவம் கொடுத்துப் பதிவு செய்யப் பெற்றுள்ளதோ அதே அளவிற்கு அக இலக்கியத்திலும் பதிவு செய்யப்பெற்றுள்ளன. இவ்இயல் அப்பதிவுகளை வெளிக்கொணர்ந்து, அதன் உண்மைத் தன்மையினையும் அதற்கான பின்புலத்தினையும் ஆய்வுலகில் பதிவுசெய்வதை முக்கிய நோக்கமாகக் கொண்டு அமைகிறது.

**சங்க அக இலக்கியம்**

"சங்க இலக்கியங்கள் கற்பனையும் கனவும் பொய்யும் புனைவும் அற்ற தமிழ்ச் சமுதாயத்தை உள்ளது உள்ளபடியே காட்டும் படிமக் கலங்கள்-கண்ணாடிகள் என்று மனோன்மணியம் சுந்தரம்பிள்ளையும் வரலாற்றுப் பேராசிரியர் கே.ஏ.நீலகண்டசாஸ்திரியும், கலாநிதி கைலாசபதியும் கலாநிதி சிவத்தம்பியும் கருதுவர்."[1] இந்தப் பின்புலத்தில் சங்க இலக்கியத்தை அணுகுவோமானால் சங்கக் கவிதைகளுக்கு ஈடான கவிதைகள் உலகெங்கும் இல்லை என்ற உண்மை புலப்படும். அந்த அளவிற்குச் சொல் நயமும், பொருள் நயமும், தரமும், திறனும், வன்மையும் மென்மையும் கொண்டவை சங்கக் கவிதைகள்.

இச்சங்கக் கவிதைகள் அகம், புறம் எனும் இரு பெரும் பிரிவுகளை உள்ளடக்கியவை. அகம் எனும் சொல் காதல், ஒழுக்கம் என இருவகையான

பொருண்மைகளை உள்ளடக்கியது எனலாம். சங்க அக இலக்கியத்தில் தலைவன், தலைவியது மன உணர்வுகளையும் உச்சகட்ட உணர்ச்சிகளையும் தெளிவுர எடுத்துரைப்பதற்குப் புலவர்கள் வரலாற்று நிகழ்வுகளை உவமையாகப் பயன்படுத்தியுள்ளனர். அவ்வகையில் எட்டுத் தொகை அக இலக்கியங்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு போன்றவற்றில் பதிவுசெய்யப் பெற்றுள்ள வரலாற்றுப் பதிவுகளைக் கண்டறிந்து பின்வரும் பகுதி விளக்க முற்படுகின்றது.

**நற்றிணை**

சங்கக் கவிதைகளில் மிகச் சிறந்த காதல் தொகுப்பாக விளங்குவது நற்றிணை. இந்நற்றிணையை "துணி வாங்குவோர் துணியை அடிகோலால் அளந்து வாங்குவது போல அவற்றின் அடிகளை எண்ணி வகை செய்துள்ளார்கள். 8 அடிக்கு உள்ளானவற்றைக் குறுந்தொகை என்று தொகுத்தனர். 12 அடிக்கு மேலும் 32 அடிக்குள்ளும் அமைந்தவற்றை நெடுந்தொகை என்று தொகுத்தார்கள். இடைப்பட்டவற்றை - நடுநிலையில் உள்ளவற்றை குறுகியோ நீண்டோ இரு கோடியிலும் சேராது நல்லன என்று அமைந்தவற்றை நற்றிணை என்று தொகுத்தனர்"[2] என்பர் தெ.பொ.மீ.

இந்நற்றிணைப் பாடல்களைப் பாடிய 193 புலவர்களில் சிலர் காதலை மட்டுமல்லாது புறம் சார்ந்த வரலாற்று நிகழ்ச்சிகளையும் சேர்த்துப் பதிவு செய்துள்ளனர்.

நற்றிணையில் சேரமன்னர்களைப் பற்றி ஏழு இடங்களிலும் சோழமன்னர்களைப் பற்றி 11 இடங்களிலும், பாண்டிய மன்னர்களைப் பற்றி 10 இடங்களிலும், குறுநில மன்னர்களைப் பற்றி 33 பாடல்களில் 35 இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன (விவரம் பின்னிணைப்பு-1).

**சேரர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

"சேரர் என்பதே குடியின் பொதுப் பெயர். இதுவே முதன்மையும் தலைமையும் அமைந்த பெயராய் ஆட்சிப்பட்டுள்ளது."[4] இத்தகு ஆட்சி பெற்ற சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் நற்றிணையில் ஏழு இடங்களில் பதிவு செய்யப் பெற்றுள்ளன. இவ்வேழு பதிவுகளையும் குட்டுவனின் வீரம், பொறையனின் புகழ்மாலை தொண்டியின் சிறப்பு, குட்டுவனின் குடமலைச் சிறப்பு என நான்கு பொருண்மைகளில் அடக்கலாம்.

**குட்டுவனின் வீரம்**

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றதால் தலைவி புலம்பி வருந்துகின்றாள். தலைவியின் வருத்தத்தினைக் கண்ட தோழி தலைவனைப் பழித்துப் பேசுகின்றாள். தலைவனைப் பழிக்கப் பொறுக்காத தலைவி, அவரைப் பழித்துப் பேசாதே! ஏனெனில், சேரவேந்தனது கழுமலம் என்ற ஊரின் மதில் அழியுமாறு சோழவேந்தனான கிள்ளிவளவன் தீ வைத்து அழித்தான், இந்த நிகழ்வைக் காட்டிலும் பெரியதல்ல தலைவன் நம்மை விட்டுப் பிரிந்து சென்றது என்கிறாள்.

"..................... குட்டுவன்

அகப்பா அழிய நூறி, செம்பியன்

பகல்தீ வேட்ட நாட்பினும் மிகப்பெரிது" (14:3-5)

இப்பாடலின் வழி, தலைவன், தலைவிக்கிடையே ஏற்பட்ட சிறு பிரிவிற்குப் பெருநில வேந்தர்களான சேரனுக்கும் சோழனுக்கும் நிகழ்ந்த போரினை உவமையாக்கித் தலைவன் தலைவிக்கு இடையில் உள்ள அன்பின் மிகுதியைப் பதிவுசெய்துள்ளார் மாமூலனார்.

**பொறையனின் புகழ்**

தலைவியை விட்டுத் தலைவன் பிரிந்ததால் தலைவி வருந்துகிறாள். தலைவியின் வருத்தம் தாங்காத அவளின் உயிர்த்தோழி, நம் தலைவன் பொருள்வயிற் காரணமாகப் பிரிந்து சென்றுள்ளார். அவர் மூவன் எனும் குறுநில மன்னனைச் சேர வேந்தனான பொறையன் வென்று அவனின் முத்துப்போன்ற வலிய பற்களைப் பிடுங்கித் தன் வாயிற் கதவில் பதித்தான். இப்படிப்பட்டவனின் யானை மதம் பிடித்திருந்ததால் அங்கு வீரர்கள் யாரும் துயிலவில்லை. யானைக்கு மதம் தணிந்த பிறகே வீரர்கள் துயின்றனர். அத்தகைய யானையின் ஒற்றைத் தந்தம் போல விளங்குகின்ற அருவியையுடைய மலை வழியில் சென்றுள்ளார். ஆகவே நீ வருந்தாதே விரைவில் வந்துவிடுவார் என்று ஆற்றிவிக்கின்றாள். இதனை,

“தெறல்அருந் தானைப் பொறையன் பாசறை
நெஞ்சம் நடுக்குறூஉந் துஞ்சா மறவர்
திரைதபு கடலின் இனிதுகண் படுப்பக்
கடாஅம் கழீஇய கதனடங்கு யானைத்
தடவுநிலை ஒருகோட் டன்ன
ஒன்றிலங்கு அருவிய குன்றிறந் தோரே” (18:5-10)

என்ற பாடல் விளக்கும். தலைவன் எவ்வகையான வழியில் பொருள்தேடப் பிரிந்தான் என்பதற்கு ஒரு குறுநில மன்னனுக்கும் சேரவேந்தனுக்கும் நடந்த போரினைப் பற்றிக் கூறி அப்போரில் சேரனது யானையின் முக்கியத்துவத்தினை எடுத்துரைத்து அதன்வழி இப்பாடலை மெருகூட்டியிருக்கிறார் பொய்கையார்.

"கடும்பகட்டும் யானை நெடுந்தேர்க் குட்டுவன்

வேந்துஅடு மயக்கத்து முரசு அதிர்ந்தன்ன,

ஓங்கற் புணரி பாய்ந்து அடுகேறிர்

அணிந்திடு பல்பூ மரீஇ, ஆர்ந்த

ஆபுலம் புகுதரு பேர்இசை மலைக்

கடல்கெழ மரந்தை அன்ன, எம்

வேட்டனை அல்லையால், நலம்தந்து சென்மே" **(395:4-10)**

என்ற அம்மூவனாரின் பாடலும் இதே கருத்துநிலையைச் சுட்டி நிற்கின்றது.

## தொண்டியின் சிறப்பு

சங்க காலத்தில் தலைவியின் அழகு நலன்களுக்கு ஊர்களையும், நகர்களையும் மலைகளையும் உவமையாக்கும் வழக்கம் இருந்திருக்கின்றது.

"தண்சேறு தாஅய் மதனுடை நோன்தாள்

கண்போல் நெய்தல் போர்வில் பூக்கும்

திண்தேர்ப் பொறையன் தொண்டி

தின்திறம் பெறுகஇவள் ஈன்ற தாயே...." (8:7-10)

மேற்குறித்த பாடல் சற்று மாறுபட்டுத் தலைவியின் பெற்றோருக்குத் தொண்டி நகர் உவமையாக்கப்பெற்றுள்ளது. செவ்வரி படர்ந்த கண்களையும் குளிர்ச்சி பொருந்திய உடலையும் நீலநிற மேனியையும் உடைய அழகு மிக்க தலைவியைப் பெற்றுத்தந்த இவள் தந்தை நெடுங்காலம் வாழ்க, தாய் அகன்ற வயலிடை அரிக்கப்பட்டு எடுத்துச் செல்லப்பெற்ற கண்போன்ற நெய்தல் மலர் பூக்கும் பொறையனது தொண்டி நகர் போன்ற சிறப்பினை அடைக என்று வாழ்த்துவதாக பாடப் பெற்றுள்ளது.

## குட்டுவனின் குடமலைச் சிறப்பு

பொருள் காரணமாகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சுட்டெரிக்கின்ற வெய்யிலில், முட்கள் நிறைந்த அடர்ந்த காட்டுக்குள் வந்துவிட்டான். வரும் வழியில் பெண்யானைகள் தத்தம் கன்றுகளோடு நீருக்காகவும் நிழலுக்காவும் வருந்திக் கொண்டு நிற்பதைக் கண்டான். கண்டவுடன் தலைவி நினைவுக்கு வருகின்றாள்.

குட்டுவனின் குடமலைச் சுனையில் வண்டுகள் விரும்பி மொய்க்கக் கூடிய கரிய இதழுடைய குவளைமலரினைத் தன் கூந்தலில் சூடக்கூடியவள் தலைவி. இத்தகு நலன்மிகு தலைவியை விட்டுப் பிரிந்து நெடுந்தொலைவு வந்துவிட்டோமே, அவள் எவ்வாறு வருந்துவாளோ என எண்ணித் தலைவன் தன் பயணத்தினைத் தலைவி இருக்கும் இடம் நோக்கித் திருப்புவதாக புலவர் முடத்திருமாறன் பதிவுசெய்துள்ளார்.

"கடுநடை யானை கன்றொடு வருந்த,
நெடுநீர் அற்ற நிழல்இல் ஆங்கண்
அருஞ்சுரக் கவலைய என்னாய் ; நெடுஞ்சேண்
பட்டனை, வாழிய - நெஞ்சே! குட்டுவன்
குடவரைச் சுனைய மாஇதழ் குவளை
வண்டுபடு வான்போது கமழும்" (105:4-9)

இப்பாடல் வரிகளில் தலைவியின் கூந்தல் அழகினை மேன்மைப்படுத்துவதற்குக் குட்டுவனின் குடமலைச் சுனை உவமையாக்கப் பெற்றுள்ளது.

"நிறையுறு மதியின் இலங்கும் பொறையன்

பெருந்தண் கொல்லிச் சிறுபசுங் குளவிக்

கடிபதம் கமழும் கூந்தல்

மடமா அரிவை தடமென் தோளே?" (346:8-11)

என்ற இந்தப் பாடலும் தலைவியை விட்டுத் தலைவன் பொருள்வயிற் காரணமாகப் பிரிந்தான். பிரிந்து சென்ற தலைவன் பகை அரசனால் அழிக்கப் பெற்று மக்கள் நடமாட்டம் இல்லாத ஒரு சிற்றூரில் தங்கியிருக்கின்றான். கார்காலம் தொடங்கிவிட்டது, தலைவியின் நினைவு மனத்திற்குள் அலையென மோதுகின்றது. பொறையனின் கொல்லிமலையில் பூத்த பசுமையான மல்லிகையைச் சூடியதினால் மணம் மிகுந்த கூந்தலையும் இளமையுடைய தோள்களையும் உடைய தலைவியைக் கூடி மகிழ இயலவில்லையே என்று தன் நெஞ்சிற்குச் சொல்லி வருத்தம் கொள்வதாக எயினந்தை மகன் இளங்கீரனார் பதிவுசெய்துள்ளார்.

## சோழர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

பழைமையும் பெருமையும் பெற்று விளங்கிய மூவேந்தருள் நடுவண் வைத்துச் சிறப்பிக்கப் பெறுபவர் சோழர்கள். "இச்சோழ வேந்தர் குடியும் கூழின் பெருக்கமும் கொண்டோர் ; அஃதோடு, தெய்வக் காவிரித் தீதுதீர் சிறப்பும் சேர்ந்த திருவினராவர்."[4]

சோழ அரசின் தோற்றமும், தொன்மையும் அறிய இயலாதனவாதலைப் போன்றே, அவர் பெயரின் தோற்றக் காரணமும் அறிய இயலாததாம்; "ஆரியர்க்கு முன் தென்னாட்டில் வாழ்ந்த கருப்பு மனிதர் என்ற பொருளில் வழங்கும் கால அல்லது கோல என்ற வடமொழிச் சொல்லினின்றும் வந்தது என்பர் சிலர் ; சோளம் விளையும் நாடு சோளநாடு"; அது சோழநாடு என ஆயிற்று என்பர் மற்றும் சிலர் ; திருடன் என்ற பொருளில் வழங்கும்

“சோரன்” என்ற சொல்லிலிருந்து, சோழன் என்ற சொல் வந்தது என்பர் வேறு சிலர்.”[5] இத்தகு சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் நற்றிணையில் 11 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதினொரு பதிவுகளையும் சோழனின் வீரம், சோழனின் புகழ், சோழனுக்கும் பழையனுக்கும் உள்ள உறவுநிலை, சோழனின் அறம் என நான்கு பொருண்மைகளில் அடக்கலாம்.

**சோழனின் வீரம்**

பொருள் காரணமாகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றுவிட்டான். தலைவி புலம்புகின்றாள். ஊரார் அவளைப் பழிதூற்றுகின்றனர். இது கண்ட தோழி ஊராரின் பழிச் சொல்லிற்கு ஆளாக்கிய தலைவனைப் பழித்துப் பேசுகின்றாள். அப்பழிப்புரையைப் பொறுக்காத தலைவி,

“நட்டனர் வாழி தோழி குட்டுவன்
அகப்பா அழிய நூறிச் செம்பியன்
பகல்தீ வேட்ட ஞாட்பினும் மிகப்பெரிது
அலரெழச் சென்றனர் ஆயினும் மலர்கவிந்து” (14:3-6)

என்றுரைக்கின்றாள். தலைவனின் பிரிவினை எண்ணித் தலைவி புலம்பிய புலம்பல் ஊர் முழுவதும் அலராக எழுந்தது. இவ்அலர் சேரவேந்தனின் கழுமலம் எனும் ஊரினைச் சோழ வேந்தனான கிள்ளிவளவன் தீ இட்டு எரித்தான் அல்லவா அதைக் காட்டிலும் பெரிய பழிச் சொல் நமக்கு ஏற்படாது தோழியே! ஆகவே தலைவனைப் பழித்துப் பேசாதே என்பதாக மாமூலனார் பதிவுசெய்துள்ளார். இப்பதிவின் வழிப்பெருநில வேந்தனை சேரனுக்கும் சோழவேந்தனான கிள்ளிவளவனுக்கும் இடையே நிகழ்ந்த போர் நிகழ்வினைப் பற்றி அறியமுடிகின்றது.

**சோழனின் புகழ்**

பொருள் தேடுதலில் விருப்பமுற்று நிற்கும் தன் நெஞ்சிற்குத் தலைவன், உனக்கு வேண்டுமானால் அரிய பாலைவழி எளிதாய் இருக்கலாம், எனக்கு என் தலைவியின் கூந்தலில் துயில் கொள்வதுதான் பெரிது; இன்பம். ஆகையால், நீ சென்று வருவாயாக எனச் செலவழுங்குகிறான்.

பகைவர்களைக் கொள்ளக் கூடிய தேர்ப்படைகளையும், பெரிய துதிக்கையையும் தந்தங்களையும் உடைய யானைப்படைகளையும் உடையவன் கிள்ளிவளவன். "கிள்ளி என்பது தோண்டுதல் எனப் பொருள் தரும் 'கிள்' என்ற சொல்லடியாகப் பிறந்ததாம் ; வளவன் என்பது, காடு கொன்று நாடாக்கிக் குளம்தொட்டு வளம் பெருக்கியோர் அல்லது வளம் மிக்க நாட்டை ஆள்வோர் என்ற பொருளில் வழங்குவதாம்"[6] என்பர் கா.கோவிந்தன். கிள்ளிவளவனுடைய அம்பர் எனும் நகரம் புதிதாய் அலங்கரிக்கப்பெற்று உயர்ந்த கொடிகளுடன் விளங்கும். இவ்வூரைச் சூழ்ந்த அரிசிலாற்றின் தெளிந்த கருமணல் போன்றது தலைவியின் விரிந்த கூந்தல் என்பதனை,

"பாண்டிலொடு பொருத பல்பிணர்த் தடக்கை
ஏந்துகோட்டு யானை இசைவெம் கிள்ளி
வம்புஅணி உயர்கொடி அம்பர் சூழ்ந்த
அரிசில்அம் தண்அறல் அன்ன, இவள்
விரியொலி கூந்தல் விட்டுஅமை கலனே" **(141:8-12)**

என்னும் இப்பாடல் விளக்கும்.

இப்பாடல் தலைவியின் கூந்தல் அழகினை வருணிப்பதற்குச் சோழ மன்னனான கிள்ளி வளவனுடைய அம்பர் நகரின் ஆற்றின் மணலை உவமையாக் கையாண்டுள்ளார் சல்லியங் குமரனார்.

**சோழனுக்கும் பழையனுக்கும் உள்ள உறவுநிலை**

ஊரார் அறியும் முன் இப்பாலை வழியைக் கடந்து செல்லுமாறு தோழி, தலைவியைத் தலைவனோடு உடன்போக்குகின்றாள். இத்தலைவி முதுமை எய்தாலும் இறுதிவரை காக்கும் பொறுப்பு உன்னுடையது என்பதை,

"நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்

நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர ;

இன்கடுங் கள்ளின் இழையணி நெடுந்தேர்க்

கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்

வெண்கோட்டு யானைப் போஓர் கிழவோன்

பழையன் வேல்வாய்த் தன்னநின்

பிழையா நன்மொழி தேறிய இவட்கே"

எனத் தலைவனிடம் அறிவுறுத்துகின்றாள். அழகிய தேரையுடைய சோழன் தன் பகைவனான கொங்கரை அடக்கி வைக்க எண்ணினான். இக் "கொங்கன் என்பது சேரனின் பட்டப் பெயராகத் திவாகரத்திற் கூறப்பட்டுள்ளது"[7] என்பர் மொ.அ.துரை அரங்கசாமி. ஆக கொங்கன் எனும் பெயருடைய கொங்கர் சேரவழியினர் என்பது இதன் வழிப் புலனாகின்றது. இக்கொங்கரை அழிக்கவே சோழன் போஓர் எனும் ஊரின் தலைவனான பழையனைத் தன் படைத்தலைவனாக்கிக் கொண்டான்.

ஏனெனில் இப்பழையனின் வேல்குறி ஒருபோதும் தவறியதில்லை. அதுபோல உன் பிழையாத நல்ல சொல்லைக் கேட்டு வரும் தலைவியை ஒருபோதும் கைவிடாதே எனத் தோழி அறிவுறுத்துவதுபோலப் பெருநில வேந்தனான சோழனுக்கும் குறுநில மன்னனான பழையனுக்கும் உள்ள இணக்கமான உறவுநிலையைப் பதிவுசெய்துள்ளார் பெயரில்லாச் சங்கச் சான்றோர்.

**சோழனின் அறம்**

தன்னைப் பிரியும் தலைவனிடம் சென்று பரத்தை, உன்னைத் தவிர என்னிடம் அன்புகாட்டுவார் யாருமில்லை ஆதலால் நீ எங்கு சென்றாலும் என்னை மறவாதே எனப் புலம்புதலைப் புவலவர், பின்வரும் பாடல் வழிப் புலப்படுத்துகிறார்.

"மறம்கெழு சோழர் உறந்தை அவையத்து,

அறம்கெட அறியா தாங்குச் சிறந்த

கேண்மையொடு அளைஇ நீயே

கெடுஅறி யாய்என் நெஞ்சத் தானே" (400:7-10)

எனப் பரத்தை புலம்புகின்றாள். 'கி.பி.81-96ல் எழுதப்பெற்ற "பெரிபுளூஸ் மாரிஸ் எரித்ரியா" என்ற நூலில், கொற்கையை அடுத்து, கடலைச் சார்ந்து, "கடற்கரைநாடு" என ஒன்றும், "ஆற்கரு" என்ற உள்நாடு ஒன்றும் இருப்பதாகக் கூறப்பெற்றுள்ளது. இவையிரண்டும் முறையே, கடலைச் சார்ந்து விளங்கிய புகாரையும், உள்நாட்டு ஊராகிய உரையூரையும் தலைநகர்களாகக் கொண்டு அமைக்கப் பெற்ற இரு சோழ அரசுகளைக் குறிக்கின்றன என்பதில் சிறிதும் ஐயமில்லை.

மேலும், அரைநூற்றாண்டு கழித்து வாழ்ந்த மற்றொரு நில நூல் பேராசிரியராகிய தாலமி என்பார், காவிரி கடலோடு கலக்குமிடத்தில் இருக்கும் காவிரிப்பூம் பட்டினத்தைக் "கபெரீஸ்" எனவும், நாகப்பட்டணத்தை "நிகாமா" எனவும் சோழநாட்டு நகர் உறையூரை "ஒர்துரா ரெகியா சோரநடி" எனவும் அறிந்து தம் நூலில் குறித்துள்ளார்."[8] இத்தகு வரலாற்றுச் சிறப்பு மிக்க சோழ வேந்தனின் உறையூர் அவையில் அறம் எவ்வாறு நீங்காமல் நிலைத்து நிற்குமோ அதைப்போலப் பரத்தையின் நெஞ்சில் தலைவன் நீங்காமல் நிற்பான் என உவமையாகப் பதிவு

செய்துள்ளார் ஆலங்குடி வங்கனார். இப்பதிவின் வழி உறையூரை ஆண்ட சோழ வேந்தனின் பிறழாத செங்கோல் தன்மையினையும், அவனின் ஆளுமைத் தன்மையினையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

**பாண்டியர் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

"பாண்டிய வேந்தருடைய பழம்பெரும் சிறப்புகளுள் அன்னோர் சங்கங்கள் நிறுவித் தமிழ் வளர்த்த சிறப்பே தலையாயதாம். இறையனார் அகப்பொருளுரைப் பாயிரத்தினாலும், சிலப்பதிகாரத்து வேனிற்காதை முதலிரண்டு அடிகளுக்கு அமைந்த அடியார்க்கு நல்லாருரையினாலும் அறிய வருகின்ற முச்சங்க வரலாற்றுள் தலைச்சங்க காலத்துப் பாண்டியர் காய்ச்சின வழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன் பதின்மரென்றும், இடைச்சங்கத்துப் பாண்டியர் வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமாறன் முடிய ஐம்பத்தொன்பதின்மரென்றும் கடைச்சங்க காலத்துப் பாண்டியர் முடத்திருமாறன் முதல் உக்கிரப்பெருவழுதி முடிய நாற்பத்தொன்பதின்மரென்றும் அறிகின்றோம்."[9] இத்தகு தொன்மைவாய்ந்த பாண்டியர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் நற்றிணையில் 10 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பத்துப் பதிவுகளையும் பாண்டியனின் வீரம், பாண்டியனின் புகழ்மாலை, பாண்டியனின் ஊர்ச்சிறப்பு, பாண்டியனின் ஆளுமை என நான்கு பொருண்மைகளில் அடக்கலாம்.

**பாண்டியனின் வீரம்**

தலைவியைப் பிரிந்த தலைவன் குறித்த காலத்தில் வரவில்லை. அதனால் தலைவி பெரிதும் துன்பப்படுகின்றாள். இதனைக் கண்ட தோழி

"ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்த

வேல்கெழு தானைச் செழியன்பாசறை

உறைகழி வாளின் மின்னி, உதுக்காண்

நெடும்பெருங் குன்றம் முற்றிக்

கடும்பெயல் பொழிவும் கலிகெழு வானே" *(387:7-11)*

எனத் தலைவியை ஆற்றுவிக்கின்றாள். பகைவர் அஞ்சுமாறு போரில் வென்று ஆலங்கானத்தில் தங்கியவன் வேற்படை பொருந்திய பாண்டியன் நெடுஞ்செழியன். இவனது பாசறை வீரர்களின் உறையிலிருந்து உருவிய வாள் மின்னலைப் போல் வெளிவந்து பகைவர்களின் குன்றத்தினைச் சூழ்ந்து இடிமுழக்கம் செய்ததால் மேகங்கள் மழையைப் பொழிந்தன. இந்த மழையைக் கண்ட தலைவன் கார்காலம் வந்துவிட்டதென எண்ணி விரைவில் உன்னிடம் வருவான். நீ இழந்த அழகினை மீண்டும் பொலிவுறுமாறு செய்வான் என்று தோழி கூறுவதாகப் பொதும்பில்கிழார் மகனார் பதிவுசெய்துள்ளார். இப்பதிவு பாண்டியன் நெடுஞ்செழியனின் படைவீரர்கள் மின்னல் போல் ஒளி வீசும் வாளினைக் கொண்டு இடி முழங்குவதுபோல் போர் செய்யக் கூடியவர்கள் என்பதனைப் புலப்படுத்துகின்றது.

## பாண்டியனின் புகழ்

தலைவியைப் பிரிந்து பொருள் தேடச் செல்வதா? அல்லது தலைவியுடன் கூடி மகிழ்வதா? என்ற மனக்கலக்கத்துடன் தலைவன்,

"பற்றாய் வாழி, எம்நெஞ்சே! நல்தார்ப்

பொற்றேர்ச் செழியன் கூடல் ஆங்கண்

ஒருமை செப்பிய அருமை, வாள்முகை

இரும்போது கமழும் கூந்தல்

பெருமலை தழீஇயும்நோக்கு இயையுமோ மற்றே?" *(298:8-12)*

எனத் தலைவன் தன் நெஞ்சிற்குரைப்பது போல் அமைகிறது.

பொன்னாலாகிய தேரையுடைய பாண்டியனின் கூடல் நகரில், பெரிய மலைக்குன்றுகள் உள்ளன. அம்மலைக் குன்றுகளில் அரும்புகள் மலர்ந்து மணம் கமழும். இத்தகு மணம் கமழக்கூடிய கூந்தலையுடைய தலைவியைவிட்டுப் பொருள் தேடப் பிரிந்து சென்றால் மீண்டும் அத்தலைவியைப் பார்க்கும் வாய்ப்புக் கிட்டுமோ, கிட்டாதோ எனத் தலைவன் தன் நெஞ்சிற்குரைப்பதாக விற்றூற்று வண்ணக்கன் தத்தனார் பதிவுசெய்திருக்கிறார். இப்பதிவின்வழிப் பாண்டிய மன்னனின் கூடல்நகரிலுள்ள மலைக்குன்றுகள் பெரிது என்பதை அறியமுடிகின்றது.

**பாண்டியனின் ஊர்ச்சிறப்பு**

தலைவியை விட்டுப் பிரிந்த தலைவன் சிறிது காலம் பரத்தையோடு கூடி மகிழ்ந்திருந்தான். பின்பு மீண்டும் தலைவியை நாடிவந்த தலைவனை,

"புல்லேன் மகிழ்ந! புலத்தலும் இல்லேன்
கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்
படைமாண் பெருங்குளம் மடைநீர் விட்டென
..................................................................
..................................................................
வாணன் சிறுகுடி அன்னஎன்
கோல்நேர் எல்வளை நெகிழ்த்த நும்மே" **(340:1-10)**

என இடித்துரைப்பதாக அமைந்த இப்பாடலில் விரைந்து செல்லும் யானைப் படைகளையும், குதிரைப்படைகளையும் உடையவன் பாண்டியன் நெடுஞ்செழியன். இச்செழியனின் ஊர் சிறுகுடியாகும். இச்சிறுகுடியின் வனப்பும் வளமையும் போல் இருந்த என் அழகிய உடல் உன் அறிவற்ற செயலால் மெலிந்தது எனத் தலைவி உரைப்பதன் வழிப் பாண்டியனின் சிறுகுடி எனும் ஊர் வளமையுடையதாக இருந்திருக்கின்றது என்பதை அறிய

முடிகின்றது. இச்செழுமையான ஊரினை நக்கீரர் கண்டதன் வாயிலாகத் தலைவியின் உடல் மெலிவிற்கு உவமையாகக் கூறியுள்ளார்.

### பாண்டியனின் ஆளுமை

பாணனே! வேறுஒரு பரத்தையை நாடி, என்னிடமிருந்து பிரிந்து சென்ற தலைவன் மீண்டும் என்னிடம் வருவதற்கு உன்னைத் தூது அனுப்பியுள்ளான். இச்செயலை நான் மன்னிக்கலாம் என் தாய் நம்பிக்கைத் துரோகம் செய்தவரை மன்னிக்கமாட்டாள், மாறாகத் தண்டிப்பாள். அதனால் தலைவன் கண்டோர் சிரிப்பிற்கும் ஏளனத்திற்கும் ஆளாவான் என்பதை,

"அரண்பல கடந்த முரண்கொள் தானை

வழுதி வாழிய பலஎனத் தொழுதுஈண்டு

மன்எயில் உடையோர் போல அஃதுயாம்" (150:3-5)

என்று பரத்தைப் பாணனிடம் அறிவுறுத்துகின்றாள். பகைவர்களின் மதில்களை அழிக்கக் கூடிய யானைப் படைகளை உடையவன் பாண்டியன். இப்பாண்டியனைக் குறுநில மன்னர்கள் வீரம் பொருந்திய பாண்டியன் என வாழ்த்தி வணங்க வேண்டும். இல்லையேல் அக்குறுநில மன்னர்களின் நாடு, நகரங்கள் அழிக்கப்படும் எனும் இப்பதிவில் குறுநில மன்னர்கள் பெருநில வேந்தர்களின் ஆணைக்குக் கட்டுப்பட்டு ஆட்சி புரிந்துள்மை நன்கு புலனாகின்றது.

### குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

பழந்தமிழகத்தில் பெருநில வேந்தரையும் வேளிரையும் அடுத்து மொழியப் பெறுவோர் குறுநிலமன்னர்கள். இம் மன்னர்கள் ஆங்காங்கே அமைந்த குறுநிலங்களையும், மலைகளையும் தங்களுடைய எல்லையாக வைத்து அரசாண்டனர். இம் மன்னர்கள் தத்தம் நிலங்களை ஆண்ட பெருநில

வேந்தனின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து அவர்களின் படைகளில் வீரர்களாகவும் படைத்தலைவர்களாகவும் விளங்கியுள்ளனர். ஒருசில குறுநில மன்னர்கள் பெருநில வேந்தர்களின் ஆணைக்குக் கீழ்ப்படியாமல் எதிர்த்து நின்று வென்றவரும், மாண்டவரும் உண்டென்பதைச் சங்க இலக்கியங்கள் நமக்குச் சான்று பகர்கின்றன. அவ்வகையில் நற்றிணையில் **25** குறுநில மன்னர்களைப் பற்றி **36** இடங்களில் வரலாற்று நிகழ்வுகள் உவமையாகப் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அத்துணையையும் வல்வில் ஓரியின் வீரம், தழும்பனின் புகழ், அஞ்சின் கொடை, மலையமானுக்கும் பெருநிலவேந்தருக்கும் உள்ள உறவுநிலை என்ற நான்கு பொருண்மைகளில் அடக்கலாம்.

**வல்வில் ஓரியின் வீரம்**

இரவு நேரத்தில் தலைவியைக் காணவந்த தலைவன் தோழிக்குக் கேட்கும்படித் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

"எய்தச் சென்று செப்புநர்ப் பெறினே,
இவர்யார் என்குவள் அல்லள், முணாஅது
அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி
எறிமட மாற்கு வல்சி யாகும்
வல்வில் ஓரி கானம் நாறி
இரும்பல் ஒலிவருங் கூந்தல்
பெரும்பே துறுவள்யாம் வந்தனம் எனவே" (6:5-11)

தலைவனுக்காகக் காத்திருந்த தலைவியின் அழகுநலன்கள் அனைத்தும் குன்றிவிட்டதாகப் பரணர் பட்டியலிடுகின்றார். நார் உரித்த ஆம்பலின் திரண்ட தண்டைப்போன்ற நிறமும் குவளை மலர் போன்ற குளிர்ச்சியுடைய கண்களையும் பெரிய தோள்களையும் உடையவள் தலைவி.

இவளின் கூந்தல், வல்வில் ஓரியின் காடானது குமிழமரங்கள் நிறைந்து மணம் கமழ்வதைப் போன்று மணம் கமழக்கூடியது. அத் தலைவியின் கூந்தல் எனப் பரணர் பதிவுசெய்துள்ளார்.

"வில்லோர் என்ற சொல் பொதுவாக வில்லேந்திய வீரர்களைக் குறிக்குமாயினும் தங்கள் கொடியில் வில்லுருவம் பொறித்துக் கொண்ட சேரரையே அது சிறப்பாகக் குறிக்கின்றது. பெருமகன் என்ற சொல் வில்லோர் என்னும் சொல்லோடு இணைக்கப்பட்டிருத்தலால், வில்லோர் என்பது ஒரு குடியினரைக் குறிக்கிறது என்பதில் ஐயமில்ல. இது சேரர் குடியின் ஒரு கிளைக்குடி எனலாம்"[10] என்பர் மொ.அ.துரைஅரங்கசாமி. இக்குடியினர் தங்களது பெயருக்கு ஏற்பத் தலைமுறை தலைமுறையாகச் சிறந்த வில் வீரர்களாக விளங்கினர் என்பதற்கு,

"வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறிது உறீஇப்
புழல்தலைப் புகர்க்கலை உருட்டி, உரல்தலைக்
கேழல் பன்றி வீழ அயலது
ஆழல் புற்றத்து உடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத்து இருந்தோன்
புகழ்சால் சிறப்பின் அம்புமிகத் திளைக்கும்
கொலைவன் யார் கொலோ? கொலைவன் மற்றுஇவன்
விலைவன் போலான் வெறுக்கைநன் குடையன்
ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பில்
சாரல் அருவிப் பயமலைக் கிழவன்
ஓரி கொல்லோ?"[11]

என்ற புறநானூற்றுப் பாடல் சான்று பகர்கின்றது.

**தழும்பனின் புகழ்**

களவு ஒழுக்கத்தில் ஈடுபட்ட தலைவன் தலைவியைத் திருமணம் செய்து கொள்வதில் கவனம் செலுத்தாமல் காலந்தாழ்த்தினான். ஆதலால் தோழி,

“நீயும்தேரொடு வந்து போதல் செல்லாது
நெய்வார்ந் தன்ன துய்அடங்கு நரம்பின்
இரும்பாண் ஒக்கல் தலைவன் பெரும்புண்
ஏளர் தழும்பன் ஊணூர் ஆங்கண்
பிச்சைசூழ் பெருங்களிறு போல, எம்
அட்டில் ஓலை தொட்டனை நின்மே” (300:7-12)

என்று தலைவனுக்கு அறிவுறுத்துகின்றாள். ஒளி பொருந்திய நரம்புகளால் கட்டப்பெற்ற யாழினை உடைய பாணர்களை ஆதரிப்பவனும் போரில் பெற்ற வீரத்தழும்புகளால் அழகு பெறுபவனுமாகிய தழும்பன் என்பவனது ஊணூரில் பிச்சைக்கு வந்த யானை போல நீ எமது தலைவியைத் தேடிவந்து நிற்கின்றாய் எனப் பரணர் தலைவனின் அக்கறை இல்லா இழிசெயலுக்குத் தழும்பனது ஊரில் பிச்சை எடுக்கும் யானையை உவமையாக்கியுள்ளார்.

சங்கச் சான்றோர் சோழனுக்குக் குறியீடாக வேங்கையையும் சேரனுக்குக் குறியீடாக யானையையும் சங்க இலக்கியத்தில் ஆங்காங்கே பதிவுசெய்துள்ளனர். இப்பதிவின் அடிப்படையில் மேற்குறிப்பிட்ட பாடலை நோக்குவோமானால் யானை தழும்பனின் ஊரில் பிச்சை எடுத்தது என்று ஔவையார் பதிவு செய்திருப்பது சேரர்கள் தழும்பன் எனும் குறுநில மன்னனிடம் உதவி கேட்டுக் காத்து நின்றிருக்கின்றனர் என்பது தெளிவாகின்றது. மேலும் இவ் “ஊணூர்க்கண், கொடையும், கொற்றமும் குறைவறப்பெற்ற குரிசில் ஒருவன் வாழ்ந்திருந்தான், வாட்போர் வல்லனாய

அவ்வீரன், தான் மேற்கொண்டபோர் ஒன்றில், பெண்யானையால் மிதியுண்டு பெரும்புண் பெற்றான்; அப்புண் தந்த தழும்பு, பெரிய வழுதுணங்காய் அளவு பரிதாதல் கண்ட மக்கள், அவனை வழுதுணைத் தழும்பன் என்று பெயரிட்டுப் பாராட்டினர்”[13] என்பர் கா.கோவிந்தன்.

**அஞ்சியின் கொடை**

கார்காலத்தில் வருவதாகக் கூறிப் போர்க்களம் சென்ற தலைவன் உரிய பருவம் வந்தும் வரவில்லை ஆதலால் தலைவி,

“................................ ஓங்கு செலல்
கடும்பகட்டு யானை நெடுமான் அஞ்சி,
ஈர நெஞ்சமோடு இசைசேண் விளங்கத்
தேர்வீசு இருக்கை போல
மாரி இரீஇ மான்றன்றால் மலையே” (381:6-10)

எனப் புலம்புகின்றாள்.

யானைப் படையினையும் குதிரைப் படையினையும் உடைய அஞ்சியின் புகழ் நெடுந்தொலைவிற்குப் பரவியிருந்தது. ஆதலால் தன்னை நாடிவந்த வறியவர்களுக்கும் புலவர்களுக்கும் தேரைப் பரிசாகக் கொடுத்தான். இத்தகு அரும்பெரும் கொடைச் செயலைச் செய்யும் அரசவையைப் போல மேகமானது நெடுந்தொலைவிலிருந்து வந்து ஓர் இடத்தில் சூழ்ந்து மழையைப் பொழிந்தது. இத்தகைய மழைபெய்யும் கார்காலத்தில் வருவதாகச் சொல்லிச் சென்ற தலைவன் வரவில்லை என்று தலைவி புலம்புவதாக ஔவையார் பதிவுசெய்துள்ளார்.

தலைவி தலைவனின் வருகைக்குக் காத்திருக்கும் கார்கால அடைமழையைப் போன்றது, அஞ்சியின் அளவிடமுடியாத

கொடைத்தன்மை என்பதனைக் குறிப்பாகச் சுட்டியுள்ளார். கடையெழு வள்ளல்களில் சிறப்பாகக் குறிப்பிடப் பெறும் இவ்அஞ்சி குறித்து, சேலம் மாவட்டத்துத் தர்மபுரி, பண்டு தகடூர் எனும் பெயர்க் கொண்டு விளங்கிற்று; தகடூரைத் தலைநகராகக் கொண்டு, சேலம் மாவட்டத்தின் வடபகுதியை ஆண்டு வந்தனர் அதியர் என்ற குறுநில அரசர்கள். அவ்வதியர், சேர மரபினரோடு உறவுடையவர் ; அதனால், "போந்தை வேம்பே, ஆர் என வருவம் மாபெருந்தானை மலைந்தபூவும்" எனக் கூறியவாறு, அச்சேரர்க்கு உரித்தெனப்பட்ட பனந் தோட்டையே இவர்களும் மாலையாகப் பெற்றிருந்தனர் ; கொல்லிக் கூற்றமும், குதிரை மலையும் இவர்க்கு உரியவாய் இருந்தன. கி.பி. இரண்டாம் நூற்றாண்டு எனப்படும் சங்க காலத்தே வாழ்ந்த இவர்கள் கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டிலும் விசயாலயன் வழிவந்த பிற்காலச் சோழர்களுக்குத் துணைவர்களாக விளங்கினர் என அறியப்படுதலால், இவர்களும் மூவேந்தர்களைப் போன்றே நெடிதாண்ட பெருமரபினர் என்பது புலனாகும்"[12] என்பர் கா.கோவிந்தன்.

## மலையமானுக்கும் பெருநில வேந்தருக்கும் உள்ள உறவுநிலை

தலைவன், பரத்தையை விடுத்துத் தலைவியின் இல்லத்திற்குச் சென்றான். அதனை விரும்பாத பரத்தை,

"பல்லா நெடுநிரை வில்லின் ஒய்யும்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
புலம்பிரி வயிரியர் நலம்புரி முழுவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்ன ராளன் நடுங்குஅஞர் நிலையே" (100:8-12)

என்று தலைவிக்கு வேண்டிய தோழி கேட்கும்படி உரைத்தாள். பகைவர்களின் ஆநிரைகளைக் கவர்ந்துவரும் ஆற்றல் படைத்தவனாகவும்,

இரவலர்களுக்குத் தேரைப் பரிசாக வழங்கும் வளமை படைத்தவனாகவும் விளங்குபவன் மலையமான். இம்மலையமானின் அரசவையில் வைக்கப்பெற்றிருக்கும் முரசினை முழங்கினால் எப்படி அதன் மறுபக்கம் அதிருமோ அதைப்போல நான் கூறியதைக் கேட்டு அதிர்ந்து நின்றான் தலைவன் என்பதனைப் பரணர் மலையமானின் முரசு அதிர்வுக்கு உவமையாக்கியுள்ளார். *மலையமான் குடிவழி பற்றி, தென்பெண்ணையாற்றங் கரையிலுள்ள திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு அதனைச் சூழ்ந்த மலைநாட்டை ஆண்டிருந்த அசமரபினர் மலையமான்கள்.*"[14] "சேரநாட்டுத் தலைநகரிலிருந்து மிகவும் எட்டியதாய் அந்நாட்டு எல்லைப்புறத்தே இருந்தமையால், இம்மலையநாடு அவ்வக்காலத்து ஆட்சியாளர்களின் வன்மை மென்மைக் கேற்பச் சேரநாட்டோடேயிருந்தும் அண்டை நாடான சோழநாட்டோடே சேர்ந்தும் ஆட்சி மாற்றம் அடைய நேர்ந்தது. ஆதலால் இம்மலையமான்களும் ஒரு நிலையின்றிச் சேரவேந்தர்க்கும் சோழ வேந்தருக்கும் அவரவர் வன்மைக்கேற்ப அவ்வக்காலங்களில் அடங்கியாண்டனர்"[15] என்பர் வ.குருநாதன்.

**குறுந்தொகை**

சங்க இலக்கியங்கள் கடைச்சங்க காலத்தின் இறுதிக் காலக்கட்டத்தில் தொகுக்கப் பெற்று 'பா'வகையாலும் 'பொருள்' வகையாலும் 'அடிவரையறை'யாலும் பாகுபாடு செய்து பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என இருபெரும் பிரிவாகப் பகுக்கப் பெற்றுள்ளன. இப்பிரிவின் ஒரு பகுதியான தொகைநூல்களில் "குறைந்த அளவையுடைய குறுந்தொகையை முதலிற் செப்பஞ் செய்தார்களென்று கொள்வது ஒருவகையில் இயல்புடையதாகவே தோற்(ன்)றுகின்றது"[16] என்பர் உ.வே.சாமிநாதையர்.

இந்நூலினைத் தொகுப்பித்தார் இன்னார் என்று தெரியவில்லை. பூரிக்கோ என்பவரின் ஆதரவால் தொகுக்கப்பெற்றது. 10 பாடல்களின் ஆசிரியர் பெயர் இன்றி 205 புலவர்பெருமக்களால் பாடப்பெற்று 'நல்லகுறுந்தொகை' எனும் அடைமொழியை ஏற்று சிறந்து விளங்கும் இந்நூல் "எண்பத்தேழு மரஞ்செடிகொடிகளைப் பற்றியும், இருபத்தைந்து வள்ளல்களைப் பற்றியும், ஆறு (6) மலைகளைப் பற்றியும், இரண்டு ஆறுகளைப் பற்றியும், ஒன்பது ஊர்களைப் பற்றியும்"[17] குறிப்பிடுகின்றது.

தலைவன், தலைவிக்கிடையேயான களவு, கற்பு ஆகிய அகத்திணை ஒழுக்கங்களைக் குறுந்தொகைப் புலவர்பெருமக்கள் அழகுற எடுத்துரைப்பதற்கு 174 உவமைகளைக் கையாண்டுள்ளனர். இவ்வுமைகளில் ஆங்காங்கே வரலாற்று நிகழ்வுகளையும் பதிவுசெய்துள்ளனர்.

இப்பதிவுகளில் சேரர் குறித்து மூன்று பாடல்களிலும், சோழர் குறித்து ஒரு பாடலிலும், பாண்டியர் குறித்து ஒரு பாடலிலும் குறுநில மன்னர்கள் குறித்து 23 பாடல்களிலும் வரலாற்று நிகழ்வுகள் பதிவு செய்யப்பெற்றுள்ளன (விவரம் : பின்னிணைப்பு - 2).

**சேரர் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

"செந்தமிழ் வேந்தர் மூவருள், சேரர் சிறந்தவராவர் என்ற கொள்கை, பழங்கால மக்களிடையேயும், அக்காலப் புலவர்களிடையேயும் நிலவியிருந்தது என்பர்"[18] கா.கோவிந்தன். இத்தகுச் சிறப்புக்குரிய சேரவேந்தர் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் குறுந்தொகையில் மூன்று பாடல்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இம்மூன்று பதிவுகளையும் தொண்டி நகரின் சிறப்பு, காரிக்கும் பொறையனுக்கும் உள்ள உறவுநிலை எனும் இருபொருண்மைகளில் அடக்கலாம்.

### தொண்டி நகரின் சிறப்பு

அல்ல குறிப்பட்டு மீளும் தலைவன் தன் நெஞ்சிடம்,

"குணகடற் திரையது பறைதபு நாரை

திண்தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை

அயிரை ஆரிரைக் கணவந் தாங்குச்

சேயன் அரியோள் படர்தி

நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே" (128:1-5)

என்று வருத்தம் கொள்கிறான். நுளைச்சியர் காவலில் வைக்கப் பெற்றுள்ள அயிரை மீனை உணவாக உட்கொள்ளத் தொண்டித் துறைமுகத்திலுள்ள கிழநாரை ஆசை கொள்வதைப் போல, ஆயத்தாரின் காவலில் உள்ள தலைவியைப் பெறுவதற்கு நெஞ்சே நீ ஆசை கொள்கிறாய் எனத் தலைவன் தன் நெஞ்சிற்குரைப்பது போல் பரணர் பதிவு செய்துள்ளார்.

இப்பதிவில் குறிப்பிடப் பெறும் தொண்டி திண்டேர்ப் பொறையன் தொண்டி (அகநா.60; நற்.8) குட்டுவன் தொண்டி (அகநா.290, ஐங்.178) என்று புலவர் பலராலும் சேரர்க்குரியதாகப் பாடப்பெறுவதால் அச்சேரவேந்தர் பலரும் தனித்தனியே 'தண் தொண்டியோர் அடுபொருந' (புறநா.17) 'வளைகடல் முழவின் தொண்டியோர் பொருந' (பதி.88), 'கானலந்தொண்டிப் பொருநன்' (நற்.18) என்றெல்லாம் அத்தொண்டி வேந்தராகக் குறிக்கப் பெறுகின்றனர். அம்முறையில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கும் பதிகப்பாடல் தொடர்புறுத்தும் தொண்டி நகரே தலைநகராக இருந்திருத்தல் வேண்டும்.

### காரிக்கும் பொறையனுக்கும் உள்ள உறவுநிலை

தலைமகன் சிறைப்புறத்தானாக நிற்பதைக் கண்ட தோழி, பாங்காயினர் கேட்பச் சொல்வது போல் தன்னுள்ளே சொல்லிக் கொண்டு

தலைவனை அறிவுறுத்துகின்றாள்.

"பெரும்பூண் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
கருங்கட் தெய்வம் குடவரை எழுதிய
நல்இயல் பாவை அன்னஇம்
மெல்இயல் குறுமகள் பாடினள் குறினே" (89:4-7)

மேற்குத் தொடர்ச்சி மலைக்கண் கொல்லி என்றொரு மலையுண்டு, இம்மலை வல்வில் ஓரி எனும் குறுநில மன்னனுக்குரியது. காரி எனும் குறுநிலமன்னன் ஓரியைக் கொன்று இம்மலையை "ஏழரசரை வென்று அவர் ஏழு முடியானும் ஆக்கிய பெரும்பூண் அணிந்த"[19] பொறையனுக்குக் கொடுத்தான். இம்மலையின் மேற்குப் பகுதியில் கொல்லிப் பாவை ஒன்று உள்ளது. இப்பாவை "காற்று மோதியடித்தாலும் மழை விரைந்து வீசினாலும், இடி சினந்து முழங்கி மோதினாலும் இவைபோலும் பிற ஊறுபாடுகள் ஒருங்கு வந்து உறுத்தினாலும், உலகமே உருத்தெழுந்து எதிர்த்தாலும் தன் இயல்பில் இம்மியும் குறையாது"[20] இத்தகு சிறப்பு வாய்ந்த கொல்லிப்பாவைக்கு இணையானவள் தலைவி எனப் பரணர் பதிவுசெய்திருப்பதின் வழி, குறுநில மன்னர்கள் தங்களுக்குள் ஓர் இணக்கமான உறவில்லாமல் பெருநில வேந்தர் மரபினைச் சார்ந்தே இருந்திருக்கின்றனர் என்பது வெளிப்படையாகத் தெரிகின்றது.

## சோழர் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

'தென்னாட்டு நெற்களஞ்சியம் சோழநாடு' என்ற சிறப்பினை இன்று பெற்றிருப்பதை போல அன்றும் பெற்றிருந்தது என்ற உண்மைக்கு,

"சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கும் நாடு"[21]

என்று பொருநராற்றுப்படையும்,

> "ஒருபிடி படியும் சீறிடம்
>
> எழுகளிறு புரக்கும் நாடு"[22]

என்று புறநானூறும் சான்று பகர்கின்றன. இத்தகு நீர் வளமிக்க சோழநாட்டை ஆண்டவர்கள் சோழர்கள். இச்சோழர்கள் பற்றிக் குறுந்தொகை 116 வது பாடலில் உறையூரின் சிறப்புப் பற்றிய வரலாற்று நிகழ்வினை இளங்கீரனார் பதிவு செய்துள்ளார்.

> "வளம்கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை
>
> நுண்மணல் அறல் வார்ந்தன்ன,
>
> நல்நெறியவ்வே, நறுந் தண்ணியவே" (116:2-4)

இயற்கைப் புணர்ச்சியில் தலைவன், தலைவியின் கூந்தலில் துயின்றமையை நினைத்து அக்கூந்தலின் சிறப்புகளை வருணிக்கின்றான். வண்டுகள் வந்து மொய்க்கக் கூடிய வளப்பம் மிகுந்த தலைவியின் கூந்தல் சோழனின் உறையூர் துறைமுகத்தைப் போல குளிர்ச்சி பொருந்தியனவாகவும் நுண்ணிய மணல்களுக்கிடையே ஒழுகுகின்ற கருமணலைப் போன்ற நெறியனவாகவும் இருந்தமையைப் பாராட்டுகின்றான். "சோழர் தலைநகர்களுள் மிக மிகப் பழமையானதாம் ; இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் காலத்தில் சோழர்க்குத் தலைநகராய் விளங்கியது உறையூர் ஒன்றே ; மூவேந்தர் தலைநகரைக் குறிப்பிடுங்கால், "வஞ்சியும் வறிதே"; "மதுரையும் வறிதே," "உறந்தையும் வறிதே," எனச் சோழர் தலைநகராகிய உறந்தை ஒன்றையே குறிப்பிடுதல் காண்க சிலப்பதிகாரம் பாடிய இளங்கோவடிகள் காலத்தே, சோழர் தலைநகர் இரண்டாக விளங்கிற்று; இதை, "மாடமதுரையும், பீடார் உறந்தையும், கலிகெழு வஞ்சியும், ஒலிபுனல் புகாரும்" எனச் சோழர் தலைநகராகப் புகாரையும், உறந்தையையும்

குறிப்பிடல் காண்க. கரிகாலன் காலத்தே, உறந்தை புதுப்பிக்கப் பெற்றது எனப் பட்டினப்பாலை கூறுகிறது. உறந்தைக்குக் கோழி என்றொரு பெயரும் உண்டு ; உறந்தையின்கண் ஓர் அறங்கூர் அவை உண்டு ; அதில் அறம் நின்று நிலைபெறும். உறையூர் புலவர் பலரைப் பெற்ற பெருமை சால் புகழ் உடையது."[23]

## பாண்டியர் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

செந்தமிழ் நிலமாவன வையையாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாம் எனக் கூறுவதையும்,

"முன்னுறுந் தென்பாண்டி முதற்புனல் நாடீறான
பன்னிரண்டு நாடும் அப்பால் நாடே - அந்நாட்டுள்
வையை, கருவை, மருதாறு, மருவூர் நடுவே
ஐயநீ வாழும் அரண்மனையே?"[24]

எனத் தமிழ்விடுதூது கூறுவதையும் ஒப்பு நோக்கினால் தமிழ்ச் சங்கம் தழைத்து வாழ்ந்த பாண்டியநாடே செந்தமிழ் நாடாகும். இச்செந்தமிழ் நாட்டினைச் சிறப்புற ஆண்டவர்கள் பாண்டியர்கள். இப்பாண்டியர்களைப் பற்றிக் குறுந்தொகை 393 வது பாடலில் தோழி அறிவுறுத்துவதாக வரலாற்று நிகழ்ச்சி இடம் பெற்றுள்ளது.

தலைவன் சிறைப்புறத்தானாக நிற்பதை அறிந்த தோழி, தலைவியே நீ விரும்பும் மருதநிலத்தலைவன் உன்னை இறுக அணைத்த நாட்கள் மிகச் சிலவே, ஆனால் அத்தலைவனால் ஏற்பட்ட அலரானது,

"கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறொடு பட்ட ஞான்றை,
ஒளிறுவாட் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே" (393:3-6)

எனத் தோழி தலைவிக்கு ஏற்பட்ட அலரினை எடுத்துரைப்பதாக இப்பாடல் அமைகிறது. ஊரார் தூற்றும் அலருக்குத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் படைத்தலைவன் அதிகனுக்கும் கொங்கச் சேரர்களுக்கும் இடையே நிகழ்ந்த போர் நிகழ்வினை உவமையாக்கிப் பதிவுசெய்துள்ளார் புலவர்.

### குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

சங்க காலத்தில் தமிழகத்தை ஆட்சிபுரிந்த மூவேந்தர்களுக்கு இணையான படைவலிமையுடையவர்கள் குறுநில மன்னர்கள். இக்குறுநில மன்னர்களைப் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் குறுந்தொகையில் 23 பாடல்களில் 26 இடங்களில் பதிவு செய்யப்பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தையும் தொண்டைமானின் வீரம், கட்டியின் வீரமும் சிறப்பும், எழினியின் புகழ், ஆஅய்யின் சிறப்பு, எவ்வியின் கொடைத்தன்மை என ஐந்து பொருண்மைகளில் அடக்கலாம்.

### தொண்டைமானின் வீரம்

போர் காரணமாக உன்னை (தலைவியை) விட்டுப் பிரிந்து சென்ற தலைவன் விரைவில் வரப் போகிறான் போலும் ஏனெனில் நடப்பதெல்லாம் நல் நிமித்தமாகவே நிகழ்கின்றன என்பதை,

"மண்எடுத்து உண்ணும் அண்ணல் யானை
வண்தேர்த் தொண்டையர் வழைஅமல் அடுக்கத்து
கன்றுஇல் ஓர்ஆ விலங்கிய
புன்தாள் ஓமைய சுரன் இறந்தோரே" (260:5-8)

என்று தோழி அறிவுறுத்துகின்றாள்.

பகைவர்களை அழித்து அவர்களின் நிலங்களைத் தமதாக்கிக் கொள்ளும் மேலான யானையையும், வளமான தேரினையும் உடையவன்

தொண்டைமான். இம்மன்னனின் மலையில் சுரபுன்னை மரங்கள் நிறைந்து காணப்படும். இத்தகு சுரபுன்னை மரங்கள் நிறைந்த காட்டு வழியில் சென்ற தலைவர் என்று தொண்டைமானின் மலை உவமையாகச் சிறப்பிக்கப் பெற்றுள்ளது. "இத்தொண்டைமான் மன்னர்கள், காஞ்சிபுரத்தைத் தலைமையிடமாகக் கொண்டு ஆண்டவர்கள் என்பது, பெரும்பாணாற்றுப் படையால் அறியப்படும்."[26] சுரபுன்னை செறிந்த மலைப்பகுதி, வேங்கட நெடுவரையாகும். இப்பாடலைப் பாடியவர் கல்லாடனார். "இவர் செய்த நூல் கல்லாடம்' என்பதாகும். தொல்காப்பியத்திற்கு உரைசெய்தார். தொல்காப்பியத்திற்கு உரையிட்ட விரகர், கல்லாடர் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இந்த உரை இன்றுவரை கிடைக்க வில்லை."[27]

## கட்டியின் வீரமும் சிறப்பும்

தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்து சென்ற ஒவ்வொரு நாளும் தலைவி உறக்கமில்லாமல் அழுது கொண்டிருக்கின்றாள். அதனால் அவள் உடல் மெலிந்து கை வளையல்கள் கழன்று விழுந்துவிட்டது. இனித் தலைவனைப் பிரிந்து இருத்தல் ஆகாது என்றெண்ணிய தலைவி

"குல்லைக் கண்ணி வடுகர் முனையது
வல்வேற் கட்டி நல்நாட்டு உம்பர்
மொழிபெயர் தேஎத்தர் ஆயினும்
வழிபடல் சூழ்ந்திசின், அவருடை நாட்டே" (11:5-8)

எனத் தலைவன் இருக்கும் இடம் நோக்கிச் செல்ல முற்படுகின்றாள். தலைவன் இருக்கும் இடம் எவ்வகைப் பட்டது எனில், கஞ்சங் குல்லையைத் தலைமாலையாக அணியக் கூடியவர் வடுகர். இவ்வடுகருடைய பகைவன் கட்டி எனும் குறுநிலமன்னன். "தமிழகத்தின் வடவெல்லைக்கண் வாழ்ந்த வீரர்களுள் கட்டி என்பானும் ஒருவன்"[25] இவன் வலிய வேற்படையை

உடையவன். சேரனும், சோழனும் பகைகொண்டு, கழுமலம் எனுமிடத்தே படையொடு இருந்தபோது சேரன்படைத் தலைவர்களாகப் பணியாற்றிய நன்னன், ஏற்றை, அத்திகங்கன், புன்றுறை, கணையன் முதலியோருக்குத் துணையாகக் கட்டியும் இணைந்திருந்தான். இப்படிப்பட்ட கட்டி என்பவனுடைய நாட்டிற்கு அப்பால் வேற்று மொழி பேசக்கூடியவர்கள் இருக்கிறார்கள் என்பது புலனாகிறது. இப்பதிவின் வழி கட்டி என்பவன் வலிய வேற்படையை உடையவன் என்பதும் அவன் நாட்டிற்கு அப்பால் வேற்று மொழி பேசக் கூடிய ஒரு நாடு இருந்தது என்பதும் தெளிவாகிறது.

### எழினியின் புகழ்

தலைவி தன்னைப் புறனுரைத்தாள் எனக் கேட்ட பரத்தை சினம் கொண்டு,

*"அஞ்சுவது உடையள் ஆயின், வெம்போர்*
*நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி*
*முனைஆன் பெருநிரை போல,*
*கிளையொடு காக்க தன்கொழுநன் மார்பே" (80:4-7)*

எனச் சூளுரைக்கின்றாள். எத்துணை வலிமையுடையவர் காத்தாலும் எழினி எனும் குறுநில மன்னன் அப்பகைவர்களுடைய பசுக்கூட்டங்களைக் கவர்ந்து செல்வான் என்பது உறுதி. அதைப்போலத் தலைவி தலைவனைத் தன்னிடத்திலிருந்து வெளிவிடாமல் தன்சுற்றத்தாரோடு பாதுகாத்தாலும் ஆம்பல் தழைகளால் புனையப் பெற்ற ஆடையை அணியக் கூடிய பரத்தையர் தலைவனைக் கவர்ந்து செல்லுதல் உறுதி எனப் பதிவுசெய்துள்ளார் ஔவையார்.

"எழினி எனும் பெயருடையார் பலராவர், தகடூர் ஆண்ட அதியமான் நெடுமானஞ்சியும் எழினி என அழைக்கப் பெறுவன் ; அவன் மகன் எழினி

*என அழைக்கப் பெறுவன் ; அதனால், இவன், அவ் அதியர்குடியோடு தொடர்புடையவனாவன் என்பது புலப்படும் ; இவ்வெழினியைப் பாடிய மாமூலனார், இவனுக்குக் கண்ணன் எழினி எனப் பெயர் கொடுத்து அழைப்பர். இவன், திருமுதுகுன்றத்தைத் தன் ஆட்சியிடமாகக் கொண்டு வாழ்ந்திருந்தான்."*[28]

**ஆஅய்யின் சிறப்பு**

*என்னிடம் வெறுப்பைப் புலப்படுத்தி, தலைவனுடன் பாலை நிலத்தின் வழியாக உடன்போக்குச் சென்ற தலைவி,*

*"கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்*

*வேங்கையும் காந்தளும் நாறி,*

*ஆம்பல் மலரினும் தான் தண்ணியளே" (84:3-5)*

*எனச் செவிலித்தாய் புலம்புகிறாள்.*

*"மேலைக் கடற்கரையை அடுத்துப் பொதியில் மலையைச் சூழ அமைந்துள்ள நாடு வேணாடு எனும் பெயருடையதாகும். வடக்கே சேரர்க்குரிய குட்டநாடும், தெற்கே பாண்டியர்க்குரிய தென்பாண்டி நாடும் கிடக்க, இடைப்பட்ட வேணாடு, வேளிர் இருந்து ஆண்ட நாடுகளுள் ஒன்றாகும்; தமிழக மலைகளுள் தலைசிறந்ததாகக் கருப்படும் பொதிய மலையும், அதைச் சூழ உள்ள சிறுநாடும், ஆய்நாடு என்ற பெயரானும் வழங்கப் பெறும்; இற்றைக்கு 1800 ஆண்டுகட்கு முன்னர்த் தமிழகம் போந்து, அந்நாடு முழுதும் சுற்றி, அக்காலத்து நில இயல்புகளையும், அரசியல் நிலைகளையும் பற்றிய நீண்ட குறிப்பொன்று எழுதி வைத்த நிலநூல் பேராசிரியரான தாலமி எனும் யவனாசிரியர் ஆய் நாட்டையும், அந்நாட்டகத்து ஐந்து துறைமுகங்களையும் குறிப்பிட்டுள்ளார்; ஆய்குடி என்ற பெயரானும் வழங்கப் பெறும் ஆய்நாடு, கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டு*

*வரையிலும், தமிழ்நாட்டு அரசியலில் தலைசிறந்த இடம் பெற்றுத் திகழ்ந்தது."*[29]

**எவ்வியின் கொடை**

*எவ்வி எனும் வள்ளல் இறந்தமையால் அவனை நம்பி வாழ்ந்த பாணர்கள் வறுமையுற்றனர். ஆதலால் பொற்பூ அணியக் கூடிய அவர்களின் தலை பொலிவிழந்து காணப்பட்டது. அதைப்போல, நெஞ்சே நீயும் தலைவியைப் பிரிந்ததால் பொலிவிழந்துள்ளாய் எனத் தலைவன் தன் நெஞ்சிடம் கூறி வருந்துகின்றான் என்பதை,*

*"எவ்வி இழந்த வறுமையர் பாணர்*

*பூஇல் வறுந்தலை போலப் புல்லென்று*

*இனைமதி வாழியர் நெஞ்சே!" (19:1-3)*

*என்ற வரிகள் விளக்குகின்றன. எவ்வி என்பவன் மிழலைக் கூற்றத்து அரசன். வேளாண் மரபினைச் சேர்ந்தவன். நீடில் எனும் ஊரினைச் சேர்ந்த இவன் தலையாலங்கானத்தில் பாண்டியன் நெடுஞ்செழியனுடன் போர் செய்து இறந்தான் எனும் வரலாற்று நிகழ்வைப் பரணர் பதிவுசெய்துள்ளார். இப்பதிவின் ஆழத்தினை, உண்மையினை நோக்குங்கால் பாணர் என்ற ஒரு சமூகத்தை எவ்வி எனும் வள்ளல் தன் கொடைத் திறத்தால் வாழவைத்துக் கொண்டிருந்தான் என்பது புலனாகின்றது.*

**ஐங்குறுநூறு**

*சங்கப் புலவர்களால் இயற்றப்பட்டுச் சான்றோர்பெருமக்களால் தொகுக்கப் பெற்ற தொகைநூல்களுள் மூன்றாவதாக அமைவது ஐங்குறுநூறு. இந்நூல் மூன்றடிச் சிற்றெல்லையும் ஆறுஅடிப் பேரெல்லையும் கொண்டது. இந்நூலுக்குக் கடவுள் வாழ்த்துப்பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்ற வரிசை முறையில்*

திணைகள் அமைக்கப் பெற்றுள்ளன. மேற்குறித்த திணைகளைப் பாடியவர்கள் முறையே ஓரம்போகியார், அம்மூவனார், கபிலர், ஓதலாந்தையார், பேயனார் என்பதை,

> ‘மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்,
> கருதுங் குறிஞ்சிக் கபிலன் - கருதிய
> பாலையோ தலாந்தை பனிமுல்லை பேயனே
> நூலையோ தைங்குறு நூறு’

என்ற பழம்பெரும் பாட்டொன்றால் அறியமுடியும். சங்க இலக்கியத் தொகைநூல்களில் மருதத்தை முதலாவதாகக் கொண்டது இந்நூல். இத்தொகை நூலைத் தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர்கிழார் என்றும் தொகுப்பித்தவர் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை என்றும் நூலிறுதியில் உள்ள பழங்குறிப்பினால் தெரியவருகின்றது.

பிற அகத்துறை நூல்களில் இல்லாத சிறப்புக் கூறுகள் பல இந்நூலில் காணக்கிடைக்கின்றன. அவை பின் வருமாறு : “திணைகள் யாவையும் சமமான எண்ணிக்கையில் செய்யுட்களைப் பெறல், ஒவ்வொரு நூலும் பத்துப் பத்துக்களாகப் பிரிந்திருத்தல், ஒவ்வொரு பத்தும் செய்யுட்களின் தொடக்கச் சொல் அல்லது தொடர், செய்யுட்களின் ஈற்றுச் சொல், கூற்றுக்குரியோர், கேட்போர், கருப்பொருள் முதலானவற்றில் யாதானுமொன்றால் பெயர்பெறல், திணை மயக்கத்திற்கு மிகுதியான இடந்தருதல், பிறவற்றில் காணமுடியாத மிகப் பல புதிய கிளவிகள் இடம்பெறல், பிறதொகைகளில் காணமுடியாத புதிய சொற்களையும், பண்பாட்டுக் கூறுகளையும் கொண்டிருத்தல் ஆகிய புதுமைகள் இந்நூலைப் பிறவற்றினின்றும் பிரித்துக்காட்டுகின்றன. இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கில் உள்ள ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி

ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது ஆகியவற்றுக்கு முன்னோடியாக அமைந்துள்ளது. இதிலமைந்த பத்து என்னும் அமைப்பே பக்திப்பனுவல்களிலும் கையாளப்பட்டது."[30] இத்தகு சிறப்புகளைத் தன்னகத்தே கொண்ட ஐங்குறுநூற்றில் சேரமன்னர் பற்றிய வரலாற்றுப் பதிவு ஒரு பாடலிலும் சோழமன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் இரண்டு பாடல்களிலும் பாண்டிய மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் மூன்று பாடல்களிலும் குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் மூன்று பாடல்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன (விவரம் பின்னிணைப்பு : 3).

**சேரர் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

"சேரரின் தோற்றம் பற்றிப் பழந்தமிழ் இலக்கியங்கள் ஏதும் செப்பவில்லை. பிற்கால இலக்கியமான வில்லிபாரதம் சேரரை 'அக்கினி குலத்தவர்' எனும் பொருளில், இவன் செந்தமிழலோன் மரபாகி யீரேழுலகும் புகழ் சேரன்"[31] என்று குறிப்பிடுகின்றது எனச் சுட்டுவர் அரங்க இராமலிங்கம். இத்தகு சிறப்புக்குரிய சேர வேந்தர் பற்றிய வரலாற்றுப் பதிவு ஐங்குறுநூற்றில் 178வது பாடலில் சேரரின் தலைநகரான தொண்டி பற்றிய குறிப்பு பதிவுசெய்யப்பெற்றுள்ளது.

"........................செங்கோற்

குட்டுவன் தொண்டி அன்ன

எற்கண்டு நயந்து, நீ நல்காக் காலே?" (178:2-4)

என்று தலைவன் தோழியிடம், நான் தலைவியைக் கண்டு காதல் கொள்வதற்கு முன்பு சேரன் செங்குட்டுவனின் தொண்டிநகரினைப் போல சிறப்புடன் இருந்தேன். இப்போது அவளைப் பெறாத காரணத்தால் அச்சிறப்புகள் எல்லாம் இழந்து நிற்கின்றேன் என்று கூறுவதாக அம்மூவனார்

பதிவுசெய்துள்ளார். இங்கு, தலைவனின் சிறப்பு நலனுக்குத் தொண்டிநகரம் உவமையாக்கப் பெற்றுள்ளது.

சங்ககாலத்தில் இரண்டு தொண்டித் துறைமுகங்கள் இருந்ததாகச் சுட்டப்படுகின்றன. "ஒரு தொண்டி சேரநாட்டின் மேற்குக் கடற்கரையிலும் மற்றொரு தொண்டி பாண்டி நாட்டின் கிழக்குக் கடற்கரையிலும் இருந்துள்ளன"[32] என்ற மயிலை சீனி.வேங்கடசாமியின் கருத்தினைச் சுட்டுவர் பா.கவிதா.

**சோழர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

"சோழர் கூட்டுக் குடும்பங்கள் பல சேர்ந்த குடியாட்சி முறையைத் தொடக்கத்தில் கொண்டிருந்தனர்"[33] என்பர் கே.என்.சிவராசப் பிள்ளை. இத்தகுக் குடியாட்சி முறையினைச் செவ்வனே செய்து கொண்டிருந்த சோழர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் ஐங்குறுநூற்றில் இரண்டு பாடல்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

**ஆமூரின் புகழ்**

பரத்தையரோடு தலைவனுக்கு உறவு உண்டு என்பதை அறிந்த தலைவி வருந்தி உடல்மெலிந்தாள். அதனை இல்லை என்று மறுத்துக் கூறும் தலைவனுக்கு,

"பகல்கொள் விளக்கோடு இராநாள் அறியா,
வெல்போர்ச் சோழர், ஆமூர் அன்னஇவள்
நலம்பெறு சுடர்நுதல் தேம்ப,
எவன்பயம் செய்யும், நீதேற்றிய மொழியே" **(56:1-4)**

எனத் தோழி மறுத்துரைக்கின்றாள். வெல்போர்ச் சோழர் என்பதால், சோழர் செய்யக்கூடிய போர்கள் அனைத்திலும் வெற்றியைப் பெறக்கூடியவர்கள்

என்பது புலனாகுகின்றது. இத்தகு வெற்றியைக் குவிக்கும் சோழர்களின் ஊர் ஆமூர். இவ் ஆமூர் செல்வச் செழிப்பும் வனப்பும் உடையது என்பதால் ஆமூரை ஒத்தவள் தலைவி எனப் புலவர் உவமையாக்கியுள்ளார்.

**கடுமான்கிள்ளி**

தலைவனே! இனிமேல் நீ தலைவியோடு புனலாடுவதைத் தவிர்க்க வேண்டும், அவ்வாறு தவிர்ப்பாயானால் தெப்பம் போன்ற என் தோளினைப் பற்றி,

"கதிரிலை நெடுவேல் கடுமான் கிள்ளி

மதில்கொல் யானையின் கதழ்புநெறி வந்த

சிறையழி புதுப்புனல்" (78:1-3)

ஆடலாம், இல்லையேல் நான் உன்னோடு புனலாடுதலில்லை என ஊடல் கொள்கிறாள் பரத்தை. இப் பாடலில், புதுவெள்ளம் அணையை உடைத்துக் கொண்டு இடையில் உள்ள பொருளை வாரிக் கொண்டு வரும் அதைப்போல விரைந்து செல்லும் குதிரைப் படையையுடைய கிள்ளிவளவனின் யானைப்படையோடு சென்று பகைவர்களுடைய அரண்களை அழித்து இடையிலுள்ள பொருள்களைக் கவர்ந்துவரும் என்று புதுவெள்ளத்திற்குக் கிள்ளிவளவனுடைய யானைப்படை உவமையாக்கப் பெற்றுள்ளது.

"கிள்ளி, சென்னி என்பன சோழர்குடித் தோன்றல்கட்குரிய சிறப்புப் பெயர்கள். நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி என்னும் மன்னர்கள் பெயர்களில் இச்சொல்லைக் காண்க. இச்செய்யுளில் வரும் கிள்ளி என்பான் இன்னான் என அறிய இயலவில்லை"[34] என்கிறார் அ.தட்சிணாமூர்த்தி.

மேற்குறித்த பகுதிக்கு விடைகாண முற்படுகின்றது கீழ் வரும் பகுதி.

ஐங்குறுநூற்றினை முதன்முதலில் பதிப்பித்த உ.வே.சா. அவர்கள் "கடுமான் கிள்ளி என்பதற்குச் சோழன்" என உரைவகுத்துள்ளார் (1949.39). "கிள்ளி என்னும் சோழன் விரைந்து செல்லும் குதிரையை உடையவன்" என்று அர.சிங்காரவடிவேலன் குறிப்பிடுகின்றார் (2003.79). பொ.வே.சோமசுந்தரனார் உரை எழுதுகையில் "கிள்ளி - சோழ வேந்தன்" என்றும் (1972.104), "வேற்படையினையும் விரைந்து செல்லும் குதிரையையும் உடைய கிள்ளி" என்று M.நாராயண வேலுப்பிள்ளையும் சுட்டுகின்றனர் (1986.68). "கிள்ளி சோழ வேந்தர்களுக்குரிய பெயர்களுள் ஒன்று. கடுமான் கிள்ளி என்றது சோழ வேந்தன் ஒருவனது இயற்பெயராகக் கருதுவாரும் உளர்" என்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (1957.235). அ.தட்சிணாமூர்த்தி குறிப்பிடுகையில் "கிள்ளி, சென்னி என்பன சோழர்குடித் தோன்றல்கட்குரிய சிறப்புப் பெயர்கள்" என்கிறார் (2004.171).

மேற்குறித்த உரையாசிரியர்களின் கருத்தாக்கங்களை நன்கு நோக்குங்கால் கிள்ளி எனும் பதிவு (சொல்லாட்சி) சோழ வேந்தரைத் தவிர வேறு யாரையும் குறிப்பிடவில்லை என்பது தெளிவாகின்றது.

**விடைதேடும் படலம்**

ஐங்குறுநூற்றில் 78 வது பாடலில் குறிக்கப்பெற்றுள்ள கடுமான் கிள்ளி யார்? என்பதனை அறிய இருவகையான பார்வைகள் கையாளப்படுகின்றன.

1. கடுமான் கிள்ளி தொடர்பான சங்க இலக்கியப் பதிவுகளைத் திரட்டி அவற்றில் கடுமான் கிள்ளி எனும் இயற்பெயருடைய சோழ வேந்தன் ஒருவன் இருக்கின்றானா எனப் பார்த்தல்,
2. ஐங்குறுநூற்றில் 78 வது பாடலை இயற்றியவர் ஓரம்போகியார். ஆதலால் அவர் இயற்றிய பிற பாடல்களில் கடுமான் கிள்ளி குறித்த பதிவுகள் இருக்கின்றனவா? எனப் பார்த்தல்.

## 1. கடுமான் கிள்ளி குறித்த பதிவுகள்

'கடுமான் கிள்ளி என்ற பெயர் சோழ வேந்தர்களுள் ஒருவரது இயற்பெயராகக் கருதுவாரும் உளர்' என்று ஔவை சு.துரைசாமிப் பிள்ளை குறிப்பிடுகின்றார்.

கடுமான் கிள்ளி எனும் பதிவு சங்க இலக்கியத்தில் இரண்டு இடத்திலும், கடுமான் கொற்றை என்ற பதிவு ஓர் இடத்திலும், கடுமான் வேந்தர் என்ற பதிவு ஓர் இடத்திலும், கடுமான் தோன்றலே என்ற பதிவு இரண்டு இடத்திலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

கடுமான் கிள்ளி என்று புறநானூற்றில் 167:10 வது பாடலில் பதிவுசெய்யப் பெற்றுள்ளது. இப்பாடலை இயற்றியவர் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார். இவர் கடுமான் கிள்ளி என்று ஏனாதி திருக்கிள்ளியைப் பாடியுள்ளார். மற்றொரு பதிவு ஐங்.78:1 வது பாடல். கடுமான் கொற்றே என்று புறநா.168:17 வது பாடலில் பதிவுசெய்யப் பெற்றுள்ளது. இப்பாடலை இயற்றியவர் கருவூர்க் கதப்பிள்ளை சாத்தனார். இவர் கடுமான் கொற்றை என்று பிட்டங் கொற்றனைப் பாடியுள்ளார். கடுமான் வேந்தர் என்று புறநா.350:5 வது பாடலில் பதிவுசெய்யப் பெற்றுள்ளது. இப்பாடலை இயற்றியவர் மதுரை மேலைக்கடைக் கண்ணம் புகுத்தாராயத்தனார். இப்பாடலில் குறிப்பிடப் பெற்றுள்ள கடுமான் வேந்தர் யார் என்று குறிப்பிடப் பெறவில்லை. கடுமான் தோன்றல் என்று புறநானூற்றில் இரண்டு பதிவுகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் புறநா.265:5 வது பாடலை இயற்றியவர் சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார். இப்பாடலில் குறிப்பிடப்பெறும் கடுமான் தோன்றல் யார் என்று குறிப்பிடப் பெறவில்லை. மற்றொரு பதிவு புறநா.382:17 வது பாடல். இப்பாடலை இயற்றியவர் கோவூர் கிழார். இப்பாடலில்

குறிப்பிடப்பெறும் கடுமான் தோன்றல் சோழன் நலங்கிள்ளி எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது.

மேற்குறிப்பிட்ட கடுமான் கிள்ளி பதிவுகளை நோக்குங்கால் ஔவை சு.துரைசாமிப் பிள்ளை அவர்களின் கருத்து முரண்படுகின்றது. கடுமான் கிள்ளி எனும் பெயர் ஒரு சோழ வேந்தனின் இயற்பெயராக இல்லாமல் சோழ வேந்தர்களின் புனைப்பெயராகத்தான் வழங்கப்பட்டிருக்க வேண்டுமென உணரமுடிகின்றது.

**2. ஓரம்போகியாரின் பிற பாடல்கள்**

ஐங்.78 வது பாடலை இயற்றியவர் ஓரம்போகியார். ஆதலால் அவர் இயற்றிய பிற பாடல்களை முதன்மையாகக் கொண்டு கடுமான் கிள்ளியை அடையாளம் காண முற்படுதல் அடுத்த நிலையாக அமைகின்றது.

ஓரம்போகியாரால் இயற்றப்பெற்ற மொத்தப் பாடல்கள் 110. அவற்றுள் நற்.20, 360 ஆகிய இரு பாடல்களும் யானைக் கவளம் பெறுவதைப் பற்றிப் பேசுகின்றன. குறுந்.10, 127 ஆகிய இரு பாடல்களும் காஞ்சி ஊரன் பற்றிப் பேசுகின்றன. ஏனைய 70,122, 384 ஆகிய மூன்று பாடல்களும் மருதத்திணையை மையமிட்டதாக அமைகின்றன. ஐங்குறுநூறு மருத்திணை 100 பாடல்களில் முதல் 10 பாடல்களில் சேரர்களைப் பற்றியும் அவர்தம் குடிப்பிறந்தார் பற்றியும் (வேட்கைப் பத்து, ஆதன் அவினி) பேசுகின்றன. பாண்டியரின் தேனூர் பற்றி 54, 55, 57 ஆகிய மூன்று பாடல்களில் பேசுகின்றார். சோழரின் ஆமூர் குறித்து 56 வது பாடலில் பேசுகின்றார். 78 வது பாடல் ஆய்வுப்பொருளாக அமைகிறது. குறுநில மன்னர்களான விரானின் இருப்பை ஊர் பற்றி 58வது பாடலிலும், மத்தியின் கழாஅர் ஊர் பற்றி 61 வது பாடலிலும் பேசுகின்றார். ஏனைய 80

பாடல்களும் மருதத்திணையை மையமிட்டதாக அமைகின்றன. அகநா.286, 316 ஆகிய இருபாடல்களிலும் மருத ஊரன் பற்றிப் பேசுகின்றார். புறநா.284வது பாடலில் யானையை வெட்டி வீழ்த்திய வீரன் பற்றிப் பேசுகின்றார்.

மேற்குறிப்பிட்ட 110 பாடல்களில் 56வது பாடலைத் தவிர வேறு எந்தப் பாடலிலும் சோழர் குறித்துப் பேசப்படவில்லை. 56 வது பாடலில் சோழர் ஆண்டதாகப் பதிவு செய்யப்பெற்ற ஆமூர் பொதுநிலையில் சுட்டியிருப்பதால் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பெற்ற ஆமூர் பதிவுகளைத் திரட்டி விடைகாண முற்படுகின்றது.

"அம்தண் கிடங்கின் அவன்ஆமூர் எய்தின்
வலம்பட நடக்கும் வலிபுணர் எருத்தின்" (சிறுபாண்.188-189)

என்று சிறுபாணாற்றுப்படையிலும்,

"கொடுமுடி காக்கும் குரூஉக்கண் நெடுமதில்
சேண்விளங்கு சிறப்பின் - ஆமூர் எய்தினும்" (அகநா.159:18-19)

என்று அகநானூற்றிலும்,

"இன்கடும் கள்ளின் ஆமூர் ஆங்கன்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகால் மார்பு ஒதுங்கின்றே ; ஒருகால்
வருதார் தாங்கிப் பின்ஒதுங் கின்றே" (புறநா.80:1-4)

என்று புறநானூற்றிலும் ஆமூர் சுட்டப் பெற்றுள்ளன.

சிறுபாணாற்றுப்படையில் குறிப்பிடப்பெற்றுள்ள ஆமூர் குறுநில மன்னனான நல்லியக்கோடன் பற்றியது, அகநானூற்றில் குறிப்பிடப் பெற்றுள்ள ஆமூர் குறுநில மன்னன் கொடுமுடி பற்றியது, புறநானூற்றில்

குறிப்பிடப்பெற்றுள்ள ஆமூர் குறுநில மன்னனான மல்லனை ஒருகால் மார்பிலும் ஒருகால் முதுகிலும் வைத்து அழித்த சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி பற்றியது.

மேற்குறிப்பிட்ட பதிவுகளை ஒப்பு நோக்குங்கால் தத்தம் வலிமைக்கு ஏற்றவாறு ஆமூரை அரசாண்டுள்ளனர் என்பது தெளிவாகிறது.

ஓரம்போகியாரால் இயற்றப்பெற்ற 110 பாடல்களில் 56, 78 ஆகிய இரு பாடல்கள் மட்டுமே சோழர் பற்றிப் பேசுகின்றன. அவற்றுள் 78 வது பாடலில் குறிப்பிடப்பெறும் ‘கடுமான் கிள்ளி’ சோழ வேந்தனே என்று உரையாசிரியர்கள் ஆணித்தரமாகச் சுட்டுகின்றனர். 56 வது பாடலில் சுட்டப்பெற்றுள்ள ஆமூருக்குரிய சோழன் யார் என்று குறிப்பிடப் பெறவில்லை என்பதால் ஆமூர் ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்று ஆய்வின் முடிவில் சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி என அனுமானிக்கப் பெற்றுள்ளது.

ஐங்.56, 78 ஆகிய இரு பாடல்களையும் இயற்றியவர் ஓரம்போகியார் என்பதால் 56 வது பாடலுக்கு அனுமானிக்கப்பெற்ற சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளியே 78வது பாடலில் குறிப்பிடப்பெற்ற கடுமான் கிள்ளியாக இருக்கலாம். காரணம், புறநா.382:17 வது பாடலில் கோவூர்கிழார் நலங்கிள்ளியைக் கடுமான் தோன்றலே என விளப்பதால் கடுமான் நலங்கிள்ளிக்கு முற்பட்டவன் என்பது புலனாகின்றது. நலங்கிள்ளியின் காலம் தெளிவு சுட்டவில்லை என்றாலும் கோப்பெருஞ்சோழன் பெருங்கோக்கிள்ளிக்குப் (கி.மு.225-200) பிற்பட்டவனாகவும் சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானுக்கு (கி.மு.200-175) முற்பட்டவனாகவும் வி.பி.புருஷோத்தம் அவர்கள் காலம்

சுட்டாமல் பெயர் மட்டும் குறிப்பிடப் பெற்றிருப்பதால் மேற்குறிப்பிட்ட இருவருக்கும் (கி.மு.225-175) இடைப்பட்டவனாக இருக்கலாம். இவ்விடைப்பட்ட காலத்தினை அடிப்படையாகக் கொண்டோமேயானால் இதற்கு முற்பட்ட காலத்தில் கிள்ளி எனும் பெயர் கொண்ட வேந்தர்கள் நால்வர் சுட்டப்படுகின்றனர்.

1. சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி
2. சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி
3. சோழன் வேல்பல்தடக்கைப் பெருநற்கிள்ளி
4. கோப்பெருஞ்சோழன் பெருங்கோக்கிள்ளி

சோழன் போரனைக் கோப்பெருநற்கிள்ளியைத் தவிர ஏனைய மூவரும் ஆமூரை அரசாண்டதாகச் சங்க இலக்கியத்தில் குறிப்பேதும் இல்லை என்பதால் ஓரம்போகியார் சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளியையே ஐங்.78 வது பாடலில் கடுமான் கிள்ளி எனச் சுட்டியிருக்க இடமுண்டு என்பதை உய்த்துணர முடிகின்றது.

**பாண்டியர் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

மு.இராகவையங்கார் அவர்கள் 1910 ஆம் ஆண்டில் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிட்ட ஒரு கட்டுரையில் "மகாபாரதக் காவியத்தில் வரும் பாண்டவர்களின் தந்தையைக் குறிப்பதாகிய 'பாண்டு' என்னும் சொல்லிலிருந்து பாண்டியர் என்ற பெயர் தோன்றியிருக்கலாம் என்று எழுதியுள்ளார்கள்."[35] இவர் கூறும் கருத்தானது பாணினி வாழ்ந்த காலத்தை அடுத்து வாழ்ந்த இலக்கணப் புலவர் வரருசி என்பவரது காலத்திலிருந்தே வழங்கி வருவதாகும்.

"தொன்மை என்னும் பொருள் உடைய பண்டு என்ற சொல் - தமிழிலும் மலையாளத்திலும் வழங்குகிறது. அச் சொல்லிலிருந்துதான்

பாண்டியர் என்ற பெயர் தோன்றியது எனச் சொல்லுவது பொருத்தமுடையது போலக் கருத்தை ஈர்ப்பதாகத் தோன்றினும், நான் அக்கருத்தை ஆதரிக்கவில்லை"[36] என்கிறார் கால்டுவெல். " 'பாண்டு' என்ற வடமொழியிலிருந்து பாண்டியர் என்ற சொல் பிறந்ததென்பதற்கு மாறாக அவர் இதை ஆதரிக்க விரும்பவில்லை என்று கூறினாலும், 'பண்டு' என்ற சொல்லிலிருந்து பாண்டியர் என்ற பெயர் தோன்றியது எனச் சொல்லுவது பொருத்தமுடையதுபோல் கருத்தை ஈர்ப்பதாகத் தோன்றுகிறது என்று அவர் சொல்வதை நாம் சீர்தூக்கிப் பார்ப்போமானால் எல்லாவகையாலும் பண்டு என்ற சொல்லிலிருந்து அது தோன்றியது எனக் கொள்வதே தக்கதெனப் புலப்படுகிறது."[37]

இத்தகு மரபுவழிப்பட்ட தொன்மையுடைய பாண்டியரைப் பற்றி வரலாற்றுப் பதிவுகள் ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இம் மூன்று பதிவுகளையும் கொற்கைப் பட்டினத்தின் சிறப்பு, தேனூரின் சிறப்பு எனும் இரு பொருண்மைகளில் அடக்கலாம்.

**கொற்கைப் பட்டினத்தின் சிறப்பு**

பரத்தை வீட்டிற்குச் சென்று திரும்பிய தலைவன் தன் வீட்டிற்கு வந்த விருந்தினரோடு சேர்ந்து வீட்டிற்குள் சென்றான். சென்ற தலைவன் தன் மனைவியின் இல்லறச் சிறப்பினைக் கண்டு

"கொற்கைக் கோமான் கொற்கைஅம் பெருந்துறை

வைகறை மலரும் நெய்தல் போலத்

தகை பெரிது உடைய, காதலி கண்ணே" (188:2-4)

என மகிழ்ந்துரைத்தான். கொற்கை வேந்தனாகிய பாண்டியனின் கொற்கைப் பட்டினத்தில் அமைந்த அழகிய நீராடு துறையின்கண் வைகறைப் பொழுதில் மலரும் நெய்தல் மலரைப் போல அழகு மிக்கது தலைவியின் கண்கள் எனத்

தலைவியின் கண்ணுக்குப் பாண்டியனின் கொற்கை துறைமுகத்தில் பூத்த நெய்தல் மலரை உவமையாக்கியுள்ளார் புலவர். இத்தகு துறைமுகத்திற்கு உரியவனான கொற்கைப் பாண்டியனின் இயற்பெயர் என்னவென்று தெரியவில்லை. கொற்கைப் பாண்டியன் என்பது மக்கள் இவ்வரசனுக்கு இட்ட பெயர். "கோவலற்குத் தவறிழைத்துக் கொடுங்கோலனாயினமை பொறாது உயிர் கொடுத்துப் புகழ்கொண்ட ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியற்கு முற்பட்டவன் இக்கொற்கைப் பாண்டியன்."[38]

## தேனூரின் சிறப்பு

தலைவன், தலைவியை மணந்து கொண்ட சில நாட்களிலேயே பரத்தையை நாடிச் சென்றான். பின் தன் வீட்டிற்குள் வருவதற்குத் தலைவியிடம் அனுமதிகேட்டுத் தன் மெலிவையும் எடுத்துரைத்தான். அதற்கு அருகிலிருந்த தோழி உன் மெலிவைக் காட்டிலும் தலைவியின் மெலிவு அதிகமானது என்றுரைத்து வாயில் மறுத்தாள் என்பதை,

"தேர்வண் கோமான், தேனூர்அன்ன இவள்

நல்அணி நயந்துநீ துறத்தலின்,

பல்லோர் அறியப் பசந்தன்று நுதலே" (55:2-4)

என்ற பாடல் விளக்கும். பாண்டிய நாடு மருதவளமிக்கது. தேர்ச்சிறப்பும், கொடைச் சிறப்பும் மிக்க பாண்டியனின் தேனூரைப் போன்றவள் தலைவி எனத் தலைவியின் அழகு நலனிற்குப் பாண்டிய மன்னனின் தேனூர் உவமையாக்கப் பெற்றுள்ளது.

## குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

பண்டைக் காலத் தமிழகத்தை அரசியல் முறை பிறழாது ஆண்டவர்கள் மூவேந்தர்கள் மட்டுமல்லர். அவர்களை அடுத்து வள்ளல்களும் குறுநிலமன்னர்களும் தமிழகத்தின் சில பகுதிகளைச் சிறப்புற

அரசாண்டிருக்கின்றனர். இவ்வாறு சிறப்புற அரசாண்ட குறுநில மன்னர்களைப் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களில் காணக் கிடைக்கின்றன. இம் மூன்று பாடல்களையும் மத்திரியின் கொடைத்தன்மை, இருப்பையூரின் சிறப்பு எனும் இரு பொருண்மைக்குள் அடக்கலாம்.

## மத்தியின் கொடைத்தன்மை

பரத்தையர் பலரை மணம் புரிந்த தலைவன் சில நாளில் அனைவரையும் கைவிட்டுத் தலைவியின் வீட்டிற்குள் நுழைய வந்தான். அப்பொழுது தலைவி ஊடல் கொண்டாள். இவ்வூடலைத் தனிக்க, 'இனிமேல் இவ்வாறு நிகழாது' என உறுதியளித்தான். அதற்குத் தலைவி

"நறுவடி மாஅத்து விளைந்துஉகு தீம்பழம்

நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்

கைவண் மத்தி, கழாஅர் அன்ன

நல்லோர் நல்லோர் நாடி,

வதுவை அயர விரும்புதி நீயே" (61:1-5)

என வருந்தி உரைத்தாள். மத்தி எனும் குறுநில மன்னன் அள்ளிக் கொடுக்கும் வள்ளல் தன்மை உடையவன். இவனுடைய ஊர் கழாஅர். இங்கு மாமரத்தில் காய்த்த மணமிக்க மாவடுக்கள் பழமாகிக் கனிந்து, அருகில் ஓடிக்கொண்டிருக்கும் பொய்கையில் காம்பறுந்து திடும் என்ற ஓசையுடன் விழும். இப்படிப் பட்ட வளமையான கழாஅர் எனும் ஊரினை ஒத்த பரத்தையரை நாடிச் சென்று மணமுடிப்பவன் நீ என்று பரத்தையரின் அழகிற்கு மத்தியின் கழாஅர் உவமையாக்கப் பெற்றுள்ளது. சோழ நாட்டில் மயிலாடுதுறைக்குக் கிழக்கே 20 கி.மீ. தொலைவில் காவிரி கடலோடு கலக்குமிடத்தில் அமைந்துள்ளது கழாஅர் எனும் பேரூர். இப்பேரூரில்

வாழும் பரதவர்களுக்குத் தலைவன் மத்தி. இவன் வீரத்தன்மை வலிமைத் தன்மை மிக்கு இருந்ததால் சோழர்களின் படைத்தலைவர்களுள் ஒருவனாகப் பணியாற்றி வந்தான்.

**இருப்பையூரின் சிறப்பு**

தலைவனின் பரத்தமை ஒழுக்கம் அறிந்த தலைவி தலைவன்பால் ஊடல் கொள்கிறாள். அவ்வூடலைத் தலைவன் தணிக்க முயன்று, முடியாத காரணத்தால் தானும் ஊடல் கொள்வதுபோல் பொய்த் தோற்றம் காட்டுகின்றான். இதனையறிந்த தோழி,

*"விண்டு அன்ன வெண்ணெற் போர்வின்,*

*கைவண் விராஅன், இருப்பை அன்ன*

*இவள் அணங்குற்றனை போறி" (58:1-3)*

எனத் தலைவனை வாழ்த்துவது போல் நகையாடுகின்றாள். தலைவியின் அழகு நலனை எடுத்துரைப்பதற்கு விரான் எனும் வள்ளலின் இருப்பை ஊர் உவமையாக்கப் பெற்றுள்ளது. நீர் வளமும் நில வளமும் நிறைந்த மருதநிலத்து ஊர்களுள் இருப்பை என்பதும் ஒன்று. "வயவனுக்கு முன்னவனாகவோ பின்னவனாகவோ அதே இருப்பையூரை ஆண்ட சீறூர் மன்னன் வீரான். வயவனொடும் சார்த்தி இருப்பையூரைப் பாடிய பரணரே இவ்விராவனொடும் சார்த்தி அவ்வூரைப் பாடியுள்ளார்."[39]

**கலித்தொகை**

தொகை நூல்களுள் பாவின் பெயரைப் பெற்ற நூல்கள் பரிபாடலும் கலித்தொகையுமாகும். "தொல்காப்பியனார் அகத்திணையியலாகிய அகப்பொருட் செய்திகளைப் பாடுதற்கு உரிய தகுதி வாய்ந்த பாவாகக் கலிப்பாவினையும் பரிபாட்டினையும் குறிப்பிட்டுள்ளார்"[40] கலிப்பாவின் சிறப்பு ஓசைநயம் விரவி வருதலாகும். சங்கத்தார் தொடுத்த கலிப்பாட்டு

நூற்றைம்பது என்று பேராசிரியரும், இறையனார் அகப்பொருள் உரையாசிரியரும் குறிப்பிட்டுள்ளனர். ஏனைய தொகை நூல்களைப் போலப் பாடல்களில் சிதைவும் குறைவும் இன்றிக் கலித்தொகை கடவுள் வாழ்த்துச் செய்யுளோடு நூற்றைம்பது பாடல்களைக் கொண்டு விளங்குகின்றது. இந் நூற்றைம்பது பாடல்களும் கடவுள் வாழ்த்து ஒன்று, பாலைக்கலி-35, குறிஞ்சிக்கலி -29, மருதக்கலி - 35, முல்லைக்கலி-17, நெய்தற்கலி-33 என ஐந்து திணைகளாகப் பகுக்கப் பெற்றுள்ளன. இவ்வைந்து திணைகளையும் பாடிய புலவர் பெருமக்களின் பெயர்களைப் பழம்பெரும் பாட்டொன்றால் அறியமுடிகின்றது.

> ‘பெருங்கடுங்கோன் பாலை கபிலன் குறிஞ்சி
> மருதனிளநாகன் மருதம் அருஞ்சோழன்
> நல்லுருத்திரன் முல்லை நல்லந்துவன் நெய்தல்
> கல்விவலார் கண்ட கலி’

இக்கலித்தொகையைத் தொகுத்தவர் நல்லந்துவனார். தொகுப்பித்தவர் யார் என்று தெரியவில்லை. “ஏனைத் தொகை நூல்களைக் காட்டிலும் கலித்தொகையின் காட்சிப்பதிவுகள் பெரும்பாலும் நடப்பியல் நிகழ்வுகள் என்பதில் எவர்க்கும் ஐயப்பாடில்லை. மேலும் நிலமக்களைத் தலைமக்களாக்கிப் பாடப்பெற்றுச்சிறப்புறுவதும் சிறப்புத் தருவதும் கலித்தொகையாகும்”[41] என்பர்.

“பாண்டிய மன்னனைக் குறித்தும், அவன் தலைநகராகிய கூடல் குறித்தும், வையை ஆறு குறித்தும், திருமருத முன்றுறை குறித்தும் நிறைந்த செய்திகள் கலித்தொகையில் இடம்பெற்றிருக்கச் சேர, சோழ நாடுகளைப் பற்றிய குறிப்பு இந்நூலில் ஒன்றும் இல்லை என்ற கருத்து ஆழ்ந்து சிந்தித்தற்குரியது”[42] மேலும் இக்கலித்தொகை மதுரை நகரை

முதன்மையாகக் கொண்டு பாடப்பெற்றிருப்பதால் மதுரையை அரசாண்ட பாண்டிய வேந்தர்களின் இயற்பெயர் சுட்டிய குறிப்புகள் ஒன்றும் உவமையாகப் பதிவுசெய்யப் பெறவில்லை ஆனால் மூன்று பதிவுகள் மட்டும் தென்னவர் என்ற புனைபெயரால் பதிவுசெய்யப் பெற்றுள்ளன (விவரம், பின்னிணைப்பு :4).

**பாண்டியர் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

"அமிழ்தினுமினிய நம் தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டு நிலவும் இந்நிலப் பரப்பு முற்காலத்தே தமிழகம் என்று வழங்கப் பெற்றதென்பது தொன்னூலாராய்ச்சியுடையார் யாவரும்அறிந்ததொன்றாம். இத்தமிழகத்தைக் குடபுலம் குணபுலம் தென்புலம் என்ற மூன்று பெரும் பகுதிகளாகப் பிரித்துப் பண்டைக்காலம் முதல் ஆட்சி புரிந்துவந்தோர் சேர, சோழ, பாண்டியர் என்னும் தமிழ் வேந்தரேயாவர். இன்னோர் ஆட்சிபுரிந்த பகுதிகள் முறையே சேர மண்டலம், சோழமண்டலம், பாண்டிய மண்டலம் எனப்படும்."[43] பாண்டிய மண்டலத்தை அரசாண்ட பாண்டியர் "சந்திரவம்சத்தைச் சேர்ந்தவரென்றும் வேப்பம்பூ மாலையைத் தமக்குரிய அடையாள மாலையாகவும் கயல்மீனுருவத்தைக் கொடியாகவும் இலச்சினையாகவும் கொண்டவர்கள் என்றும் பண்டைத்தமிழ் நூல்களும் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் கூறுகின்றன."[44] இத்தகு பாண்டியர்களைப் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் கலித்தொகையில் மூன்று இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

**பாண்டியனின் வீரம்**

தலைவிக்கும் தனக்குமுள்ள ஒத்த கருத்துக்களைச் சொல்லிப் பாராட்டுகின்றான் தலைவன். அதற்குத் தலைவி எதுவும் கூறவில்லை. ஆதலால்,

"பூந்தண்தார், புலர்சாந்தின், தென்வன்உயர்கூடல்,

தேம்பாய அவிழ் நீலத்து அலர்வென்ற அமர்உண்கண்,

ஏந்துகோட்டு எழில்யானை ஒன்னாதார்க்கு அவன் வேலின்,

.......................................................................

.......................................................................

மதவலிமிகு கடாஅத்து அவன்யானை மருப்பினும்

கதவவால் - தக்கதோ - காழ்கொண்ட இளமுலை" (கலி.57:8-19)

என்று தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிக்கொள்கிறான்.

கொடையில் சிறந்தவன் பாண்டியன். அவனது ஊரில் உள்ள அசோக மரங்களின் இளைய மாந்தளிர் போன்ற நிறத்தினை உடையவள் தலைவி என்றும், குதிரை பூட்டிய தேரில் செல்லக்கூடியவன் பாண்டியன். இப்பாண்டியனின் அம்புகள் பகைவர்களின் மார்பில் தைத்தால் எவ்வளவு கொடுமை தருமோ அதைக்காட்டிலும் பெரிதாகத் தலைவியின் கண்கள் கொடுமை செய்கின்றன என்றும், குளிர்ந்த தாரினை உடைய பாண்டியனின் பொதிய மலையில் பூக்கின்ற வேங்கைப் பூப்போன்ற சுணங்கினை உடையவள் என்றும் முத்துவடம் தவழ்கின்ற தலைவியின் இளைய மார்பகங்கள் வலிமை மிகுந்த மதநீரை உடைய யானையின் கொம்புகளைக் காட்டிலும் சினமுடையதாய் நிற்கின்றன என்றும் தலைவியின் உறுப்பு நலன்களுக்குப் பாண்டியனின் கொடைச் சிறப்பும், வீரச் சிறப்பும் ஊர்ச்சிறப்பும், படைச்சிறப்பும் உவமையாக்கப் பெற்றுள்ளன.

### பாண்டியனின் புகழ்

வரைவிடை வைத்துப்பிரிந்து சென்ற தலைவன் குறித்துச்சென்ற காலம் வந்தும் தலைவன் வராததால் தலைவி அழுது புலம்பினாள். பின்பு தலைவன் வந்ததும் தலைவி கலக்கம் நீங்கி மகிழ்வுற்றாள் என்பதை,

“தென்னவற் தெளித்த தேஎம் போல,

இன்நகை எய்தினள், கிழந்ததன் நலனே” *(கலி.143:59-60)*

என்று கண்டோர் உரைத்தனர்.

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றதால் தலைவி காமநோய்க்கு உட்பட்டு, மிகவும் வருந்துகின்றாள். என் உயிர் என்னை விட்டுப் போகாமல் இருப்பதற்குக் காரணம் தலைவன் உயிரோடு இருப்பதால்தான் எனப் புலம்புகின்றாள். இந்நிலையில் பல மலைகளைக்கடந்து சென்ற தலைவன் மீண்டும் தலைவியிடம் வந்து சேர்கின்றான். ஆதலால் தலைவி மிகவும் அகமகிழ்வு கொள்கின்றாள். இந்நிகழ்வு பாண்டிய நாட்டில் வாழ்பவர் எவ்வாறு மனமகிழ்வோடு இருப்பார்களோ அதைப்போலத் தலைவி மனமகிழ்ச்சியாக இருக்கின்றாள் எனக் கண்டோர் புகழ்கின்றனர். இப்பதிவின் வழிப்பாண்டியன் நல்லாட்சி புரிந்தான் என்பது தெளிவாகின்றது.

**அகநானூறு**

தொகை நூல்களுள் ஒன்றான அகநானூறு ஏனைய எழுதொகை நூல்களைவிட அளவால் பெரியதாகவும்அகத்திணை குறித்த தொகை நூல்களுள் சிறந்தனவாகவும் விளங்குகின்றது. இச்சிறப்பு அகம் எனப் பெயர் பெருவதற்குக்காரணமாயிற்று. குறுகிய அடிகளை உடைய நானூறு பாக்களைக் கொண்ட குறுந்தொகைக்கு மாறாகப் பதின்மூன்று முதல் முப்பத்தோரடி வரையிலான பாக்கள் நானூறைக் கொண்டதால் இவ்அகநானூறு நெடுந்தொகை எனப் பெயர் பெற்றது. இந்நெடுந்தொகையைத் தொகுத்தவர் மதுரை உப்பூரிக் குடிகிழார் மகன் உருத்திரசன்மன். தொகுப்பித்தவர் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி ஆவார்.

கடவுள் வாழ்த்துப் பாடலைத் தவிர ஏனைய 400 பாடல்களும் மூன்று பெரும்பிரிவுகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளன. 1 முதல் 120 வரையிலான பாடல்கள் களிற்றியானை நிரை என்றும், 121 முதல் 300 வரையிலான பாடல்கள் மணிமிடைப்பவளம் என்றும் 301 முதல் 400 வரையிலான பாடல்கள் நித்திலக்கோவை என்றும் பகுக்கப் பெற்றுள்ளன. பொருட்சிறப்புக் காரணமாகக் களிற்றியானை நிரை என்ற பெயரும், செய்யுளும் பொருளும் ஒத்த அமைப்பால் நித்திலக்கோவை என்ற பெயரும் வழங்கியதாகக் காரணம் கூறப்படும். ஆயினும் "அறிஞர் ஒருவர் இவ்வரையறையின் இயைபு இன்னது என்பது நன்கு புலனாதல் இல்லை"[45] என்பர் இரா.வேங்கடாசலம் பிள்ளை. மேற்குறிப்பிட்ட 400 பாடல்களையும் பாடிய புலவர் பெருமக்கள் 145. அவற்றில் 114, 117, 165 ஆகிய மூன்று பாடல்களையும் பாடிய புலவர்களின் பெயர் காணப்படவில்லை என்பதால் ஏனைய 142 புலவர்களின் பெயர்கள் மட்டும் கிட்டியுள்ளன.

ஒற்றைப்படை எண்களையுடைய பாடல்கள் பாலைத்திணைக் குரியதாகவும், இரண்டு, எட்டு என வரும் எண்களையுடைய பாடல்கள் குறிஞ்சித் திணைக்குரியதாகவும், நான்கு, பதினாக்கு என வரும் எண்களையுடைய பாடல்கள் முல்லைத் திணைக்குரியதாகவும், ஆறு, பதினாறு எனவரும் எண்களையுடைய பாடல்கள் மருதத்திணைக்குரியதாகவும், பத்து, இருபது என வரும் எண்களையுடைய பாடல்கள் நெய்தல் திணைக்குரியதாகவும் ஒரு முறை வாரியாக ஐந்திணைகளும் பிரிக்கப்பெற்றிருப்பது இந்நூலுக்கான சிறப்புகளுள் ஒன்றாகும்.

இத்தகைய அகநானூற்றில் சேரவேந்தர்கள் பற்றி 32 இடங்களிலும், சோழவேந்தர்கள் பற்றி 26 இடங்களிலும், பாண்டிய வேந்தர்கள் பற்றி 28

இடங்களிலும் குறுநில மன்னர்கள் பற்றி 125 பாடல்களில் 165 இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன (விவரம் : பின்னிணைப்பு - 5).

### சேரர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

பேச்சு வழக்கில் மூவேந்தர்களுள் முதலில் சுட்டப்பெறுபவர் சேரர். இச்சேரவேந்தர்களுள் உதியஞ்சேரல், சேரன் செங்குட்டுவன், இமயவரம்பன் நெஞ்சேரலாதன், மாந்தரம் பொறையன் கடுங்கோ ஆகியோர் பற்றிய வரலாற்றுப்பதிவுகள் அகநானுற்றில் சுட்டப்பெற்றுள்ளன. சேரவேந்தர் குடியில் பொறையர் என்றும் உதியர் என்றும் இருபெரும் பிரிவினர் தமிழகத்திலிருந்து ஆட்சி புரிந்து வந்தனர் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. பொறை என்பது பாறை, அல்லது பொற்றை அல்லது குன்று என்று பொருள் படும். இரு என்ற சொல் பெருமையைக் குறிக்கும். இரும்பொறை என்பது பொறையர்களின் தலைவன் எனப் பொருள்படும். பொறையர் குடியின் தலைநகர் மாந்தை என்பதை,

"நல்நகர் மரந்தை முற்றத்து ஒன்னார்" (அகநா.127:6)

"மரந்தை அன்ன என் நலம் தந்து சென்மே" (அகநா.376:18)

என்ற வரிகள் விளக்குகின்றன. இத்தகைய தலைநகரை உடைய சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் அகநானூற்றில் 32 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தையும் வானவரம்பனின் வீரம், சேரனின் புகழ், பொறையனின் கொடைத்தன்மை, உதியனின் கொடைத்தன்மை, வஞ்சியின் சிறப்பு, பெருஞ்சேரலாதனின் தன்மானம் எனும் ஆறு பொருண்மைகளில் அடக்கலாம்.

### வானவரம்பனின் வீரம்

பிரிந்து சென்ற தலைவனை எண்ணித் தலைவி புலம்புவதைக் கண்ட தோழி ஆறுதல் கூறுகின்றாள். ஆயினும் தலைவியின் துன்பம் குறையவில்லை.

"கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்,

வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய

உடைமதில் ஓர்அரண் போல,

அஞ்சுவரு நோயொடு துஞ்சா தேனே" *(45:16-19)*

சேர இளவரசன் ஆட்டனத்தியைக் கடல் அலை இழுத்துச் சென்ற போது சோழன் மகள் ஆதிமந்தி எவ்வாறு வருந்தி அலைந்து திரிந்தாளோ அதைப்போலவும், வீரமிக்க வானவரம்பனின் போராற்றலைக் கண்டு அரணில் தங்கி இருந்தோர் அச்சமுற்றுத் துயிலாமல் இருந்ததைப் போலவும் தலைவியின் புலம்பல் இருந்தது என்பதற்கு மேற்குறித்த வரலாற்று நிகழ்வு உவமையாக்கப் பெற்றுள்ளது.

வானவரம்பனின் ஆட்சிக்காலம் 38 ஆண்டுகள் என்பதைப் பதிற்றுப்பத்தின் வாயிலாக அறியமுடிகின்றது. இவன் தண்டாரண்யாவில் உள்ள மலைவாழ் மக்களை வெற்றி பெற்று ஆடு, மாடுகளைக் கவர்ந்து குடநாட்டிலுள்ள அந்தணர்களுக்குப் பரிசாக வழங்கினார். "ஆடுகளைப் பிடித்து வந்ததால் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்ற பெயர் வந்தது."[46] இவனே சோழன் கரிகாலனின் மகளான ஆதிமந்தியை மணம் புரிந்தவன் என்பதற்குப் பல இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. வானத்தையே எல்லையாகக் கொண்டு அரசாண்டதால் வானவரம்பன் என்று பெயர் பெற்றிருக்கலாம் எனக் கருதுவாரும் உளர். இவ்வானவரம்பனின் ஊர் 'வெளியம்' என்பதை "வானவரம்பன் வெளியத்து அன்ன" (அகநா.*359:6)* என்று மாமூலனார் குறிப்பிடுகின்றார். இவனின் நாட்டு வளமையைப் பற்றி,

"வலம்படு வென்றியொடு சிலம்பகம் சிலம்ப,

படுமழை உருமின் முழங்கும்

நெடுமர மருங்கின் மலைஇறந் தோரே" *(389:22-24)*

என்று நக்கீரனார் பறைசாற்றுகின்றார்.

**சேரனின் புகழ்**

தலைவனுடன் ஊடல் கொண்ட காதல் பரத்தை தலைவனைப் பார்த்து நீ என்னை விட்டுப் பிரிந்து செல்லாதே. ஏனெனில் ஆட்டனத்தியின் ஆடலைக் கண்டு பெருநீர்ப்பெருக்குடைய காவிரியாறு அவனைக் கவர்ந்து சென்றதைப் போல உன்னை உன் மனைவி கண்டால் கவர்ந்து கொள்ளக்கூடும். ஒரு வேலை என்னை விட்டுப் பரிந்துபோக நினைத்தால்

"ஆரியர் அலறத் தாக்கி, பேர்இசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து,
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி அன்ன, என் நலந்தந்து சென்மே" **(396:16-19)**

என்று வஞ்சி அன்ன என் நலத்தினைத்தந்துவிட்டுச் செல்க என்கிறாள் பரத்தை.

மேற்குறித்த பாடலில் பதிவுசெய்யப் பெற்றிருக்கும் சேரவேந்தன் பகைவனான ஆரிய வேந்தர்களை அலறும்படித் தாக்கிப் பெரும் புகழ்கொண்ட இமயமலையில் தன் அடையாளமான விற்கொடியினைப் பொறித்தவன். கடுஞ்சினம் கொண்டு பகைவர்களைப் பிணித்தவன், இத்தகைய வீரச் சிறப்புடைய சேரனின் வஞ்சி நகரானது பரத்தையின் அழகிற்கு உவமையாக்கப் பெற்றுள்ளது. இப்பதிவின்வழி ஆரிய வேந்தரைச் சேரன் அலறத் தாக்கிய வரலாற்று நிகழ்வும், வளம்பொருந்திய வஞ்சிமா நகரின் சிறப்பும் நன்கு புலனாகின்றன.

**பொறையனின் கொடைத்தன்மை**

இரவு நேரத்தில் யாரும் அறியா வண்ணம் தலைவியைச் சந்தித்துக் கூடி மகிழ்ந்திருந்த இன்பமானது, பகைவர்களால் தடுத்து நிறுத்த முடியாத அளவிற்குப் படைவலிமையை உடையவன் மாந்தரம் பொறையன் கடுங்கோ

எனும் சேர மன்னன். இவனின் வெற்றிச் சிறப்பினைப் பாடிச் சென்ற புலவர்கள் நினைத்தற்கரிய அணிகலன்களைப் பரிசாகப் பெற்று மகிழ்வதைப் போல் இருந்தது என்பதை,

"நிறைஅருந் தானை வெல்போர் மாந்தரம்

பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற

குறையோர் கொள்கலம் போல" *(142:4-6)*

என்ற வரிகள் உணர்த்துகின்றன. புலவர்களால் புகழ்ந்து பாடப்பெறும் பொறையன் கடுங்கோ எனும் சேரவேந்தனே மாந்தரம் பொறயைன் கடுங்கோ என்றும் அழைக்கப் பெறுகின்றான். பொறையன் என்பதற்குப் பொறை நாட்டோடு தொடர்புடையவன் என்றும் கடுங்கோ என்பதற்கு அரசன் என்றும் பொருள் தருகின்றது அகநானூறு 142.

மேற்குறித்த பதிவின் வழித் தலைவன் தலைவியுடன் கூடி மகிழ்ந்திருந்த இன்பத்தினை விளக்குவதற்குப் பொறையன் கடுங்கோவின் கொடைச்சிறப்பு உவமையாக்கப் பெற்றுள்ளது.

**உதியனின் கொடை**

தலைவனின் பிரிவினை எண்ணி மனவருத்தத்துடன் இருந்த தலைவியிடம் தோழி, முன்பெல்லாம் தீப்பற்றி எரியும் மூங்கில்கள் நிறைந்த காட்டில் யானைகள் சுற்றித்திரியும். ஆதலால் நீங்கள் வருவதற்கு அறிது எனக் கூறிப் பிரிந்து சென்ற தலைவன், இப்பொழுது உன்னை உடன் அழைத்துச் செல்ல விரும்பியுள்ளார். ஆகையால் நீ மகிழ்ச்சியாக இருப்பாயாக! எதைப் போலவெனில்,

"நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்

பாடிச் சென்ற பரிசிலர் போல" *(65:5-6)*

என உதியனிடம் கொடை பெற்ற புலவர்கள் எவ்வாறு மகிழ்ச்சி

அடைவார்களோ அதைப்போல என ஆற்றுவிக்கின்றான். இவ்வாறு ஆற்றுவிப்பதன் வழி உதியனின் கொடைச் சிறப்பு உவமையாக்கப் பெற்றுள்ளது.

உதியஞ்சேரலாதன் எனும் சேரவேந்தனே பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்று போற்றப்படுகின்றான். "சேரர் குடியில் தோன்றிய முதல் மன்னன், வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தவன்"[47] என்பார் வி.டி.மஹாஜன். சேரர்களின் பொற்காலத்திற்கு வித்திட்ட மூல முதல்வன் இவனே ஆவான். இவன் கொங்குநாட்டைச் சார்ந்த 'குழுமூர்' எனும் ஊரினைத் தன் இருப்பிடமாகக் கொண்டவன். கொடை வழங்குவதைத் தன் குறிக்கோளாகக் கொண்டவன். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் இடையே நடைபெற்ற பாரதப்போரில் இருபெரும் படைகளுக்கும் பெருஞ்சோறு வழங்கியவன் இவன் என்பதை,

'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்"[48]

என்ற புறநானூற்றுப் பாடலடி சான்று பகர்கின்றது.

**வஞ்சியின்சிறப்பு**

குளங்கள் எல்லாம் வற்றிப்போகும் அளவிற்குக் கடுமையான வெயில் வீசுகின்ற இந்தக் கோடைக்காலத்தில் யாரோ ஒருத்தியின் மகன் என் மகளைக் காட்டு வழியில் அழைத்துச் சென்றுவிட்டான். அவர்கள் சென்ற காட்டில் வழிப்பறிக் கொள்ளையர்கள் தொலைவில் வரும் வழிப்பயணிகளைக் காண்பதற்காக உயர்ந்து நிற்கும் மரத்தின் மேல் ஏறி அதன் கிளைகளில் மறைந்திருப்பார்கள். அவர்கள் கண்களில் சிக்கிக் கொண்டால் உயிர் போவது உறுதி. அப்படிப்பட்ட வழிப்பாதையில் என் மகள் தன் உயிரையும் பொருட்படுத்தாது அந்த ஆண்மகனோடு செல்ல முற்பட்ட அன்பின் ஆழம் முன்னமே எனக்குத் தெரிந்திருந்தால்,

"ஒளிறுவேல் கோதை ஓம்பிக் காக்கும்

வஞ்சி அன்னஎன் வளநகர் விளங்க,

இனிதினின் புணர்க்குவென் மன்னோ துனிஇன்று" *(263:11-13)*

திருமணம் செய்து வைத்திருப்பேன் என்று தன் நெஞ்சிடம் சொல்லிப் புலம்புகின்றாள். சேரனின் தலைநகரான வஞ்சிமாநகர் தலைவியின் வீட்டிற்கு உவமையாக்கப் பெற்றுள்ளது. "ஒள்வாள் கோப்பெருஞ் சேரல் இரும்பொறை என்பான் சேரநாட்டைப் புரந்திருத்தல் வேண்டும். இவனே "கொங்கு நாட்டில் வடக்கே பூவானியாறு வரையும், கிழக்கே கொங்கு வஞ்சி (தாராபுரம்) வரையும் பரவியிருந்த பொறைநாட்டைக் கீழ்க்கொங்கு நாட்டுக் கரூவூர் வரையில் பரப்பிய முதற் சேரமான்"[49] என்பர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

**பெருஞ்சேரலாதனின் தன்மானம்**

பாலைவனத்தில் உளிபோன்ற கற்கள் வருத்தியும் அதைப் பொருட்படுத்தாமல் மகிழ்ச்சியாகத் தலைவனுடன் தீப்பற்றி எரியும் மூங்கில் காட்டின் வழியாகச் சென்றுவிட்டாள் என் மகள். அவளது பிரிவால் ஊது உலைத்துருத்தி போலப் பெருமூச்சு விட்டு மெலியவும், இரவில் கண் துயிலாமல் வாய்வெருவிப் புலம்பவுமாக உள்ளேனே தவிர,

'கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்

பொருதுபுண் நாணிய சேர லாதன்

அழிகள மருங்கின் வாள்வடக்கு இருந்தென" *(55:10-12)*

என்று உயிர்விடத் துணியவில்லை என இருபெருவேந்தரான சோழன் கரிகால் பெருவளத்தானுடன் வெண்ணிப் பறந்தலையில் போர்செய்து புறப்புண்பட்டமைக்காக நாணி வடக்கிருந்து பெருஞ்சேரலாதன் உயிர்விடத்

துணிந்தான் என்ற வரலாற்றுப் பதிவினை நற்றாயின் புலம்பலுக்கு உவமையாக்கிப் பதிவுசெய்தள்ளார் மாமூலனார்.

### சோழர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

பழந்தமிழகத்தை ஆட்சிபுரிந்துவந்த தமிழ் வேந்தர்களுள் குறிப்பிடத்தகுந்தோர் சோழர். இச்சோழர் வீற்றிருந்து செங்கோல் செலுத்திய தலைநகரங்களுள் உறையூரும், காவிரிப் பூம்பட்டினமும் தலைசிறந்தனவாகும். பிற்காலச்சோழ வேந்தர்களது ஆட்சிக் காலங்களில் தஞ்சாவூரும், கங்கைகொண்ட சோழபுரமும் தலைநகரங்களாகக் கொள்ளப்பட்டன. சோழர்க்குரிய அடையாள மாலை ஆத்தியாகும். "வடவேந்தரை ஒப்ப இன்னோர் சூரிய குலத்தினரென்றும் காசிப கோத்திரத்தினரென்றும் தமிழ் நூல்கள் குறிப்பிடுகின்றன"[50] எனும் மேற்கோளைச் சுட்டுகின்றார். இத்தகு வம்சத்தினரைப் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் அகநானூற்றில் 27 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தையும் கரிகாலனின் வீரம், சோழனின் வில் ஆற்றல், வெண்ணிப் போர், கிள்ளியின் புகழ், உறையூரின் வளமை எனும் ஐந்து பொருண்மைகளில் அடக்கலாம்.

### கரிகாலனின் வீரம்

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் மீண்டும் வருவதாகக் கூறிய கார்காலம் வந்தும் தலைவன் வரவில்லை. கார்காலத்தின் வாடைக்காற்று தலைவியை மிகவும் வருத்தியது. இதனை அறிந்த தோழி,

"பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்,
சூடா வாகைப் பறந்தலை, ஆடுபெற
ஒன்பது குடையும் நன்பகல் ஒழித்த
பீடுஇல் மன்னர் போல,
ஓடுவை மன்னால் - வாடை நீ எமக்கே" **(125:18-22)**

என்று ஆறுதல் கூறுகின்றாள். சோழ மரபில் தோன்றி, ஆட்சி பெறும் தகுதியுடைய ஒன்பது பேர் குறுநில மன்னர்களாய் இருந்துள்ளனர். இவர்கள் வாகையூர்ப் போர்க்களத்தில் கரிகாலனை எதிர்த்துப் போரிட முடியாமல் ஒன்பது குடைகளையும் விட்டுப் புறமுதுகிட்டு ஓடினர். இதனை, 'சோழர் குடிக்குரியோர் ஒன்பதின்மர்' (பதிற்.5 ஆம் பதி) என்று பதிற்றுப்பத்தும், 'ஒன்பது குடையும் ஒருபகல் ஒழித்தவன்' பொன்புனை திகிரியோடு ஒருவழிப்படுத்தோய் (சிலம்பு.27:122-123) என்று சிலப்பதிகாரமும் கூறுகின்றது. கரிகாலன் நடுநிலைமை தவறாது ஆட்சிபுரிந்தவன். கரிகாலனின் மூன்று ஆண் மக்களில், நெடுங்கிள்ளி மூத்தவனா யிருக்கலாமெனத் திரு.நீலகண்ட சாஸ்திரியார் கருதுகின்றார். தந்தைக்குப் பின் நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் அரசுரிமைக்காகப் போரிட்டனர் என்பதை,

"இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்;
கரும்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்;
நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே ; நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே ;
ஒருவீர் தோற்பினும் தோற்பதும் குடியே
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே ; அதனால்
குடிப்பொருள் அன்றுநும் செய்தி ; கொடித்தேர்
நும்மோர் அன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி உவகை செய்யும்இவ் இகலே" (45:1-9)

என்ற புறநானூற்றுப் பாடல் சான்று பகர்கின்றது.

**சோழனின் வில் ஆற்றல்**

பரத்தையை விடுத்து வேறு ஒரு புதிய பரத்தையோடு நட்புக் கொண்டான் தலைவன். புதிய பரத்தை பழைய பரத்தையான காமக்கிழத்தியைப் பழித்தாள் எனக் கேட்ட காமக்கிழத்தி அவளது தோழி முதலியோர் கேட்கும்படி,

"சுடரொடு திரிதரும் நெருஞ்சி போல
என்னொடு திரியா னாயின், வென்வேல்
மாரி அம்பின் மழைத்தோற் சோழர்
வில்ஈண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை,
ஆரியர் படையின் உடைக, என்
நேர்இறை முன்கை வீங்கிய வளையே" (336:18-23)

என்று பரத்தை செருக்கடன் உரைத்தாள்.

ஞாயிறு செல்லும் திசையை நோக்கிச் சுழலும் நெருஞ்சிப் பூவைப் போலத் தலைவனை, நான் செல்லும் இடமெல்லாம் என்னைச் சுற்றிவரச் செய்வேன். இல்லையெனில், வெற்றிபொருந்திய வேலினையும், மழைத்தாரைப்போன்ற அம்பினையும், மேகம் போன்ற விற்படையினையும் உடைய சோழனின் ஊரான வல்லத்திற்கு அருகேயுள்ள காவற்காட்டை வந்தடைந்ததைப் போல என் மணிக்கட்டிலுள்ள திரண்ட வளையல்கள் கீழே விழுந்து உடைந்து சிதறட்டும் என்று செருக்குடன் பரத்தை கூறுகிறாள்.

மேற்குறித்த பதிவின் வழிச் சோழனின் வீரம் பொருந்திய நால்வகைப் படையினையும் அவனின் ஊரான வல்லத்தையும், அதற்கு அருகே உள்ள காவற்காட்டையும் அக்காவற்காட்டை வந்தடைந்த ஆரியப் படையினையும் நன்கு அறிந்து கொள்ள முடிகின்றது.

### வெண்ணிப் போர்

தலைவனுடன் உடன்போக்கில் சென்ற தலைவியை நினைத்துப் புலம்புகிறாள் நற்றாய். அதனைக் கண்ட அருகிலிருந்தோர் அவளைத் தேற்றுகின்றனர். ஆனாலும் நற்றாய்

"கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்

பொருதுபுண் நாணிய சேர லாதன்

அழிகள மருங்கின் வாள்வடக்கு இருந்தென" **(55:10-12)**

என்று புலம்புகின்றாள்.

கரிகாலன் இரும்பெரும் வேந்தரான பெருஞ்சேரலாதனையும், பாண்டிய மன்னன் ஒருவனையும், வேளிர் முதலியோரையும் வெண்ணிப் பறந்தலையில் வென்றான் என்பதை மேற்குறித்த பாடல் சுட்டுகின்றது.

வெண்ணிப் போர்க்களத்தில் சோழன் எறிந்த வேல் சேரனின் மார்பில் பட்டு முதுகுப்புறமாக ஊடுருவிப் புண் செய்தது. புறப்புண் பழி தீருவதற்காகச் சேரலாதன், அப்போர்க்களத்தின் ஒரு புறத்தில் வாளோடு சென்று வடக்கிருந்தான் என்பதற்கு,

"புறப்புண் ணாணி மறத்தகை மன்னன்

வாளவடக் கிருந்தனன்"[51]

என்ற பாடல் சான்று பகர்கின்றது.

### கிள்ளியின் புகழ்

தலைவியைப் பரிந்து சென்ற தலைவன் தான் வருவதாகச் சொல்லிச் சென்ற கார்காலம் வந்தும் வராததால் தலைவி வருந்துகின்றாள். இதனைக் கண்ட தோழி, தலைவிக்கு ஆறுதல் கூறுகின்றாள். இருப்பினும் தலைவி,

"வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்இசை

வளம்கெழு கோசர் விளங்குபடை நூறி

நிலம்கொல வெஃகிய பொலம்பூண் கிள்ளி

பூவிரி நெடுங்கழி நாப்பண், பெரும்பெயர்க்

கவிரிப் படப்பைப் பட்டினத் தன்ன

செழுநகர் நல்விருந்து அயர்மார், ஏமுற" (205:8-13)

என்று புலம்புகின்றாள்.

வாய்மைக்குப் பெயர் பெற்ற, செல்வம் மிக்க கோசர்களுடைய நாட்டைத் தன் ஆட்சிக்குக் கீழ் கொண்டுவர விரும்பி அவர்களது படையை வென்று தான் நினைத்ததை நிலைநாட்டினான் சோழன் கிள்ளி. இச்சோழனுக்கு உரியதே காவிரிப்பூம்பட்டினம். இப்பூம்பட்டினம் கடலோடு கலக்குமிடத்து உப்பங்கழிகள் அமைந்துள்ளன. வளமையான தோட்டங்களும் மிகுதியாக உள்ளன. இப்படிப்பட்ட வளப்பம் பொருந்திய காவிரிப்பூம்பட்டினத்தைப் போன்றது தலைவியின் வீடு எனப் புகழ்கின்றார் நக்கீரர்.

### உறையூரின் வளமை

உறவினரின் துன்பம் போக்க வேண்டும், சுற்றத்தாரெல்லாம் கூடியிருந்து மகிழ்ச்சியாக உண்ணவேண்டும். அயலாரெல்லாம் நம்மிடம் அன்புடன் இருக்க வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் தலைவன் பொருள் ஈட்டுகின்றான் என்பதை,

"ஆரங் கண்ணி அடுபோர்ச் சோழர்

அறம்கெழு நல்அவை உறந்தை அன்ன

பெறல் அரும் நன்கலம்..." (93:4-6)

மேற்கண்ட அடிகள் சுட்டுகின்றன. இப்பாடலின் வழி தலைவன் ஈட்டிய பொருளுக்குச் சோழரின் உறையூர் உவமையாக்கப் பெற்றுள்ளது.

உறையூர், உறத்தூர் என்பன சோழவள நாட்டின் ஊர்களாகும். கி.மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த காத்யாயனார் என்ற வடமொழி இலக்கண ஆசிரியர் இவர்களைச் 'சோடர்கள்' எனக் குறிப்பிடுகிறார். கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் அரசாண்ட பௌத்தப்பேரரசர் அசோகர் தம்முடைய பதின்மூன்றாவது பாறைக் கல்வெட்டில் தமிழ்நாட்டு மூவேந்தர்களை நட்பரசர்களாய்க் குறிப்பிடுகிறார். புறநானூறு, அகநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலை, கலிங்கத்துப்பரணி, மூவருலா முதலிய தமிழ் நூல்களும், மகாவம்சம், இராசாவழி போன்ற இலங்கை வரலாற்று நூல்களும் சங்ககாலச் சோழர் வரலாற்றை அறியத் துணைபுரிகின்றன. மேலும் அன்பில், திருவாலங்காடு, கன்னியாகுமரி ஆகிய ஊர்களில் கிடைத்துள்ள கல்வெட்டுக்களும், செப்பேடுகளும் சோழர்களின் வரலாற்றைப் பறைசாற்றுகின்றன.

**உறையூரின் வளமை**

மயில் போன்ற சாயலை உடைய என் மகளுக்கு, அவளை ஒத்த தோழியரும், என்னைப் போன்ற தாயாரும் பார்த்து மகிழும்படித் திருமணம் செய்துவைக்க வேண்டும் என்று எண்ணியிருந்தேன். ஆனால் அவள் தலைவனுடன் உடன்போக்குச் சென்றுவிட்டாள் எனப் புலம்புகின்றாள்.

தலைவிக்கு எவ்வகைப்பட்ட இல்லத்தில் திருமணம் செய்ய முடிவு செய்திருந்தார்கள் என்பதை,

> "கைவல் யானைக் கடுந்தேர்ச் சோழர்
> காவிரிப் படப்பை உறந்தை அன்ன
> பொன்னுடை நெடுநகர்" *(385:3-5)*

என்ற அடிகள் விளக்குகின்றன.

மேற்குறித்த பாடலில் வலிய கையினை உடைய யானைப் படையினையும் விரைந்து செல்லக்கூடிய தேர்ப்படையினையும் உடைய சோழனது உறையூரைப் போன்றது தலைவியின் செல்வம் மிகுந்த வீடு என்பதை உவமையாக்கியுள்ளார் குடவாயிற் கீரத்தனார்.

**பாண்டியர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

"இந்திய தீபகர்ப்பத்தின் தென் கோடியில் அமைந்துள்ளது பாண்டிய நாடு. தெற்கே இந்து மகாக் கடலும், கிழக்கே மன்னார் வளைகுடாவும், வடக்கே சோழ கொங்கு மண்டலங்களும் மேற்கே அரபிக்கடலும் நான்கெல்லைகளாகும். மதுரை நகர் பாண்டிய நாட்டின் தலைநகரமாகும். மகாபாரதம், சங்க இலக்கியங்கள் ஆகியவற்றில் பாண்டியர் குறிப்பிடப் படுகின்றனர். கல்வெட்டுக்களில் அசோகனது கல்வெட்டுக்களிலேயே முதன் முதலாக பாண்டியரைக் காண்கின்றோம். எனவே கிறித்துவ சகாப்தத்திற்கு முன்பிலிருந்து பாண்டியர் இருந்துள்ளனர் என்பதை அறியலாம். மூன்றாம் நூற்றாண்டின் மத்தியில் களப்பிரர் என்போர் மதுரையைப் பிடித்து ஆளத்துடங்கினர். சுமார் 300 ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் பாண்டியர் தலைதூக்கினார்கள். பாண்டியர் வரலாற்றை இந்த இடத்திலிருந்துதான் கோர்வையாக எழுதமுடிகிறது. அவர்களது கல்வெட்டுக்கள் ஏழு ஆம் நூற்றாண்டிலிருந்து 17 ஆம் நூற்றாண்டு வரை கிடைக்கின்றன. இந்தியாவிலேயே கிறித்துவ சகாப்தத்திற்கு முன்பேயிருந்து 17 ஆம் நூற்றாண்டு வரை அரச கோலோச்சிய பழமையான அரச பரம்பரையினர் பாண்டியரே."[52] இத்தகுப் பாண்டியரைப் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் அகநானூற்றில் 29 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தையும் செழியனின் வீரம், பறந்தலைப் போர், தென்னவனின் புகழ், செழியனின் கொடைத்தன்மை எனும் நான்கு பகுதிகளில் காண இயலும்.

## செழியனின் வீரம்

பரத்தையிடத்திலிருந்து வந்த தலைவனை ஏற்றுக்கொள்ள மறுத்தத் தலைவி, தலைவனைப் பார்த்து பரத்தையுடன் சுற்றித்திரிந்த செய்தியைக் கூறி ஊடல்கொள்கிறாள்.

"கொய்சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங் கானத்து அகன்தலை சிவப்ப,
சேரல், செம்பியன், சினம்கெழு திதியன்,
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி,
நார்அரி நறவின் எருமை யூரன்,
தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான், இயல்தேர்ப் பொருநன் என்று
எழுவர் நல்வலம் அடங்க, ஒருபகல்
முரசொடு வெண்குடை அகப்படுத்து, உரைசெல,
கொன்று, களம் வேட்ட ஞான்றை,
வென்றிகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே" **(36:13-23)**

மேற்கண்ட பாடலின் வழி தலைவியின் ஊடலை அறியமுடிகிறது.

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும், சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என வேளிர் ஐவரும் பாண்டிய மன்னனை இளையவன் என்றெண்ணி இகழ்ந்து பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரையை முற்றுகையிட்டனர். அங்குக் கடும் போரிட்டு அவ்வெழுவரையும் விரட்டிச் சென்று சோழநாட்டில் தலையாலங்கானம் என்னும் இடத்தில் வெற்றிபெற்றான். இவ் வெற்றியால் தலையாலங்கானத்துச் செருவென்ற 'பாண்டியன் நெடுஞ்செழியன்' எனப்

பாராட்டப்பெற்றான். மேலும் இவ்வரலாறு மூன்றாம் இராசசிங்க பாண்டியனின் சின்னமனூர்ச் செப்பேட்டில் பதிவுசெய்யப் பெற்றுள்ளது. இப்பறந்தலையில் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை சிறைபிடிக்கப் பெற்றான் என்று புறநானூறு 17 வது பாடல் கூறுகின்றது. கொங்கு நாட்டதிபன் அதிகனை உறையூருக்கருகில் வாகைப் பறந்தலையில் புறங்கண்டான். வேள் எவ்வியிடம் போர் செய்து மிழலைக் கூற்றத்தையும் (புதுக்கோட்டை) முத்தூற்றுக் கூற்றத்தையும் (தஞ்சை மாவட்டம்) கைப்பற்றிப் பாண்டிய நாட்டின் பரப்பை அதிகப்படுத்தினான். இப்பாண்டியன் நெடுஞ்செழியனின் தலையாலங்கானப் போர் வெற்றி மிகவும் புகழ்பெற்ற அரும்பெரும் நிகழ்ச்சியாகப் புலவர் மரபால் போற்றப் பெற்றது என்பதை,

"ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்த

வேல்கெழு தானைச் செழியன் பாசறை"[53]

என்று நற்றிணை சுருக்கமாகச் சுட்டியுள்ளது. மேற்குறித்த வரலாற்று நிகழ்வானது தலைவியின் களவு ஒழுக்க அலர் நிகழ்ச்சிக்கு உவமையாக்கப் பெற்றுத் தலைவியின் காதல் நிகழ்வினை மேன்மைப்படுத்துவதுபோல் பாண்டிய மன்னனின் வீர வரலாற்றைப் பதிவுசெய்துள்ளார் மதுரை நக்கீரர்.

### பறந்தலைப் போர்

பரத்தையுடன் தலைவன் நீராடினான். அதனால் தலைவி தலைவனுடன் ஊடல் கொண்டாள். இவ்வூடலைத் தீர்த்து வைக்குமாறு தலைவன் தோழியிடம் வேண்டினான். அதற்குத் தோழி, தலைவனே உன்னால் தலைவிக்கு ஏற்பட்ட அலர் எவ்வளவு பெரிது தெரியுமா?

"மைஅணி யானை, மறப்போர்ச் செழியன்

பொய்யா விழவின் கூடற் பறந்தலை,

உடன்இயைந்து எழுந்த இருபெரு வேந்தர்

கடல்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி,

இரங்குஇசை முரசம் ஒழிய, பரந்துஅவர்

ஓடுபுறம் கண்ட ஞான்றை,

ஆடுகொள் வியன்களத்து ஆர்ப்பினும் பெரிதே" *(116:13-19)*

என்று தலைவனை இடித்துரைத்து அறிவுறுத்தினாள்.

வீரத்தன்மை மிக்க போர்த்தொழிலை உடைய பாண்டியன் சேர, சோழ வேந்தர்களின் மிகப்பெரும் படைகளைக் கலங்கடித்துப் புறமுதுகு காணச்செய்த வரலாற்று நிகழ்வினைத் தலைவிக்கு ஊராரால் ஏற்பட்ட அலர் நிகழ்விற்கு உவமையாக்கியுள்ளார் பரணர். மேலும்,

"நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன்

பொன்மலி நெடுநகர்க் கூடல் ஆடிய

இன்இசை ஆர்ப்பினும் பெரிதே" *(253:5-7)*

கெடாத நல்ல புகழினையுடையவன் பாண்டியன். இவன் பொன்மலிந்த நெடுநகரமான மதுரைக்கும் பொதிய மலைக்கும் தலைவன். இவன் கொங்கருடன் பகைகொண்டு அவரைப் புறங்காட்டி ஓடச் செய்து வெற்றி கொண்டான். இவ்வெற்றியைத் தன் தலைநகரான மதுரையில் கொண்டாடினான். அப்போது பெரிய ஆரவாரம் உண்டாயிற்று. அந்த ஆரவாரத்தைவிட அதிகமாக நீ தலைவியுடன் கொண்ட உறவுநிலை ஊர் முழுக்க அலராகப் பரவியுள்ளது என்று பாண்டியனின் வீர வரலாற்றைத் தலைவிக்கு ஏற்பட்ட அலர் நிகழ்வோடு ஒப்பிட்டுப் பதிவுசெய்துள்ளார் நக்கீரர்.

## தென்னவனின் புகழ்

தலைவன் இரவு நேரத்தில் தலைவியைக் காண்பதற்காக வருகின்றான். ஆனால் தலைவியைக் காணமுடியவில்லை. ஆதலால் திரும்பிச் செல்கின்றான். செல்லும் வழியில் தலைவியை நினைத்து

"வெல்போர்க் கவுரியர் நல்நாட்டு உள்ளதை

மண்கொள் புற்றத்து அரும்புஉழை திறப்பின்

ஆகொள் மூதூர்க் கள்வர் பெருமகன்,

ஏவல் இளையர் தலைவன், மேவார்

அருங்குறும்பு எறிந்த ஆற்றலொடு, பருந்துபடப்

பல்செருக் கடந்த செல்உறழ் தடக்கை,

கெடாஅ நல்இசைத் தென்னன்" (342:4-10)

என்று தலைவன் தன் நெஞ்சுக்குச் சொல்கிறான்.

வெல்லும் போராற்றலை உடைய பாண்டியன் தென்திசையை தன் ஆட்சி எல்லையாகக் கொண்டு அரசாட்சி புரிந்துவந்தான். பகைவர்களின் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வரக்கூடிய ஆற்றல்சார் வீரர்களுக்குத் தலைவன், பகைவர்களான சிற்றரசுகளை அழிக்கும் படைவலிமை உடையவன். இடியுடன் மாறுபட்ட முரசினையும் பெரிய கையையும் உடையவன். கெடாத நல்ல புகழை உடையவன். இத்தகுச் சிறப்புகளுக்கு உடையவன் பாண்டியன். இப்பாண்டியனின் மலைக்குகைகளில் மறைந்திருக்கும் தெய்வப் பெண் போலக் காண்பதற்கு அழகுடையவள் தலைவி. அவள் தலைவனைக் காணாததால் பெரிதும் வருந்தினாள். இவ்வாறாக மேற்குறித்த பாடலை வடித்துள்ளார் மதுரைக் கணக்காயனார்.

பாண்டிய மன்னனின் மலைக்குகைகளில் மறைந்திருக்கக்கூடிய அந்தத் தெய்வப் பெண் கொல்லிப்பாவையாக இருக்கலாம். அக்கொல்லிப்

பாவைக்கு இணையானவள் தலைவி என்றுரைப்பதற்குப் பாண்டிய மன்னனின் வீரவரலாற்றினை உவமையாக்கிப் புகழ்கின்றார்.

## செழியனின் கொடை

பரத்தையுடன் தலைவன் மகிழ்ந்திருந்தான் என்ற செய்தியைக் கேட்ட தலைவி பரத்தையைச் சாடுகிறாள். இதனைக் கேள்வியுற்ற பரத்தை தலைவியின் தோழி கேட்கும்படி,

"ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன்
வெளிறுஇல் கற்பின் மண்டுஅமர் அடுதொறும்
களிறுபெறு வல்சிப் பாணன் எறியும்
தண்ணுமைக் கண்ணின் அலைஇயர், தன்வயிறே" (106:10-13)

என்று செருக்குடன் உரைத்தாள் என்பதை ஆலங்குடி வங்கனார் பதிவு செய்துள்ளார்.

தன்னையும் (பரத்தை) தலைவனையும் பழித்த தலைவியைச் சினமூட்ட வேண்டும் என்றெண்ணிய பரத்தை தன் தோழியிடம் நீயும் நானும் கைநிறைய வளையல்களை அணிந்துகொண்டு தலைவி இருக்கும் வீட்டுப் பக்கம் சென்றுவருவோம், அப்போதுதான் பாண்டியனது வெற்றியைப் புகழ்ந்து பாடி யானைகளைப் பரிசாகப்பெறும் பாணன் அடிக்கும் மத்தளம் எவ்வாறு அதிருமோ அதைப்போலத் தலைவி தன் வயிற்றில் அடித்துக் கொள்ளுவாள் என்பதைப் பாண்டிய வேந்தனின் முரசு முழக்கத்திற்குத் தலைவியின் வருத்தத்தை உவமையாக்கியுள்ளார்.

## குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

சங்ககாலப் புலவர்கள் தம் காலத்து வரலாற்று நிகழ்வுகளைப் புறப்பாடல்களில் பதிவுசெய்ததோடு அல்லாமல் அகப்பாடல்களிலும்

பதிவுசெய்துள்ளனர். அப்பதிவுகள் இன்று வரலாற்றுக் கருவூலங்களாய்த் திகழ்கின்றன. தங்கள் காலத்தில் நடந்த வரலாற்று நிகழ்வுகளைச் சான்றாதாரங்களுடன் பதிவுசெய்யும் பொருட்டுப் புலவர்கள் வரலாற்று நிகழ்வுகளைத் தகுந்த இடங்களில் பயன்படுத்தியுள்ளனர். அவ்வகையில் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான அகநானூற்றில் குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்று நிகழ்வுகள் உவமை வாயிலாக **125** பாடல்களில் **165** இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தையும் வேள்ஆவியின் வீரம், அன்னியின் வீரம், ஆஅய்யின் புகழ்மாலை, காரியின் பெண்ணையாற்றுப் புகழ், பொதினியின் வளப்பு, அன்னிமிஞிலியின் மகிழ்ச்சி எனும் ஆறு பொருண்மைகளில் அடக்கலாம்.

### வேள் ஆவியின் வீரம்

பொருள் தேடச் சென்ற தலைவன் நெடுநாளாகியும் வாராததால் தலைவி, தலைவனை நினைத்து,

> "உருவக் குதிரை மழவர் ஓட்டிய
> முருகன் நற்போர் நெடுவேள் ஆவி,
> அறுகோட்டு யானைப் பொதினி ஆங்கண்,
> சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
> கல்போல் பிரியலம் என்ற சொல்தாம்
> மறந்தனர் கொல்லோ, தோழி" **(1:2-7)**

என்று புலம்புகின்றாள். நிலம் பிளக்குமாறு சூரியன் வெப்பத்தைக் கக்குவதால் காட்டில் உள்ள மரங்கள் பசுமை இழந்து நிற்கின்றன. பாறைகள் கொதிக்கின்றன. நீரின்றிச் சுனைகளும் வற்றிவிட்டன. இதனால் வழிச் செல்வோர் எவரும் அவ்வழியில் செல்லாததால் வழிப்பறிக்கொள்ளையர்கள் தம் தொழிலை மறந்து வறுமையில் வாடும் அளவிற்குப் பொலிவிழந்துள்ளனர்.

இத்தகைய காட்டுவழியில் பொருள்தேடச் சென்றார் தலைவர். அஞ்சத்தக்க குதிரைகளையும் தலையில் கண்ணியையும், காலில் வீரக்கழலையும் அணிந்தவன் வேள் ஆவி. இவன் முருகனைப் போன்று போர்த்தொழில் செய்து மழவரைத் தோற்கடித்தவன். இவனது யானைப் படைகள் நிறைந்த பொதிய மலையில் சிறுவர்கள் அரக்குடன் சேர்த்துச் செய்த சாணைக்கல் போல உறுதியாகப் பிரியமாட்டேன் என்று முன்பு கூறிய சொல்லைத் தலைவர் மறந்துவிட்டார் என்று தன் வருத்தத்தைத் தோழியிடம் சொல்லிப் புலம்புகின்றாள்.

தலைவியின் புலம்பலுக்கு வேள்ஆவி மழவரை வென்ற வரலாற்று நிகழ்வு இங்கு உவமையாக்கப் பெற்றுள்ளது.

### அன்னியின் வீரம்

கடுமையான வீட்டுக் காவலில் இருந்த தலைவியைச் செவிலித் தாய் தண்டித்தாள். அதனால் தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்றுவிட்டாள். சென்றவளை நினைத்துச் செவிலித்தாய் புலம்புவதோடு தலைவியைத் தண்டித்த கை

"அன்னி குறுக்கைப் பறந்தலை, திதியன்
தொல்நிலை முழுமுதல் துமியப் பண்ணிய
நன்னர் மெல்இணர்ப் புன்னை போல,
கடுநவைப் படீஇயர் மாதோ" (145:11-14)

என்று சிதைவுறட்டும் என்கிறாள்.

குறுக்கைப் பறந்தலை என்னும் போர்க்களத்தில் பெரும்புகழுடைய அன்னி என்பான் திதியன் என்பவனது பரம்பரைக் காவல் மரமான புன்னை மரத்தை அடியோடு வெட்டினான். வெட்டியதால் அம்மரம் சிதைவுற்றுக்

கிடந்தது என்பது வரலாறு. இம்மரத்தைப் போலத் தலைவியை அடித்த என் கை சிதைந்து போகட்டும் என்றெண்ணிப் புலம்புகிறாள் செவிலித்தாய்.

அன்னி, திதியனின் காவல் மரமான புன்னை மரத்தை வெட்டிய வரலாற்று நிகழ்வை அக இலக்கியச் செவிலி கூற்றுக்கு உவமையாக்கிப் பாடலைமெருகூட்டித் தமிழகக் குறுநில மன்னர்களான அன்னி, திதியன் ஆகியோரின் வரலாற்றினைப் பதிவு செய்துள்ளார் கயமனார்.

**ஆஅய்யின் புகழ்**

தீமையை அழிக்கக் கூடிய தெய்வத்தின் முன்நின்று என் முன்கையைப் பற்றி உன்னைப் பிரிய மாட்டேன் என்று முன்பு சூளுரைத்தாய். இன்று அச்சூளுரையை மறந்து என்னைப் பிரிந்து செல்கிறாய். உன்னைப் போல் அல்ல ஆஅய் எயினன். அவன் சொன்ன சொல் தவறாதவன் என்பதை,

"தொடுத்தென், மகிழ்ந செல்லல் கொடித்தேர்ப்
பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென
யாழ்இசை மறுகின் பாழி ஆங்கண்,
அஞ்சல் என்ற ஆஅய் எயினன்
இகல்அடு கற்பின் மிஞிலியொடு தாக்கி,
தன்னுயிர் கொடுத் தனன்" **(396:1-6)**

என்ற வரிகள் உறுதிசெய்கின்றன. புன்னாடு என்னும் நாட்டில் உள்ளவரைச் சினந்து எழுந்த நன்னனை யாழின் இசை பொருந்திய பாழி என்னும் நகரிலிருந்து எதிர்த்து, மக்களைப் பார்த்து அஞ்சாதீர் என்று ஆறுதல் கூறினான் ஆஅய் எயினன் எனும் குறுநில மன்னன் தான் சொன்ன சொல் தவறாது நன்னனின் படைத்தலைவனான மிஞிலி என்பவனோடு போர் செய்து தன் உயிரைத் துறந்தான். தலைவன் நீயோ சொன்ன சொல் தவறிவிட்டாய் என்று புலம்புகின்றாள். இப்புலம்பலின் வழி ஆஅய் எயினன்

சொன்ன சொல் தவறாதவன் என்ற வரலாறு பரத்தையின் வாயிலாகப் பதிவு செய்யப் பெற்றுள்ளது.

## காரியின் - பெண்ணையாற்றுப் புகழ்

வானளாவிய எங்கள் பெரிய வீடானது தனிமையுறும்படிப் பெற்றெடுத்த எங்களையும், வளர்த்து வந்த செவிலியையும், உடன் உறங்கிய தோழியையும் விடுத்துத் தலைவன் பெரிதென எண்ணி அவனோடு உடன்போக்குச் சென்றுவிட்டாள். அவள் சென்ற வழி வெட்சி வீரர்கள் கவர்ந்து வந்த பகைவர்களுடைய ஆநிரைகளை மீட்டுப்போக வந்த கரந்தை வீரர்கள் போரிட்டு, அவ்வெட்சியரை வெட்டி வீழ்த்திய இடங்களில் மயில்பீலிகள் சூட்டிக் கள்ளை வைத்து வழிபாடு செய்யும் அச்சம் பொருந்திய நடுகற்கள் உடைய வழி. இவ்வழியில் செல்லத் துணிந்த என் மகளை, தலைவன் மகிழ்ச்சியாக வைத்திருக்க வேண்டுமென எண்ணி,

"துஞ்சா முழவின் கோவல் கோமான்
நெடுந்தேர்க் காரி கொடுங்கால் முன்துறைப்
பெண்ணைஅம் பேரியாற்று நுண்அறல் கடுக்கும்
நெறிஇருங் கதுப்பின்என் பேதைக்கு,
அறியாத் தேஎத்து ஆற்றிய துணையே" (35:14-18)

என்று தெய்வத்தினை வேண்டுகிறாள் நற்றாய். மேற்குறித்த பாடல் தலைவனுடன் உடன்போக்குச் சென்ற தலைவியின் கூந்தலை வருணிப்பதற்குக் 'காரி' என்னும் குறுநில மன்னனுடைய கொடுங்கால் என்னும் ஊர்த் துறையில் ஓடும் பெண்ணையாற்றினை உவமையாக்கியுள்ளார் அம்மூவனார். இவ்வுவமையின் வழித் திருக்கோவலூர்த் தலைவனாகிய 'காரி' என்பவன் பெண்ணையாற்றின் அருகில் உள்ள கொடுங்காலூரை ஆண்டுள்ளான் என்பதை அறிய முடிகின்றது. மேலும், தலைவி சென்ற வழி அச்சம் தரும் நடுகல் நிரம்பியது என்பதால், போரில் இறந்துபடும்

வீரர்களுக்கு நடுகல் எடுப்பது தமிழர்களின் மரபாக இருந்துள்ளது என்பதையும் அறிய வழிவகை செய்கின்றது.

**பொதினி மலையின் வனப்பு**

தலைவன் பொருள்தேடப் பிரிந்து சென்றபோது தலைவி பெரிதும் வருந்தினாள். அவள் வருத்தத்தைத் தீர்க்கும் பொருட்டுத் தோழி, தலைவனுக்கு எவ்வளவு பெரிய செல்வம் கிடைத்தாலும் உன்னை மறந்து அங்கேயே தங்கமாட்டார் என்கிறாள். இதனை,

“முழவுஉறழ் திணிதோள் நெடுவேள் ஆவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி அன்னநின்
ஒண்கேழ் வனமுலைப் பொலிந்த
நுண்பூண் ஆகம் பொருந்துதல் மறந்தே” *(61:15-18)*

என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன. குறுநில மன்னனான புல்லி என்பானுக்குச் சொந்தமான திருவேங்கடத்தை ஒத்த செல்வம் தலைவனுக்குக் கிடைத்தாலும், வீரத்தோள் கொண்ட நெடுவேள் ஆவியின் அழகுமிக்க நகராகிய பழனியில் உள்ள பொதினிமலை போன்ற ஒத்த அழகுடைய உன்னையும், உன் தழுவலையும் மறந்து அங்கேயே தங்கிவிடமாட்டார் என்று தலைவியின் அழகு நலனுக்கு நெடுவேள் ஆவி எனும் குறுநில மன்னனுக்குச் சொந்தமான பழனி நகரும், மலையும் உவமையாக்கப் பெற்றுள்ளன. இப்பொதினி மலை இன்று ‘திருஆவினன்குடி’ பழனிமலை என்று அழைக்கப்படுகின்றது.

**அன்னி மிஞிலியின் மகிழ்ச்சி**

தலைவன் இரவுநேரத்தில் தலைவியைக் காணவந்து, அவளோடு இன்பமாய் இருந்துவிட்டுத் திரும்பிச் செல்லும் வழியில் அவன் பெற்ற இன்பத்தை நெஞ்சிற்குச் சொல்லி மன மகிழ்ச்சி கொள்கின்றான் என்பதற்கு

"பாசிலை அமன்ற பயறுஆ புக்கென,

வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து, அருளாது,

ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்,

கலத்தும் உண்ணாள், வாலிதும் உடாஅள்,

சினத்தின் கொண்ட படிவம் மாறாள்,

மறம்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்,

செருஇயல் நல்மான் திதியற்கு உரைத்து, அவர்

இன்உயிர் செகுப்பக் கண்டுசினம் மாறிய

அன்னி மிஞிலி போல..." *(262:4-12)*

என்ற பாடலடிகள் சான்று பகர்கின்றன.

கோசருடைய நிலத்தில் மிஞிலியின் பசு பயறு விளைந்த செடியினை மேய்ந்து விடுகின்றது. மேய்ந்த குற்றத்திற்காக மிஞிலியையும் அவன் பசுவையும் அரசவைக்கு அழைத்துச் செல்கின்றனர். அங்குத் தன் குற்றத்தை மிஞிலி ஒப்புக்கொள்கிறான். இருப்பினும் கோசர் கோபம் தீராமல், முதியவர் என்றும் பாராமல் மிஞிலியின் கண்களைப் பிடுங்கிவிடுகின்றனர். இக்கொடுமையை அறிந்த அவன் மகள் அன்னிமிஞிலி அன்று முதல் கோசரின் கொட்டத்தை அடக்குவேன் என்று சபதமிட்டுத் தவக்கோலம் பூணுகின்றாள். இறுதியில் குறும்பர் இனத்தைச் சேர்ந்த குறுநில மன்னனான திதியனிடம் சென்று தன் தந்தைக்கு நிகழ்ந்த கொடுமையினைக் கூறுகின்றாள். அக்கொடுமையினைக் கேட்ட திதியன் போர்த்திறன் மிக்க குதிரைப்படைகளோடு சென்று கோசரோடு போர்செய்து அவர்களைத்தோற்கடித்தான். அதனால் அன்னிமிஞிலி பெரிதும் மனமகிழ்ச்சி கொண்டாள் என்பது வரலாறு.

இவ்வரலாற்றினைத் தலைவன் தலைவியோடு இரவில் கூடி இருந்த இன்ப நிகழ்ச்சிக்கு உவமையாக்கிப் பதிவு செய்துள்ளார் பரணர்.

## தொகுப்புரை

- தமிழர்களின் தனிப்பெரும் அடையாளமாகத் திகழ்வது சங்க இலக்கியம், இச்சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் பதிற்றுப்பத்தும் புறநானூறும் வரலாற்றினைப் பதிவுசெய்வதற்காகவே படைக்கப்பெற்ற புறஇலக்கிய நூல்களாகும். இந்நூல்களில் வரலாற்றுப் பதிவுகள் எந்த அளவிற்கு முக்கியத்துவம் கொடுத்துப் பதிவுசெய்யப் பெற்றுள்ளதோ அதே அளவிற்கு முக்கியத்துவம் கொடுத்து அக இலக்கியங்களிலும் வரலாற்றுப் பதிவுகள் பதிவு செய்யப் பெற்றுள்ளன.
- அகம் எனும் சொல்லுக்குக் காதல், ஒழுக்கம் என இருவகையான பொருண்மைகளைத் தருகின்றது சங்க இலக்கியம்.
- தலைவன், தலைவியது மன உணர்வுகளையும் உச்சகட்ட உணர்ச்சிகளையும் தெளிவுற எடுத்துரைப்பதற்குப் புலவர்கள் வரலாற்று நிகழ்வுகளை உவமையாகப் பயன்படுத்தியுள்ளனர்.
- சங்கக் கவிதைகளில் மிகச் சிறந்த காதல் தொகுப்பாக விளங்குவது நற்றிணை. இந்நற்றிணையில் சேரவேந்தர் குறித்து ஏழு இடங்களில் வரலாற்றுப் பதிவுகள் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. சேரர் என்பதே குடியின் பொதுப் பெயர். இதுவே முதன்மையும் தலைமையும் அமைந்த பெயராய் ஆட்சி பெற்றுள்ளது.
- பழைமையும் பெருமையும் பெற்று விளங்கிய மூவேந்தருள் நடுவண் வைத்துச் சிறப்பிக்கப் பெறுபவர் சோழர் இச்சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் நற்றிணையில் 11 இடங்களில் பதிவு செய்யப்பெற்றுள்ளன. இப்பதினொரு பதிவுகளையும், குட்டுவனின் வீரம், குட்டுவனின் குடமலைச்சிறப்பு, பொறையனின் புகழ் தொண்டியின் சிறப்பு எனும் நான்கு பொருண்மைகளில் பகுத்து ஆராயப் பெற்றுள்ளன.

- பாண்டிய வேந்தருடைய பழம்பெரும் சிறப்புகளுள் அன்னோர் சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்த சிறப்பு குறிப்பிடத் தகுந்தது. இத்தகுச் சிறப்புடைய பாண்டிய வேந்தர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 10 இடங்களில் பதிவு செய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தையும் பாண்டியனின் வீரம், பாண்டியனின் புகழ், பாண்டியனின் ஊர்ச்சிறப்பு, பாண்டியனின் ஆளுமை எனும் நான்கு பொருண்மைகளாகப் பகுத்து ஆராயப் பெற்றுள்ளன.
- பழந்தமிழகத்தில் பெருநில வேந்தரையும் வேளிரையும் அடுத்து மொழியப் பெறுவோர் குறுநிலமன்னர்கள். இக்குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் நற்றிணையில் 36 இடங்களில் பதிவு செய்யப்பெற்றுள்ளன.
- சங்க இலக்கியங்கள் பொருள் வகையாலும், அடிவரையறையாலும் பாகுபாடு செய்து பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என இருபெரும் பிரிவாகப் பிரித்தனர். இப்பிரிவின் ஒரு பகுதியான தொகை நூல்களில் முதன் முதலில் தொகுக்கப் பெற்ற நூல் குறுந்தொகை. இக்குறுந்தொகையில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் மூன்று இடங்களிலும், சோழர் குறித்த வரலாற்றுப் பதிவு ஓர் இடத்திலும், பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவு ஓர் இடத்திலும் குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 23 பாடல்களிலும் பதிவு செய்யப் பெற்றுள்ளன.
- குறுந்தொகையில் மூவேந்தர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகளை விடக் குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் அதிகமாகப் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

♦ சங்க இலக்கியத் தொகை நூல்களில் மருதத்தை முதலாவதாகக் கொண்டது ஐங்குறுநூறு இவ்ஐங்குறுநூற்றில் சேரவேந்தர் குறித்த வரலாற்றுப் பதிவு ஓர் இடத்திலும், சோழவேந்தர் குறித்து வரலாற்றுப் பதிவுகள் இரண்டு இடங்களிலும், பாண்டிய வேந்தர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் மூன்று இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் மூன்று இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

♦ தொகை நூல்களுள் பாவின் பெயரைப் பெற்ற நூல்கள் பரிபாடலும், கலித்தொகையுமாகும்.

♦ கலித்தொகையில் பாண்டிய மன்னனைக் குறித்தும், அவன் தலைநகராகிய கூடல் குறித்தும், வையை ஆறு குறித்தும், நிறைந்த செய்திகள் பதிவுசெய்யப் பெற்றிருக்க சேர, சோழ, நாடுகளைப் பற்றிய குறிப்புகள் இந்நூலில் ஒன்றும் பதிவு செய்யப்படவில்லை.

♦ பாண்டியர் அரசாண்ட மதுரையை மையமிட்டுப் படைக்கப் பெற்ற இக்கலித்தொகையில் மூன்று பதிவுகள் மட்டும் தென்னவர் என்ற புனைப்பெயரால் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

♦ நெடுந்தொகை எனும் பெயர் கொண்ட அகநானூற்றில் சேரவேந்தர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 32 இடங்களிலும், சோழவேந்தர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 26 இடங்களிலும், பாண்டிய வேந்தர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 28 இடங்களிலும், குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 125 பாடல்களில் 165 இடங்களிலம் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

♦ இவ்அகநானூற்றில் மூவேந்தர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகளை விட குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் அதிகம்.

- அக இலக்கியங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ள ஒட்டுமொத்த வரலாற்றுப் பதிவுகளையும் நோக்குங்கால் பெருநில வேந்தர்களைக் காட்டிலும் குறுநில மன்னர்களுக்கான வரலாற்றுப் பதிவுகளே அதிகமாக பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகளின் பின்புலத்தினை நோக்குங்கால் பெருநிலவேந்தர்களைக் காட்டிலும் குறுநில மன்னர்களே புலவர்களிடம் இணக்கமான உறவுடையவராக இருந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. ஆர்.பார்த்தசாரதி (பதிப்புரை), நற்றிணை மூலமும் உரையும், ப.vii.
2. காவ்யா சண்முகசுந்தரம் (தொ.ஆ.), தெ.பொ.மீ.களஞ்சியம் (v) சங்கத்தமிழ், ப.231.
3. வ.குருநாதன், சங்ககால அரச வரலாறு, ப.59.
4. கா.கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை, பதிப்புரையில் (பகுதி-க), ப.123.
5. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (பகுதி-க, சோழர்), ப.2.
6. மேலது, ப.2.
7. மொ.அ.துரை அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், ப.262.
8. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (பகுதி-க, சோழர்), ப.3-4.
9. வ.குருநாதன், சங்ககால அரச வரலாறு, ப.143.
10. மொ.அ.துரை அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், ப.258.
11. இரா.இளங்குமரன், புறநானூறு, பா.152:1-12.
12. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (பகுதி-உ, வள்ளல்), ப.5.
13. மேலது, ப.105.
14. வ.குருநாதன், சங்ககால அரச வரலாறு, பக்.317-318.
15. மேலது, ப.318.
16. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை, ப.8
17. சி.பாலசுப்பிரமணியன், சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள், ப.229
18. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (பகுதி-க), ப.3
19. துரை.இராசாராம், குறுந்தொகை தெளிவுரை, ப.121.
20. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (பகுதி-உ, வள்ளல்), ப.30.
21. நச்சினார்க்கினியர் உரை., பொருநராற்றுப்படை, பா.246-248.
22. இரா.இளங்குமரன், புறநானூறு, பா.40:10-11.

23. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (பகுதி-க, சோழர்), ப.10.

24. வே.சாமிநாதையர், தமிழ்விடு தூது, பா.வரி.39-40.

25. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (பகுதி-ச), ப.84.

26. வி.நாகராசன், குறுந்தொகை மூலமும் உரையும், ப.607.

27. துரை.இராசாராம், குறுந்தொகை, தெளிவுரை, ப.302.

28. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (பகுதி-ச), ப.73.

29. மேலது, ப.18.

30. அ.தட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு மூலமும் உரையும், (முன்னுரை), ப.vi

31. அரங்க இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப.39

32. பா.கவிதா, தொண்டியின் சிறப்பும் தலைவியின் வனப்பும், ப.89

33. K.N.Siva (a) a pilli, The chronology of the Early Tamils, P.192.

34. அ.தட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.171.

35. ____________________, செந்தமிழ், தொகுதி - 8, ப.10

36. கால்டுவெல், திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம், ப.16.

37. மொ.அ.துரை அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், ப.212.

38. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (பாண்டியர்), ப.98.

39. கா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை (திரையன் முதலிய), ப.99.

40. தொல்காப்பியம், அகத்திணை இயல், நூ.53.

41. மு.முனீஸ்மூர்த்தி, சமூகவியல் நோக்கியல் கலித்தொகை வாசிப்பு, ப.3.

42. கலைக்களஞ்சியம், மூன்றாந்தொகதி, ப.335.

43. டி.வி.சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.1.

44. மேலது, ப.4.

45. இரா.வேங்கடாசலம் பிள்ளை, அகநானூற்றுச் சொற்பொழிவுகள் தலைமை உரை, ப.9.

46. N.Subramanian, History of Tamilnadu, P.57.

47. V.D.Mahajan, Ancient India, P.797.

*48. இரா.இளங்குமரன், புறநானூறு, பா.2:16.*

*49. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, பண்டை நாளைச்சேரமன்னர் வரலாறு, ப.185.*

*50. டி.வி.சதாசிவ பண்டாரத்தார், முதற்குலோத்துங்க சோழன், ப.1.*

*51. இரா.இளங்குமரன், புறநானூறு, பா.65:10-11.*

*52. என்.சேதுராமன், பாண்டியர் வரலாறு (கி.பி.550-1371), ப.1.*

*53. கு.வெ.பாலசுப்பிரமணியன், நற்றிணை, பா.387.*

## இயல் மூன்று

# புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்

சங்க இலக்கியம் தமிழின் மூல இலக்கியம் என்றும் மூத்த இலக்கியம் என்றும் செவ்வியல் இலக்கியம் என்றும் அறிஞர் பெருமக்களால் பலவாறு பாராட்டப் பெறுகின்றது. வில்லியம் ஹென்றி அட்சன் (William Henry Hudson) என்ற மேலைநாட்டுத் திறனாய்வாளர், 'இலக்கியம் என்பது ஒரு நாட்டின் சுயசரிதை என்கிறார்.' இக்கருத்து தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியத்திற்கு முற்றிலும் பொருந்தும். எவ்வாறெனில், 'சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறார்' எனும் கோட்பாட்டினை உள்ளடக்கிய அகப்பொருளையும், வீரம், ஈரம், மானம், கொடை, கல்வி, புகழ், தொழில் ஆகிய புரவலர்களின் மாண்புகளை உள்ளடக்கிய புறப்பொருளையும் சங்க இலக்கியங்கள் தெளிவுற விளக்குகின்றன. இச்சங்க இலக்கியங்களில் சுட்டப்பெறும் இருபொருண்மைகளையும் தமிழர்கள் தம் இரு கண்களாகப் பாவித்தனர்.

சங்க இலக்கியத்தில் புறப்பொருள் பற்றிய தொகை நூல்கள் இரண்டு 1.பதிற்றுப்பத்து 2.புறநானூறு. பதிற்றுப்பத்தில் சேரவேந்தர்களின் மூன்று தலைமுறையினர் பற்றிய வரலாற்றுப் பதிவுகளும் அவர்கள் காலத்துக் குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகளும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. புறநானூற்றில் மூவேந்தர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகளும் அவர்கள் காலத்துக் குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகளும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இவ்விரு பதிவுகளையும் ஆய்ந்து வகைப்படுத்தி விளக்கும் முகமாக இவ்வியல் அமைகிறது.

### பதிற்றுப்பத்து

சேரமன்னர்கள் பற்றிய பாடல்களின் தொகுப்பு பதிற்றுப்பத்து. இந்நூல் பத்துப் பத்து அகவற்பாக்களால் அமைந்தது என்பதால்

பதிற்றுப்பத்து எனப் பெயர்பெறலாயிற்று. இப்பதிற்றுப்பத்தில் முதற்பத்தும் இறுதிப்பத்தும் கிடைக்கவில்லை. ஏனைய எட்டுப் பத்துக்களும் ஆழ்ந்த உணர்ச்சி, அரிய கற்பனை, தெளிந்த வடிவம், உயரிய குறிக்கோள், நடந்த வரலாற்று நிகழ்வு முதலியவற்றைக் கொண்டு புலவர் பெருமக்களால் இயற்றப்பெற்றனவாகும். பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பாடலிலும் பயின்று வந்துள்ள உயிர்ப்பான வரிகள் அப்பாடலுக்குத் தலைப்பாகப் பெயரிடப் பெற்றுள்ளன.

ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் அப்பாடலுக்கான வண்ணம், தூக்கு ஆகியன சுட்டப் பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் அப்பத்தினைப் பாடிய புலவரின் பெயர், அப்பத்தின் பாட்டுடைத் தலைவர், அவர் செய்த அரும்பெருஞ் செயல்கள், புலவருக்குப் புரவலர் அளித்த பரிசில் முதலிய செய்திகளைக் குறிப்பிடும் பதிகம் ஒன்று உள்ளது. அப்பதிகங்கள் ஆசிரியப்பாவில் தொடங்கி, கட்டுரையாக முடிவுபெறுகின்றன. இவ் அமைப்பு சாசனங்களில் காணப்பெறும் மெய்க்கீர்த்திகளைப் போன்ற அமைப்பை உடையது. இப்பதிகங்களைத் தொகுத்தார் தொகுப்பித்தார் இன்னார் என்று தெரியவில்லை. ஆனால் இப்பதிகங்கள் தொகுத்தார் காலத்திற்குப் பிந்தியும் உரையாசிரியர் காலத்திற்கு முந்தியும் தோன்றியிருத்தல் வேண்டும்.

பதிற்றுப்பத்திற்குப் பழைய உரை ஒன்று கிட்டியுள்ளது. இப்பழைய உரையை எழுதியவர் பெயர், குறிப்பு, பின்புலம் ஏதும் கிட்டவில்லை. “ஏனைத் தொகை நூல்களைவிட இந்நூற்கண் வரும் பாட்டுக்கள் பொருள்நிறைந்து, சொற்செறிவு மிகுந்து, ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்டிருத்தலின் தமிழ் கற்போர் இதனை ‘இரும்புக் கடலை’ என இயம்புவதுண்டு”[1] என்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. இத்தகு

சிறப்புக்குரிய பதிற்றுப்பத்தில் எட்டுச் சேர அரசர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகளும், 20 குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகளும் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

**சேரர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

பதிற்றுப்பத்துச் சேரவேந்தர்களை உதியன் மரபினர், அந்துவன் மரபினர் என்று இரு மரபினராக வகுத்துரைப்பர் சங்கப்புலவர்கள். ஒரேகாலத்தில் சேர நாட்டின் மேற்குக் கடற்கரையான குடகு நாட்டை உதியன் மரபினர் ஆண்டுவந்தனர். சேரநாட்டின் கிழக்குப் பகுதியான கொங்கு நாட்டை அந்துவன் மரபினர் ஆண்டுவந்தனர்.

இவ்விருதிறத்துச் சேரமரபினரின் புனைப்பெயர்கள் பற்றி அறியப் பழம்பெரும் பாட்டொன்று துணைசெய்கின்றது.

"பூழியன் உதியன் கொங்கன் பொறையன்
வானவன் குட்டுவன் வான வரம்பன்
வில்லவன் குடநாடன் வஞ்சி வேந்தன்
கொல்லிச் சிலம்பன் கோதை கேரளன்
போந்தின் கண்ணியன் பொருநைத் துறைவன்
சேரலன் மலையன்கோச் சேரன் பெயரே"[2]

மேற்குறித்த புனைப் பெயரையுடைய சேரர்குறித்த வரலாற்றுப்பதிவுகள் பதிற்றுப்பத்தில் 84 இடங்களிலும் 20 குறுநில மன்னர்கள் பற்றி 39 வரலாற்றுப் பதிவுகளும் (விவரம் : பின்னிணைப்பு-6) இப்பதிவுகள் அனைத்தையும் சேரர்களின் வீரம், புகழ், கொடை என்ற மூன்று பொருண்மைகளில் உள்ளடக்கலாம்.

**இமயவரம்பன்**

முதியர்ப் பேணிய உதியஞ்சேரலுக்கு வெளியன் வேண்மாள் நல்லினியென்பாள் வயிற்றில் பிறந்த மகன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். இவன் குடக்கோ நெடுஞ்சேரலாதன் (பதிற்.பதி.6), குடவர் கோமான் நெடுஞ்சேரலாதன் (பதிற்.பதி.5), சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் (புறநா.62,63,368), சேரலாதன் (பதிற்.11,15,18 பதிற்.பதி.4, அகநா.127, 347), நெடுஞ்சேரலாதன் (பதிற்.20) என்றெல்லாம் சுட்டப்பெறுகிறான். பெருஞ்சேரலாதனைப் பாடிய கழாத்தலையார் (புறநா.65), மாமூலனார் (அகநா.55) ஆகிய இருவரும் இவனையும் பாடியுள்ளமை (புறநா.62, 368, அகநா.127, 347) சிறப்பிற்குரியது. இதன் வழி இமயவரம்பன் இப்புலவர்களின் காலத்தவன் என்பது புலனாகும்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் குமட்டூர்க் கண்ணனாரால் பத்துப்பாடல்களில் சிறப்பித்துப் பாடப்பெற்று உள்ளான்.

“சிறு சிறு நிலப்பரப்பை ஆண்ட குறுநில மன்னர்களைப் புலவர்கள் போற்றிப் பாடும் ஆற்றுப்படையில் நெடிய நிலப்பரப்பை அவர்கள் ஆள்வது போல் தோன்றுமாறு நானில வருணனை பேசப்படும். ஆகவே மிகப் பெரிய நிலப்பரப்பைத் தாம் ஆள வேண்டும் என்ற எண்ணம் பண்டைத்தமிழ் வேந்தர்களுக்கு இருந்திருக்கிறது”[3] இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் போர்த்திறத்தை உணர்த்துவதாக மூன்று நிகழ்வுகள் இனங்கொள்ளப் பெறுகின்றன. அவை வருமாறு:

1. மேற்குக் கடல் தீவில் இருந்து குறும்பு செய்தவர்களை வென்று அடக்கி அவர்களுடைய கடம்ப மரத்தை வெட்டியது.
2. இமயமலை வரை சென்று வெற்றிகொண்டு சேரர்களின் அடையாளச் சின்னமான வில்லினை இமயமலையில் பொறித்தது.

3. ஆரிய, யவன மன்னர்களை வென்று சிறைபிடித்து அவர்கள் தலையில் கல்லைச் சுமத்தியது போன்றனவாகும்.

### கடம்பரை வென்றது

அரபிக் கடலின் சில தீவுகளில் வசித்து வந்த ஒரு குடியினர் கடம்பமரத்தைக் காவல்மரமாகக் கொண்டிருந்தனர். அவர்கள் கடம்பர் என்று அழைக்கப் பெற்றனர். இக்கடம்பர் சேரநாட்டினர்க்கும், அந்நாட்டிற்கு வரும் மேனாட்டு வாணிகர்க்கும் தொல்லைகள் கொடுத்துக் கொண்டிருந்தனர். 'கி.பி.80-ல் தமிழ்நாட்டுக்கு வந்த பிளினி (Pliny) என்னும் யவனர் (கிரேக்கர்) தாம் எழுதியுள்ள யவன வாணிகக்குறிப்பில் இச்செய்தியைப் பதிவுசெய்துள்ளதாகச் சுட்டுவர்' மயிலை சீனி.வேங்கடசாமி. இவ்வாறு தொல்லை கொடுத்த கடற்கொள்ளையராகிய கடம்பரை இமயவரம்பன் படையெடுத்துச் சென்று வென்றடக்கினான். கடலுக்கு நடுவே அவுணர்களால் காக்கப்பட்டதும் அவுணர்கோனாகிய சூரனுக்குரியதுமான மாமரத்தின் அடியை முருகப்பெருமான் வெட்டியது போல் இவன், கடம்பர்கள் பலரும் மொய்த்து நின்று காத்திருந்த கடம்பமரத்தின் அடியை வெட்டுமாறு தன் படைமறவரை ஏவி அவ்வாறு வெட்டப்பட்ட கடம்பின் அடிமரத்தினால் தனக்கு வெற்றிமுரசும் செய்வித்தானென்று இவனது இவ்வெற்றியைப் புனைந்து பாடுவார் குமட்டூர்க் கண்ணனார். அது பின் வருமாறு:

"நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்
சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
..........................................................
..........................................................
போராடு தானைச் சேரலாத" (பதிற்.11:3-16)

மேலும் அவர், பகை மறவர்கள் உயிரிழந்து வீழுமாறு அவர்களோடு வாட்போர் செய்து அவர்களுக்குரிய இடங்களைக் கவர்ந்து கொள்ளும் படைச் சுற்றத்தினையுடையவர்கள் கடம்பர். அத்தகைய கடம்ப மன்னரும் அஞ்சித் தலைநடுங்கும் படியாக அவர்களை எதிர்த்துப் போர் செய்து, அவர்களது காவல் மரமான கடம்பின் அடியை வெட்டிய கடுஞ்சின வேந்தன் இமயவரம்பன் என்றும் பாடுகின்றார். இதனைப் பின்வரும் பாடல்வழி அறியலாம்.

"நுங்கோ யாரென வினவின் எங்கோ

இருமுந்நீர்த் துருத்தியுள்

முரணியோர்த் தலைச் சென்று

கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின முன்பின்

நெடுஞ்சேரலாதன் வாழ்க அவன் கண்ணி" (பதிற்.20:1-5)




என்று இவ்வெற்றி குறித்துப் பாராட்டுகின்றார். இதே செய்தியினை அகநானூற்றில் மாமூலனாரும் (அகநா.127:3-4, 347:3-5) பதிவு செய்துள்ளார்.

## இமயத்தில் விற்பொறிப்பு

நெடுஞ்சேரலாதனின் சிறப்பிற்குரிய முதல் வெற்றி இவனது வடநாட்டுப் படையெடுப்பாகும். வடநாட்டின் மேல் படையெடுத்துச் சென்று அந்நாட்டு அரசரை வென்று இமயமலையில் தன் விற்பொறியைப்பொறித்து அதனைத் தன் வடஎல்லையாக வரம்பமைத்து வந்தமையால் இவன் இமயவரம்பனென்று சிறப்புப் பெயர் பெற்றான்.

"பேரிசை மரபின் ஆரியர் வணக்கி" (பதிற்.பதி.2:7)

"அமைவரல் அருவி இமயம் விற்பொறித்து" (பதிற்.பதி.2:4)

என்பன இவன் வடபுலத்து ஆரிய மன்னரை வென்று வணக்கியதையும்,

இமயத்தில் விற்பொறித்ததையும் குறிப்பிடுகின்றன. ஆரிய மன்னரை வென்று அடிமைப்படுத்தி இமயத்தில் விற்பொறித்துக் குமரிமுதல் இமயம் வரை இவனொருவனே மேலாண்மை செலுத்தினான் என்பதை,

"ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்

தென்னங் குமரியொடு ஆயிடை

மன்மீக் கூறுநர் மறம்தபக் கடந்தே" (பதிற்.11:23-25)

எனவரும் குமட்டூர்க் கண்ணனார் பாடலடிகள் மட்டுமல்லாது அகநானூற்றில் பரணர் பாடலும், மாமூலனார் பாடலும் இதே கருத்தினைச் சுட்டி நிற்கின்றன. அப்பாடல்களாவது,

"ஆரியர் அலரத்தாக்கிப் பேரிசைத்

தொன்றுமுதிர் வடவரை வணங்குகவிற் பொறித்து

வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்" (அகநா.396:6-18)

"வலம்படு முரசிற் சேரலாதன்

முந்நீ ரோட்டியக் கடம்பறுத் திமயத்து

முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து" (அகநா.127:3-5)

என்பனவாகும்.

"குமரியொடு வடவிமயத்து ஒருமொழி வைத்து உலகாண்ட சேரலாதன்"[4] என்பர் வ.குருநாதன்.

இவன் காலத்தில் நாவலந்தீவில் பிற நாடுகளையாண்ட மன்னரெல்லாம் இவனுக்கு அஞ்சி நடுங்குமாறு விளங்கிய இவனது மறப்புகழ் குறித்து,

"அரிமான் வழங்கும் சாரல் பிறமான்

தோடுகொள் இனம்நிரை நெஞ்சதிர்ந் தாங்கு

முரசமுழங்கு நெடுநகர் அரசுதுயில் ஈயாது

மாதிரம் பனிக்கும் மறம்வீங்கு பல்புகழ்" (பதிற்.12:5-8)

என்று பாடுவார் குமட்டூர்க் கண்ணனார்.

### யவனரை அடக்கியது

வன்சொல் யவனர்களைச் சிறைசெய்து அவர்கள் கைகளைப் பின்புறமாகக் கட்டித் தலையில் எண்ணெய்யை ஊற்றி அவமானப்படுத்தினான், அணிகலன்களும் வைரங்களும் திறையாகப் பெற்ற பிறகு அவர்களை விடுதலை செய்தான் என்பதை,

"நயன்இல் வன்சொல் யவனர்ப் பிணித்து

நெய்தலைப் பெய்து கைபின் கொளீஇ

அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு" (பதிற்.பதி.2:8-10)

என்னும் அடிகள் விளக்கும். மேலும், அகநா.127 ஆவது பாடலும் இதே கருத்தினைச் சுட்டி நிற்கின்றது. "பைஜாண்டியம் என்றொரு கிரேக்கக் குடியிருப்பு மேலைக்கடற்கரையில் தொண்டிக்கும் நறவுக்கும் வடக்கே இருந்ததாகப் பெரிபுளூஸ் நூல் கூறுவதால் நெடுஞ்சேரலாதனால் அவமானப்படுத்தப்பட்ட யவனர், இக்குடியிருப்பைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம்"[5] என்ற சிவராசபிள்ளையின் கருத்தினைச் சுட்டிக் காட்டுகின்றார் வி.பி.புருஷோத்தம்.

### இமயவரம்பனின் புகழ்

வணிகர் குடிகளையும், குடிகளைப் பேணும் காணியாளர் சுற்றத்தையும் இமயவரம்பன் பாதுகாத்தலால், நாட்டில் செவ்வாய்க்கோள் சென்ற பக்கத்தை வெள்ளிக்கோள் செல்லாமையால் மழை தேவைப்படும் காலங்களில் மேகம் பொழிவிக்கும், அதனால் அங்கே நோய்த்துன்பமும், பசித்துன்பமும் இல்லாமல் பல வளங்களும் பெலிந்து சிறக்கும் என்று குமட்டூர்க் கண்ணனார் இமயவரம்பனின் நாட்டைப் புகழ்கின்றார்.

மாலைபோல் பிடரி மயிரினையும் நீண்ட கூரிய நகங்களையும் உடைய சிங்கம் நடமாடும் மலைச் சாரலில் பிற விலங்கினக் கூட்டங்கள்

நெஞ்சு நடுங்கி வாழும். அது போல அதிரும் முரசு பொருந்திய அரண்மனைகளுள் இருந்து நாற்திசைகளிலுமுள்ள அரசர்கள் கண் துயிலாமல் நெஞ்சம் நடுங்குவர் என்று இமயவரம்பனின் வீரம் புகழப்படுகிறது. இதனை,

"அரிமான் வழங்கும் சாரல் பிறமான்

தோடுகொள் இனம்நிரை நெஞ்சு அதிர்ந் தாங்கு

முரசு முழங்கி நெடுநகர் அரசுதுயில் ஈயாது" (பதிற்.12:5-7)

என்னும் அடிகள் விளக்கும். 'நிலம், நீர், காற்று, வானம் ஆகிய நான்கும் அளக்க முடியாதனவாகும். நீயும் அவற்றைப்போல அளக்க இயலாத பெருமை கொண்டுள்ளாய். வானத்திலுள்ள நாள்மீன்கள், கோள்மீன்கள், நிலவு, கதிரவன், முழங்கும் தீ ஆகிய ஐந்தும் தனித்தனியே மிக்க ஒளியுடையனவாகும். அவை அனைத்தும் ஒன்று கூடினால் விளங்கும் ஒளியைப் போல மிக்க ஒளி உடையவனாய் நீ திகழ்கின்றாய். உனது குடியில் தோன்றிய முன்னோர்கள் பொன் அணிகளையுடைய ஆணைச்சக்கரத்தால் கடல் சூழ்ந்து இவ்வுலகில் நாவலம்பொழில் முழுவதையும் நிலைத்த புகழோடு ஆண்டுவந்தனர். அவர்களைப் போலவே நீயும் ஒழுகி அழியாத நல்ல புகழை நிலைபெறச் செய்து கேடில்லாமல் உலகத்தோடு வாழ்வாயாக' என்று இமயவரம்பனை வாழ்த்துகின்றார். இதனை,

"முன்திணை முதல்வர் போல நின்று நீ

கெடாஅ நல்இசை நிலைஇத்

தவாஅ லியரோஇவ் உலகமோடு உடனே" (பதிற்.14:20-23)

என்னும் அடிகள் விளக்குகின்றன.

**இமயவரம்பனின் கொடைத்திறன்**

பல நாள் தொடர்ந்து வருத்திய பசித்துன்பம் நீங்கும்படி அரிவாளால் அறுத்த தசைத்துண்டங்களான ஆட்டிறைச்சியைக் கலந்து சமைத்த

வெண்சோற்றினை உண்ணச் செய்வாய், மழையில் நனைந்த பருந்தின் கரிய சிறகு போன்று மண் அரித்து மாசுடைய கந்தலாடையை நீக்கிப் பட்டு இழையால் நெய்த ஆடையினை அவர்கள் இடையில் உடுத்துமாறு செய்வாய். நெளிந்த கரிய கூந்தலையும் மூங்கில் போன்ற தோள்களையும் கொண்ட குற்றமற்ற விறலியர் ஒளி மிக்க அணிகலன்களை அணியச் செய்பவன் நீ என்று குமட்டூர்க் கண்ணனார் புகழ்கின்றார். இதனை,

"தொல்பசி உழந்த பழங்கண் வீழ

எஃகுபோழ்ந்து அறுத்த வால்நிணக் கொழுங்குறை

.....................................................

.....................................................

நகர்தற்கு இனிதுநின் பெரும்கலி மகிழ்வே" (பதிற்.12:15-25)

என்னும் அடிகள் விளக்கும். நீ மண் அணுக்கள் செறிந்த உலகத்தில் நிலைத்து வாழும் உயிர்க்கெல்லாம் குறைவின்றிக் கொடுத்து, அதனால் ஈகையில் மாறாத வலிமை மிக்க கையினைக் கொண்டுள்ளாய். உயர்ந்த இடங்களாகிய திருக்கோயில்களுக்குப் பெரிய அணிகலன்களைக் கொடுத்து இன்பமாகிய சிறப்புமிக்க விழாவினையுடைய திருமாலைப் போன்ற நல்ல புகழோடு விளங்குகின்றாய். ஆதலினால் கெடாத வலிமை கொண்ட கையினையுடைய வேந்தே நீ வாழ்க என வாழ்த்துகின்றார்.

குளிர்ந்த இயல்புடைய மேகம் உயிர்கள் அழியும் படிப் பல ஆண்டுகளாக மாறுபட்டு மழைபெய்யாது போயினும் தன்னை அடைந்தோர் வயிற்றுப்பசி மிக்கு வருந்தும்படிக் குறைவாகக் கொடுக்க மாட்டான் என்பதனை,

"பரிசில் மாக்கள் வல்லார் ஆயினும்

.........................................................

.......................................................

வயிறு பசிகூர ஈயலன்

வயிறுமாசு இலீயர் அவன் ஈன்றதாயே" (பதிற்.20:22-27)

என்னும் அடிகள் விளக்கும். இவ்வாறு இமயவரம்பனின் வீரம், புகழ், கொடை போன்றவற்றைப் பற்றிக் குமட்டூர்க் கண்ணனார் பத்துப் பாடல்களில் புகழ்ந்து பாடியுள்ளார்.

**பல்யானைச் செல்கெழுகுட்டுவன்**

இமயவரம்பனின் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவன். இவன் உதியஞ்சேரலுக்கும் வெளியன் வேண்மாள் நல்லினிக்கும் பிறந்த இளையமகன். இவனைப் பாலைக் கௌதமனார் மூன்றாம் பத்தின் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பத்துப் பாடல்களில் அவனின் வீரம், புகழ், கொடை பற்றிப் புகழ்ந்து பாடியுள்ளார்.

**பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் வெற்றி**

இமயவரம்பன் தன்னைப் பாடிய குமட்டூர்க் கண்ணனார்க்குப் பிரம்மதேயமாகக் கொடுக்கப்பெற்ற ஊர்களில் உம்பற்காடும் ஒன்று. இவ் உம்பற்காட்டைப் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் வெற்றிகொண்டு மீண்டும் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்தான். "இவ் உம்பற்காடென்பது இக்காலத்து ஆனைமலைப் பகுதியாகும்"[6] என்பர் வ.குருநாதன்.

**முதியரைத் தழுவல்**

பல்யானைச் செல்கெழுகுட்டுவனால் தழுவிக் கொள்ளப்பட்டவர். "உம்பற்காட்டுப் பகுதியில் வாழ்ந்த ஓர் இனத்தவரென்றும் அவர்களின் துணையோடுதான் இவன் உம்பற்காட்டின் வடபகுதியில் அமைந்த அகப்பாவென்னும் பகைவரது அரணையழித்து அப்பகுதியை அம்முதியர் காவலில் வைத்தானென்றும் கூறுவர்"[7] சி.பாலசுப்பிரமணியன்.

## கொங்கர் வெற்றி

கொங்கர் நாட்டின் பாறைகளை இரும்பினால் செய்த குந்தாலியால் உடைத்தால் சிறிய அளவில் நீர் ஊறும். இந்நீரினை நீண்ட கயிற்றால் கட்டப்பட்ட இறவை வாளியில் இறைத்தால் குடிப்பதற்காகப் பசுக்கள் சூழ்ந்து மொய்க்கும். அத்தகைய கொங்கர் நாட்டினைக் கைப்பற்றிய அஞ்சத்தக்க வேற்படையைக் கொண்டவன் என்று பல்யானைச் செல்கெழு குட்டுவனின் வீரத்தினைப் புகழ்கின்றார் பாலைக்கௌதமனார். இதனை,

"கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்

ஆகெழு கொங்கர் நாடுஅகப் படுத்த

வேல்கெழு தானை வெருவரு தோன்றல்" (பதிற்.22:14-16)

என்னும் அடிகள் விளக்குகின்றன.

## அகப்பா வெற்றி

அகப்பா என்னும் அரணம் கணைய மரங்கள் நெருங்கி விரிந்து பரவிய வெளியினையுடையது. கோபுர வாயிலில் தூங்குமாறு நாட்டப்பட்ட வில்லிசை போலும் விசை பொருந்திய ஐயவித் துலாத்தினையும், அதன்மேல் வரிசையாக அமைந்த மதில் மேடைகளையும் கொண்டு பெருமை மிக்க சிகரங்களையும் உள்ளடக்கியது. அத்தகைய அகப்பா அரணைக் குட்டுவன், தலையணி அணிந்த குதிரைகள், முகபடாம் அணிந்த யானைகள், கொடிச் சீலைகள் பொருந்திய தேர்கள், போரினை விரும்பும் வீரர்கள் அடங்கிய நாற்படைகளோடு சென்று அழித்துப் பொன்னாலான உழிஞை மாலை சூடிப் போரில் வெற்றி கொண்டான் என்பதை,

"அண்ணல் அம்பெருங்கோட்டு அகப்பா எறிந்த

பொன்புனை உழிஞை வெல்போர்க் குட்டுவ" (பதிற்.22:26-27)

என்னும் அடிகள் விளக்குகின்றன.

**குட்டுவனின் புகழ்**

பலவகையான போர்க் கண்ணிகளையுடைய மழவர்களுக்கு உயிர் போன்றவன். பல வளங்கள் பொருந்திய பயன் மிக்க உயர்ந்த சிகரங்களைக் கொண்ட உயரமான அயிரை மலைக்குத் தலைவன். நீ ஆற்றங்கரையிலுள்ள மூங்கில் போன்ற பெருமை பொருந்திய தோளினையுடைய அரச மாதேவியோடு பல ஆயிர வெள்ளக்காலம் வாழ்வாயாக என்று வாழ்த்துகின்றார். இதனை,

"வேய் உறழ் பணைத்தோள் இவளோடு

ஆயிரம் வெள்ளம் வாழிய பலவே" (பதிற்.21:37-38)

என்னும் அடிகள் விளக்குகின்றன. மேலும் ஓதுதல், வேள்வி செய்தல், இவ்விரண்டனையும் பிறர் செய்யுமாறு செய்தல், கொடுத்தல், ஏற்றுக் கொள்ளுதல் எனும் தொழில்களைச் செய்து ஒழுகும் அந்தணர்களை வழிபட்டு நடத்தல், உலக மக்கள் அவனை வழிபட்டு அவன்வழிச் செல்லும்படிச் செய்தல், புலவர் பாடும் புகழானது நாடெங்கும் பரவி விளங்கச் செய்தல் முதலிய தன்னம்பிக்கைகளையுடையவன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் எனப் புகழ்கின்றார் பாலைக்கொளதமனார் என்பதை,

"ஓதல், வேட்டல், அவைபிறர்ச் செய்தல்

ஈதல், ஏற்றல் என்று ஆறுபுரிந்து ஒழுகும்

.........................................................

நாடுடன் விளங்கும் நாடா நல்இசை" (பதிற்.24:6-10)

என்ற அடிகளின் வழி அறியமுடிகின்றது.

**குட்டுவனின் கொடை**

வறுமைமிக்க மக்கள் தங்களின் பசிக்கொடுமையால் தெருவின் இரு புறங்களிலுள்ள வீடுகளின் முன்னர்ப் பாடுவர். இந்நிலையை அறிந்த

குட்டுவன் அவர்களுடைய கொடிய பசி நீங்கும்படி உணவளிப்பான். அதனை உண்டு தங்கள் மனம் நிறைந்த மகிழ்ச்சியடைபவர்களாய் உவமை மிகுந்து ஆடுவர். இந்நிகழ்வு மன்னனுக்குச் சிறிய அளவு மகிழ்ச்சியைக் கொடுப்பினும் பெரிய அணிகளை வழங்கி அவர்களைப் பெரிய அளவில் மகிழ்விப்பான் என்று குட்டுவனின் கொடைச் சிறப்பினைப் புகழ்கின்றார். மேலும் குட்டுவன் தன்னைப் புகழ்ந்து பாடிய பாலைக்கௌதமனாரிடம், வேண்டியதை எடுத்துக் கொள்ளுமாறும் கூறினான். இவற்றின் மூலம் குட்டுவனின் கொடைச் சிறப்பினை நன்கு அறிந்து கொள்ள முடிகின்றது.

## களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியோடு போர் செய்து, இருவேந்தர்களும் இறந்தபோது அவர்நாடு என்னவாகுமெனப் பரணர் அஞ்சினார். இதனை,

> "வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர், இனியே
> என்னா வதுகொல் தானே, கழனி
> ..............................................
> காமர் கிடக்கையவர் அகன்தலை நாடே" (புறநா.63:10-15)

என்ற புறநானூற்று அடிகள் விளக்குகின்றன. அவர் அஞ்சியதுபோன்று சேரநாடு பாழானது. சேரநாட்டின் ஒரு பகுதியை நன்னன் கைப்பற்றிக் கொண்டான். எஞ்சிய பகுதி பாதுகாப்பாரில்லாமல் பாழாயிற்று. நாடெங்கும் வழிப்பறிக் கள்வர் பெருகினர். சேரநாட்டின் செல்வந்தர்கள் வறுமையுற்றனர். போர் வீரர்கள் சிதறுண்டு போனார்கள். போர்முரசு வேலையில்லாமல் ஒரு மூலையில் கிடந்தது. வழிப்பறி செய்வாருக்கு அஞ்சி மக்கள் கோவிலுக்குச்செல்வதைக் கூட நிறுத்திக்கொண்டார்கள். இந்நிலையில் சீரழிந்த சேரநாட்டைத் திருத்தும் பணி நெடுஞ்சேரலாதனின் மூத்த மகனான நார்முடிச்சேரலின் தோள்களில் விழுந்தது.

சேரநாட்டை மீண்டும் சிறந்த நிலைக்குக் கொண்டுவர நார்முடிச்சேரல் பெரும் பாடுபட்டான். வழிப்பறிக் கள்வர்களை அழித்துச் சேரநாட்டுப் பெருவழிகளில் மக்கள் அச்சமின்றி நடமாடச் செய்தான். நெடுநாள் இடைவெளிக்குப் பிறகு மக்கள் திருமால் கோவிலுக்குத் திரளாகச் சென்று கடவுளை வழிபட்டு, மகிழ்ச்சியோடு பாதுகாப்பாக வீடு திரும்பினார்கள். சிதறுண்டுபோன போர் வீரர்களை ஒன்று திரட்டி அவர்களுக்குப் போர் செய்யும் உற்சாகத்தை ஊட்டினான். மூலையில் கிடந்த போர்முரசு மீண்டும் முழங்கலாயிற்று. புத்துயிர் பெற்ற படைவீரர்களோடு சென்று நன்னனோடு வாகை என்ற இடத்தில் போர்செய்து சேரநாட்டைச் செப்பனிடும் பணியில் ஈடுபட்ட நார்முடிச் சேரல் பொன்முடியைச் சூடாமல், நாராலான முடியைச் சூடிக், களங்காயால் தொடுக்கப்பட்ட கண்ணியை அணிந்தான். அதனால் அவனுடைய இயற்பெயர் மறைந்துபோய், களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்ற பெயர் நிலைத்துவிட்டது. சேரநாடு மீண்டும் சிறந்த நிலையை அடைந்த பிறகே பொன்முடியை இவன் சூடினான் என்றுரைப்பார் காப்பியாற்றுக் காப்பியனார்.

மேலும், “அம்மன்னன் முடிசூட்டும் சமயத்தில் ஏதோ ஒரு காரணத்தால் உரிய முடியும் மாலையும் கிடையாமையின் நாராலான முடியையும் களங்காயாலான கண்ணியையும் அவன் அணிந்தான்”[8] என்பர் நா.சுப்பிரமணியன்.

மு.இராகவையங்கார் “முடிசூடுகின்ற சமயத்தில் முடித்தற்குரிய கண்ணியுங் கிரீடமும் பகைவர் கவர்ந்ததனால் உதவாது போயிற்று, ஆதலால் களங்காய்க் கண்ணியும் நாரால் முடியும் செய்து புனைந்து கொண்டு பட்டம் பெற்றான்”[9] என்பர்.

“பொன்முடியும் கண்ணியும் முடிசூட உதவாமற் போனதற்குத் தகுந்த காரணம் உண்டு. அக்காரணம் என்னவென்றால் இவனுடைய தந்தையாகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியோடு போர் செய்து போர்க்களத்தில் புண்பட்டு பிறகு உயிர்த்துறந்தான். அவன் போர்க்களத்தில் விழுந்த சமயத்தில் அவன் புனைந்திருந்த முடியும், கண்ணியும் சிதைந்து போயிருக்கக் கூடும் அல்லது, கெட்டுப்போயிருக்கக் கூடும். ஆகையினாலே, திடீரென்று முடிசூட்டு விழா ஏற்பட்ட காரணத்தினால் அவ்வமயம் பொன்முடியும் கண்ணியும் உதவாமற் போகவே, அச்சமயத்துக்கு வாய்ப்பாகக் களங்காயாற் கண்ணியும் நாரினால் முடியும் புனைந்து முடிசூட்டப்பட்டான். இதுவே களங்காய்க் கண்ணியும் நார்முடியும் சூடியதற்குக் காரணமாக இருக்கலாம்”[10] என்பார் மயிலை சீனி.வேங்கடசாமி. காரணத்தைக் கண்டறியாமல் ஏதோ ஒரு காரணத்தால் மாலையும் முடியும் காணாமல் போயிற்று என்று உரைப்பதைவிட உண்மையான காரணத்தைக் கண்டறிந்து ஆய்வுலகில் பதிவு செய்ய வேண்டுமென்ற வேட்கையில் சில காரணத்தைப் பதிவு செய்த மயிலை சீனி.வேங்கடசாமியின் கருத்தாக்கம் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக உள்ளது. இக்களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் குறித்துப் பத்துப் பாடல்களில் அவனின் வீரம், புகழ், கொடை போன்வற்றைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவ்வாறு பாடியமைக்காக, காப்பியாற்றுக் காப்பியனாருக்கு நாற்பது இலட்சம் பொன்னைப் பரிசாகக் கொடுத்து, தான் ஆள்வதில் பாகமும் கொடுத்தான்.

### நார்முடிச்சேரலின் வீரம்

சோழன் கரிகால் வளவன் தொண்டை நாட்டைக் கைப்பற்றி அதைச் சோழப் பேரரசுடன் இணைத்துக் கொண்டான். சேரன் செங்குட்டுவனின்

தந்தை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் காலத்தில் கொங்குநாட்டின் தெற்குப் பகுதிகள் சிலவற்றைச் சேரப்பேரரசு கைப்பற்றிக் கொண்டது. செங்குட்டுவனின் தமையனான களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் காலத்தில் கொங்கண நாடாகிய துளுநாடு சேரர் ஆட்சியின் கீழடங்கியது. "சேர அரசர்கள் கொங்குநாட்டைச் சிறிது சிறிதாகக் கைப்பற்றிக் கொண்டிருந்தபோது சோழ, பாண்டியர் வாளாவிருக்கவில்லை. சோழரும் பாண்டியரும் கொங்கு நாட்டைத் தாங்களும் பிரித்துக் கொள்ள முயற்சி செய்தனர்"[11] என்பர் மயிலை சீனி.வேங்கடசாமி. அவ்வகையில் வாள், வேல், வில், அம்பினை ஏந்திச் செல்லும் நார்முடிச் சேரலின் சேனைகள் நடமாடும் கோட்டையைப் போலக் காணப்பட்டதால் பகை வேந்தர்கள் அவனோடு போர்புரியாமல் விலகிச் சென்றனர். இதனை,

"வாள் மதிலாக வேல்மிளை உயர்த்து

வில்விசை உமிழ்ந்த வைம்முள் அம்பின்" (பதிற்.33:7-8)

"கால்வழங்க ஆர்எயில் கருதின்

போர்எதிர் வேந்தர் ஒரூஉப நின்னே" (பதிற்.33:11-12)

என்ற அடிகள் மூலம் அறியமுடிகின்றது.

### நார்முடிச்சேரலின் புகழ்

ஊக்கமுடைய உள்ளத்தோடும், மறவரோடும் சென்று பல போர்களைச் செய்யும் நார்முடிச்சேரலின் வளம் வாழ்வதாக என்பதனை,

"மல்லல் உள்ளமொடு வம்புஅர்க் கடந்து

செருமிகு முன்பின் மறவரொடு தலைச்சென்று

..........................................................

செருப்பல செய்குவை வாழ்கநின் வளனே" (பதிற்.36:3-14)

என்னும் அடிகள் விளக்கும். மேலும், ஆன்று அவிந்து அடங்கிய செம்மல்,

வறுமையுற்ற குடிகளைச் செழுமையுறச் செய்தவன், பெருஞ்செல்வத்தை உடையவன், நாட்டைச் சீர்திருத்தியவன், பரிசிலர் செல்வம், பாணரின் நாள் அவையை உடையவன், வானவரம்பன், இனியவை பெற்றால் தனியே நுகரும் நெஞ்சமில்லாது பகுத்துண்ணும் பண்பாளன் என்று நார்முடிச்சேரலின் புகழைப் பலவாறாகப் புகழ்ந்து பாடுகின்றார் காப்பியாற்றுக் காப்பியனார் (பதிற்.38).

## நார்முடிச்சேரலின் கொடை

கொடைத்திறம் மிக்கவனும் பிறர் நன்மையின் பொருட்டு வாழ்கின்றவனுமான நார்முடிச்சேரலின் படைவீரர்களும், தங்களிடம் விரும்பி இரந்து வரும் எம்மைப் போன்ற புலவர்களுக்கு இல்லையென்று மறுக்காது கொடைகொடுக்கும் வல்லமையுடையவர்கள், என்பதை,

> "பிறர்க்கு என வாழ்திநீ ஆகல் மாறே
>
> எமக்குஇல் என்னார்நின் மறம்கூறுகு ழாத்தர்" (பதிற்.39:1-2)

என்னும் அடிகள் விளக்கும். நன்னனின் வாகை மரத்தை வெட்டிய நார்முடிச்சேரல் நேரிமலையில் தங்கியிருக்கின்றான். இவனை நாடிச்சென்றால் யானையை உனக்குப் பரிசாகத்தருவான், என்று விறலியை ஆற்றுப்படுத்தும் முகமாக நார்முடிச்சேரலின் கொடைத் திறனைக் காப்பியாற்றுக் காப்பியனார் புகழ்ந்து பாடுகின்றார் (பதிற்.40).

## கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்

"சங்க இலக்கியத்தின் பதினோரு பாடல்களே"[12] செங்குட்டுவனை நேர்முகமாகப் பாடுகின்றன. இவைதவிர, ஒருசில பாடல்களில் குறிப்பிடப்படும் குட்டுவன், வானவன் என்ற பெயர்கள் செங்குட்டுவனைக் குறிப்பனவாக இருக்கலாம். சிலப்பதிகாரம் செங்குட்டுவன் வாழ்ந்து சில நூற்றாண்டுகள் கழித்து எழுதப்பட்ட காப்பியமானாலும் அதன் வஞ்சிக்

காண்டத்தில் கூறப்படும் செங்குட்டுவனின் வரலாறு முற்றிலும் கற்பனை என்று புறந்தள்ள முடியாது. உண்மை நவிற்சியைப் பிற்கால நூலான சிலப்பதிகாரத்தில் எதிர்பார்க்க முடியாது. சிலப்பதிகாரத்தின் உயர்வு நவிற்சிகளின் ஊடே உண்மை வரலாறு கூறப்படுவதால் செங்குட்டுவன் வரலாற்றை அறிவதற்குச் சிலப்பதிகாரத்தையும் பயன்படுத்திக்கொள்ள வேண்டியதாகிறது.

தமிழ் நாட்டை ஆண்ட மூவேந்தருள் சோழருக்கு உறையூரும், காவிரிப் பூம்பட்டினமும், பாண்டியருக்கு மதுரையும் எவ்வாறு பழைமையும் பெருமையும் பெற்ற தலைநகரங்களோ அதைப்போன்று சேரருக்குச் சிறந்த நகரம் கருவூர் ஆகும். 'நெடுந்தேர்க் கோதை திருமாவியனகர்க் கருவூர் என்ப' தொண்டி, மாந்தை முதலிய துறைமுக நகரங்களும் சேரருக்குச் சிறப்புடைய ஊர்களாயினும் கருவூர்க்கு அவை அடுத்தபடிநிலைதான். உறையூர் கோழி எனவும் காவிரிப் பூம்பட்டினம் புகார் எனவும், மதுரை கூடலெனவும், இலக்கிய வழக்குப் பெற்றவாறே இக்கருவூர் வஞ்சி என முன்னூல்களால் வழங்கப் பெறுகிறது. "சேரரது பழைய இராசதானியாகச் சிறப்பிக்கப் பட்ட வஞ்சி யென்பது எப்பகுதி என ஆராயுமிடத்து அது கொங்கு நாட்டுத் தலங்களுள் ஒன்றும் இப்போது திருச்சிராப்பள்ளி ஜில்லாவைச் சேர்ந்துள்ளதுமாகிய கருவூரே என்பது தெளிவாகின்றது"[13] என்பர் மு.இராகவையங்கார். இத்தகு கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பற்றிப் பத்துப் பாடல்களில் புகழ்ந்து பாடுகின்றார் பரணர்.

### செங்குட்டுவனின் வீரம்

செங்குட்டுவனின் மறவர் வீரசபதம் செய்து வேற்று அரசர்களை வீழ்த்தி, போரை வென்று, மிளகை இடிக்கும் உலக்கையைப் போலப் பகைவர் தலையை இடிக்கும் வல்லமையுடையவர்கள். என்பதை,

"வசைஇல் நெடுந்தகை காண்குவந் திசினே;

தாவல் உய்யுமோ மற்றே? தாவாது

.....................................................

.....................................................

படுந்திரைப் பனிக்கடல் உழந்த தாளே" (பதிற்.41:16-27)

என்ற இவ்வடிகளின் வழி விளக்குகின்றார் பரணர்.

அறுகை என்பவன் செங்குட்டுவனின் நண்பன். மோகூர் மன்னன், அறுகையை நாட்டை விட்டு விரட்டிவிட்டான். அறுகை நெடுந்தூரத்தில் உள்ள ஒரு நாட்டில் ஒளிந்திருந்தான். அறுகையின் தீராத வருத்தத்தைத் தீர்த்து வைக்க, செங்குட்டுவன் மோகூர் மேல்படையெடுத்து, மோகூர் மன்னனையும் அவனுக்குத் துணையாக வந்த வேந்தரையும் வேளிரையும் வென்று, மோகூர் மன்னனின் காவல் மரமான வேப்பமரத்தை வெட்டினான். அம்மரத்தினால் போர் முரசு செய்து கொள்வதற்காக யானைகளைக் கொண்டு அம்மரத்தை இழுத்து வரச் செய்தான் என்பதை பதிற்.44:49, சிலப்.27:124-126 போன்ற பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. மேலும் "துளுநாட்டில் நன்ன அரசருக்குரிய கொடுகூரையும் சேரன் செங்குட்டுவன் வென்றான் என்பர்"[14] மயிலை சீனி.வேங்கடசாமி.

## செங்குட்டுவனின் புகழ்

வீரர்களுக்கெல்லாம் பெருமானாக விளங்கும் குட்டுவன் போரில் வெல்வதை நிறுத்தமாட்டான். அவன் பகைவரை வெல்லும் போதெல்லாம் பரிசிலர் யானைகளைப் பெறுவதை நிறுத்தமாட்டார்கள். கொடிகள் அசையும் மாடத்தெருவில் கால்விளக்குகள் பேரொளி வீச விறலியர் ஆடும் நகரங்களில் செங்குட்டுவன் புகழ் பேசப்படுவது நிற்காதென்பதனை,

"அட்டு ஆனானே, குட்டுவன் அடுதொறும்

பெற்று ஆனாரே பரிசிலர் களிறே

..................................................

தொல்நகர் வரைப்பின் அவன்உயிர் ஆனாவே" (பதிற்.47:1-8)

என்ற அடிகள் விளக்குகின்றன. கடலோடு போர் செய்து வருந்திய பரதவனே உன் மலையிலே தோன்றி உன் கடலிலே கலக்கும் காஞ்சி ஆற்றின் கரையிலுள்ள மணலைவிடப் பலகாலம் உன் பெயர் வாழ்வதாக என்று பரணர் செங்குட்டுவனைப் புகழ்கின்றார்.

**செங்குட்டுவனின் கொடை**

பேரியாற்றில் கரைகடந்து வெள்ளம் பெருகுமாறு மழைபொழிவது போலப் பஞ்சகாலத்திலும் எதிர்ப்பட்டவர்களுக்கு எல்லாவகை உணவுகளையும் இரப்போருக்கு நல்ல அணிகலன்களையும் கொடுத்தான். விறலியர்களுக்குப் பெண் யானைகளையும், வீரர்களுக்கு ஆண் யானைகளையும் பரிசாகக் கொடுத்தான். பாணர்களுக்குக் குதிரைகளைக் கொடுத்தான் என்பதை,

"அருஞ்செலல் பேராற்று இரும்கரை உடைத்துக்

கடிஏர் பூட்டிக் கடுக்கை மலைய

..................................................

வண்கை வேந்தே ; நின் கலிமகி ழானே" (பதிற்.43:15-36)

என்ற அடிகள் விளக்கும். செங்குட்டுவன், மகிழ்ந்து மகளிர்களுக்கு அணிகலன்களும், காதில் அணியும் இரத்தினமாலைகளும் வழங்குபவன். இனிய மகிழ்ச்சியைத் தருபவன் என்பதால் குட்டுவனைவிட்டுப் பாடும் மகளிர் திரும்பிப் போகமாட்டார்கள் என்று பரணர் செங்குட்டுவனின் கொடைத்திறனைப் புகழ்கின்றார்.

**ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்**

நெடுஞ்சேரலாதனுக்கும் ஆவியர் குடிமகளுக்கும் பிறந்தவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன். களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலுக்கும், செங்குட்டுவனுக்கும் இவன் இளையவன். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆண்டு கொண்டிருந்த நாட்டின் வட எல்லையில் தண்டாரணியம் என்ற பெயருடையதொரு பெருங்காடு இருந்தது. கோதாவரியாறு பாயப்பெறுவதும் நாசிக் எனும் நகரைத் தன்னகத்தே கொண்டிருப்பதும், இன்று மகாராஷ்டிர மொழிபேசும் மக்கள் தம் வாழ்விடமாவதும் ஆயநாடே பண்டு தண்டாரணியம் எனும் பெயருடையதாம். தண்டகன் ஆட்சிக்கு உட்பட்டதால் அஃது அப்பெயர் பெற்றது என்பர். "விந்திய மலையைக் கடந்து வந்த ஆரியர் முதலில் தங்கிய இடம் தண்டாரணியமேயாம். அகத்திய முனிவர் வாழிடத்தை அடுத்து இருந்தது எனக் கூறப்படும். இராமன் தம்பியொடும், தன் மனைவியொடும் தங்கிய பஞ்சவடி எனும் இடமும் இத்தண்டாரணியத்ததே என்பர்"[15] கா.கோவிந்தன்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் ஆட்சிக்காலத்தில், அவனுடைய நாட்டின் அருகிலுள்ள காட்டிற்குள் வாழ்ந்து வந்த ஒரு குடியினர் திடீரென நாட்டிற்குள் புகுந்து ஆட்டுமந்தைகளைக் கவர்ந்து சென்றுவிட்டனர். இதனையறிந்த சேரலாதன் தன் பெரும்படையுடன் காட்டிற்குள் புகுந்து அக்குடியினரைத்தாக்கி ஆட்டு மந்தைகளை மீட்டு உரியவர்களிடம் ஒப்படைத்தான். இவன் செய்த போரில் இது குறிப்பிடத்தகுந்தது என்பதால் அவன் பெயரோடு இணைத்து ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் எனப் பெயர்பெற்றான். இதனை,

"தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத்

தொண்டியுள்தந்து கொடுப்பித்துப் பார்ப்பார்க்குக்

.................................................................

நாடல் சான்ற நயனுடை நெஞ்சின்

ஆடுகோட்பாட்டுச் சேரலான்" (பதிற்.பதி.6:3-11)

என்ற அடிகள் விளக்கும். ஆடுவதை மேற்கொண்ட சேரலாதன் போர்க்களத்தில் வாளை உயர்த்தி ஆடினான் என்றும் மகளிரோடு துணங்கைக் கூத்து ஆடினான் என்றும் ஆடல் பாடல் விநோதங்களில் காலத்தைக் கழித்தான் என்றும் பலவாறு குறிக்கப் பெறுகின்றான்.

மேற்குறித்த இருவகையான பதிவுகளும் சரியானவை எனக் கருதமுடிகிறது. அவற்றில் ஒரு உண்மைக் காரணி ஒளிந்திருக்கிறது. அவ் வகையில் உண்மைக் காரணத்தை ஆராயமுற்படும் போது சங்ககாலச் சேர வேந்தர்களுக்கு வழங்கப்பெற்ற பெயர்கள் எல்லாம் வீரத்தின் அடிப்படையில் தோன்றியவை எனக் கொள்ள முடிகிறது. இமயமலையில் தன் அடையாளச் சின்னத்தைப் பொறித்து ஆட்சிப்பகுதியை விரிவுபடுத்தியதால் இமயவரம்பன் என்றும், கடல்வாணிகத்தில் இடையூறு செய்தவர்களை விரட்டியடித்ததால் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்றும் சேரர்களுக்குப் பட்டப்பெயர்கள் வழங்கப்பெற்றது. ஆட்டுமந்தைகளைக் கவர்ந்து சென்ற பகைவர்களை வென்று மீட்டு வந்தமையால் இவனுக்கு ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்ற பெயர் வழங்கியிருக்கக் கூடும் என எண்ணத் தோன்றுகின்றது.

இவனைப் பற்றிக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் எனும் பெண்பாற் புலவர் பத்துப் பாடல்களில் அவனது வீரம், புகழ், கொடை போன்றவற்றைப் புகழ்ந்து பாடியுள்ளார். தன்னைப் புகழ்ந்து பாடியமைக்காக ஒன்பது கலப்பொன்னையும் கொடுத்து ஒரு லட்சம்

பொற்காசுகளும் கொடுத்துத் தன் அருகிலேயே இருக்குமாறு செய்தான் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்.

## ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வீரம்

கடற்கரைச் சோலையின் மேற்குப்புறத்தில் உள்ள பனந்தோப்பை அழகுபடுத்தி, அங்கு நாடக மேடை அமைத்து, நடன மாதரின் ஆடல் பாடல்களில் மகிழ்ந்து, நெடுநாள் அங்குக் காலங்கடத்துவதால் உன்னை மென்மையானவன் என்று சிலர் நினைக்கக்கூடும். ஆனால் போர்க்களத்தில் கூற்றம் வலை விரித்ததுபோலக் கடுமையாகப் பகைவர்களைத் தாக்குபவன் என்கிறார் நச்செள்ளையார். இதனை,

"கடல்சேர் கானல் குடபுலம் முன்னிக்

.........................................................

வலைவிரித் தன்னை நொக்கலை

கடியையால் நெடுந்தகை செருவத் தானே" (பதிற்.51:3-37)

என்ற அடிகள் விளக்கும். "வெற்றிமுரசு கொட்ட, வாளை உயர்த்தி உழிஞை மாலை சூடி, பகை வேந்தரைச் சாய்த்த போர்க்களத்தில் ஆடும் எங்கள் அரசன்"[16] என்று குறிப்பிடுவதாகச் சுட்டுவர் வி.பி.புருஷோத்தம்.

## ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் புகழ்

'புலவர்கள் பாராட்டும்படி அரசு செய்யும் நாடே சிறந்த நாடு என்று பண்டைத் தமிழ் வேந்தர்கள் எண்ணினர்' என்பர் சாமி.சிதம்பரம். இக்கருத்தினைப் போன்று ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பெரும் வள்ளல் என்று கேள்விப்பட்டு அவனைக் காணவந்த நச்செள்ளையார், விறலியர் அவனது வீரத்தைப் புகழ்ந்து பாடியதைக் கேட்டு இரவலர் துன்பம் தீரும்படி அவர்களுக்கு நாள்தோறும் பொருள்தரும் அவன் உயர்நிலை அவ்உலகம் (விண்ணுலகம்) செல்லாமல் இவ்வுலகில் நெடுங்காலம் வாழவேண்டும்

என்று வாயார வாழ்த்துகின்றனர். இதனை,

"வள்ளியை என்றலிள் காண்கு வந்திசினே

உள்ளியது முடித்தி வாழ்க நின் கண்ணி

.......................................................

நில்லாத் தானை இறைகிழ வோயே" (பதிற்.54:1-17)

என்ற அடிகள் விளக்கும்.

## ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் கொடை

துணங்கைக் கூத்து ஆடிய நம் அரசன் இப்போது போர்க்களத்தில் இருக்கிறான். பெரிய யாழிலே பாலைப் பண்ணைப் பாணர் அமைக்க, அவனது வீரத்தைப் புகழ்ந்து பாடி, அவனின் கோபத்தைவிட இரவலரின் துன்பத்திற்குப் பெரிதும் அஞ்சும் வள்ளலைக் காணப் போர்க்களத்திற்குச் செல்வோம் என்று நச்செள்ளையார் சேரலாதனின் கொடைத் திறனைப் புகழ்கின்றார்.

மேலும், அவனது சேனை கொல்லும் தொழிலை விரும்புகிறது. அவனோ போரை விரும்பிப் பகைவரிடமிருந்து பெற்ற பொருளைக் குறைவின்றி இரவலர்க்குக் கொடுக்கின்றான் என்றும் அவனது கொடைத்திறனைப் புகழ்ந்து பாடுகின்றார் நச்செள்ளையார்.

## செல்வக்கடுங்கோ வாழியாதன்

பதிற்றுப்பத்து சேரநாட்டு வரலாற்றை மட்டும் கூறவில்லை. கொங்கு நாட்டு வரலாற்றையும் கூறுகிறது. முதல் ஆறு பத்துகள் சேரநாட்டுச் சேர அரசர்களைப் பற்றிக் கூறுகின்றன. அடுத்த நான்கு பத்துகள் கொங்கு நாட்டையாண்ட கொங்குச் சேர அரசர்களைப் பற்றிக் கூறுகின்றன. இந்த உண்மையை இதுவரையில் சரித்திரக்காரர்கள் உணரவில்லை. கொங்குநாடு

“இப்போது சேலம் வட்டம், கோயம்புத்தூர் வட்டங்களில் அடங்கியிருப்பதாகக் கூறுவர். பிற்காலத்திலே சுருங்கிப் போன கொங்கு நாட்டைத்தான் அதாவது கோயம்புத்தூர் சேலம் வட்டங்களைத்தான் இக்காலத்தில் கொங்கு நாடு என்று கூறுகின்றோம்”[17] என்பர் மயிலை சீனி. வேங்கடசாமி.

சங்கப் பாடல்களிலும் அவற்றின் அடிக்குறிப்பிலும் கொங்குநாட்டை ஆண்ட செல்வக்கடுங்கோ வாழியாதன் பலவாறாக அழைக்கப்படுகின்றான். செல்வக்கோ, செல்வக்கோமான், செல்வக்கடுங்கோ, வாழியாதன், கடுங்கோவாழியாதன், சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதன், சேரலர் மருமகன், சேரலாதன் என்ற தொடர்கள் இவனைக் குறிப்பவையாகும். செல்வம், வாழி என்ற இரண்டு சொற்கள் இவன் பெயரில் காணப்படும் சிறப்பு அம்சங்களாகும். வேறு சேரர் பெயரில் இச்சொற்களைக்காண முடியாது. “வாழி என்பது குறுநிலப்பகுதியை ஆளும் குறுநிலத் தலைவனைக் குறிக்கும் சொல்லாகும். கோவாழி என்பது வாழிகளுக்கெல்லாம் தலைவனான அரசனைக் குறிக்கும்”[18] என்பர் வி.பி.புருஷோத்தம். இத்தகு செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பற்றி பத்துப் பாடல்களில் அவனது வீரம், புகழ், கொடை பற்றிப் புகழ்ந்து பாடியுள்ளார் கபிலர்.

**வாழியாதனின் வீரம்**

போர்த்துறைகளில் வல்லவனான வெற்றி வேந்தன். உன்பகைவர் உனக்குப் பணிந்து திறை தருவாரானால் அவர்கள் நாடு வளம்மிகுந்து பாடல் பெறுவதற்குத் தகுதியுடையனவாகும் என்பதை,

“துப்புத்துறை போகிய கொற்றை வேந்தே!”

“பணிந்துதிறை தருப நின்பகைவர் ஆயின்,”

*"பாடல் சான்றஅவர் அகன்தலை நாடே" (பதிற்.62:9,12,19)*

*என்ற அடிகள் விளக்குவதன் வழி, வாழியாதன் பெரும் வீரன் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.*

## வாழியாதனின் புகழ்

*வாழியாதன் பார்ப்பார்களைத் தவிர வேறு யாருக்கும் பணியமாட்டான். நண்பர்களைத் தவிர வேறு யாருக்கும் அஞ்சமாட்டான். அவன் மனைவியைத் தவிர வேறு யாருக்கும் மார்பைத் திறந்து காட்டமாட்டான். நிலமே பிறழ்ந்தாலும் சொன்ன சொல்லை இல்லையென்று பொய்க்கமாட்டான். தமிழ்ப் படைகளைத் திரட்டிக் கொண்டு இடிபோல சீறிவந்த இருவரை ஓட்டியவன் செல்வக் கடுங்கோவாழியாதன். அவன் ஆயிரம் வெள்ளம் ஊழி, வாழவேண்டும் என்று கபிலர் வாழ்த்துகின்றார். இதனை,*

*"பார்ப்பார்க்கு அல்லது பணிபு அறியலையே*

*..................................................................*

*ஆயிர வெள்ள ஊழி*

*வாழியாத வாழிய பலவே" (பதிற்.63:1-21)*

*என்ற அடிகள் விளக்குகின்றன.*

## வாழியாதனின் கொடை

*வெற்றி கொட்டும் முரசுடைய கொற்ற வேந்தர் பலர் இருக்கிறார்கள். இருப்பினும் உன்னைக் காணவந்ததற்கான காரணம் அறம் கூறும் நாவும், வேள்வி முடித்த கேள்வியுமுடைய அந்தணர், அருங்கலம் ஏற்க நீ தாரை வார்த்துத்தந்த நீரால் உனது அரண்மனை முற்றம் சேறு பட்டுக்கிடக்கும். அம்முற்றத்தின் வெளியே கூத்தரைப் பார்த்துவிட்டால் குதிரையும், வண்டியும் அவர்களுக்குக் கொடுங்கள் என்று கூறும் கொள்கையுடையவன்.*

கழியிலே மலர்ந்த கரிய நெய்தல் மலரைப் போன்று தோற்றமளிப்பவன். மழையை விடப் பெரும் பயனைக் கொடுப்பவன் என்று வாழியாதனின் கொடைத் திறனை,

"வலம்படு முரசின் வாய்வாள் கொற்றத்துப்

பொலம்பூண் வேந்தர் பலர்தில் அம்ம

......................................................

இசைமேந் தோன்றல்நின் பாசறை யானே" (பதிற்.64:8-20)

என்னும் கபிலரின் அடிகள் விளக்குகின்றன.

## பெருஞ்சேரல் இரும்பொறை

பெருஞ்சேரல் இரும்பொறை மேல் அரிசில் கிழார் பத்துப்பாடல்களைப் பாடியுள்ளார். "இரும்பொறையோடு, அதியமான் எழினி போர்செய்து, தகடூரில் எழினி இறந்தபோது அரிசில்கிழார் இறந்தவன் மேல் ஓர் இரங்கல்பாடல் பாடியுள்ளார்"[19] வென்றோனையும் தோற்று வீழ்ந்தோனையும் பாடிய அரிசில் கிழாரின் புலமைத் திறம் குறிப்பிடத்தக்கது.

"கி.பி.2 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக மகாதேவன் குறிப்பிட்டுள்ள புகளூர்க் கல்வெட்டில் கோ ஆதன் சேரல் இரும்பொறை, பெருங்கடுங்கோன், இளங்கடுங்கோ மூவரையும் முறையே செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதிற்.7 ஆம் பத்து) பெருஞ்சேரல் இரும்பொறை (8 ஆம் பத்து) இளஞ்சேரல் இரும்பொறை (9 ஆம் பத்து) ஆகியவர்களோடு இணைத்துக்காட்டியுள்ளார் (2003.117). இது ஏற்புடையதே என்றாலும் காலநிர்ணயம் இங்குக் கருத்தில் கொள்ளப்பட வேண்டியதாக உள்ளது. செல்வக்கடுங்கோ வாழியாதன் முதலான மூவரையும் முறையே 25.50 AD, 50-75 AD, 75-100 AD எனக் காலவரிசைப்படுத்தியுள்ளார். கே.என்.சிவராஜ

பிள்ளை (1932). இவர்களில் பெருஞ்சேரல் இரும்பொறை மோசிகீரனாரால் பாடப்பட்டுள்ளான் (புறநா.50). மோசிகீரனார் ஆயைப் பாடிய பாடல் புறநானூற்றில் இல்லை என்றாலும் பெருஞ்சித்திரனார் பாடலில் மோசி பாடிய ஆய் (158) எனும் குறிப்பு இடம்பெற்றுள்ளது. இந்த ஆயண்டிரன் 1-25ADக்கு உரியனவாகக் காட்டப்பட்டுள்ளான் (கே.என்.சிவராஜ பிள்ளை 1932). எனவே மோசிகீரனாரால் பாடப்பட்ட பெருஞ்சேரலும் இந்தக் காலத்திற்கு உரியவனாகின்றான்"[20] என்பார் பெ.மாதையன். முரசுக் கட்டிலில் அறியாது உறங்கிய மோசிகீரனார் என்ற புலவர் உறங்கி எழும்வரை அவருக்குக் கவரிவீசிப் பெருஞ்சேரல் இரும்பொறை அழியாப் புகழ்பெற்றுள்ளான். இவனைப் பற்றி வீரம், புகழ், கொடை என்று பத்துப் பாடல்களில் புகழ்ந்து பாடியுள்ளார் அரிசில்கிழார்.

**பெருஞ்சேரல் இரும்பொறையின் வீரம்**

தேனீக்களின் கூட்டைக் கலைத்த சிறுவர்கள் அத்தேனீக்களால் கொட்டப்பட்டு வருந்துவது போல, உன்னைக் கோப மூட்டியவர்கள் துன்பத்திற்குள்ளாவார்கள். பகைவரின் ஊரை நெருப்புக்கவர ஊர்சுடும் புகை, திசைகளை மறைக்க பகைவர் மதிற்கதவுகளைக் கைப்பற்றினாய், பசுக்களின் வளத்தினால் வாழும் இடையர் தலைவனான கழுவுள் உனக்குத் தலைவணங்கினான் என்று இரும்பொறையின் வெற்றியினைப் புகழ்கின்றார் அரிசில்கிழார்.

புலியைக் கொன்று யானையை வெல்லும் சிங்கத்தைப் போன்றவன் பொறையன். வேந்தரும் வேளிரும் பிறரும் அவனுக்குக் கீழ்ப்படிந்து வழிபடாவிட்டால் நல்ல ஊர்களைக் கொண்ட நாட்டை அவர்கள் ஆளாவண்ணம் அழிப்பவன் பெரும்சேரல் இரும்பொறை என்பதை,

"இரும்புலி கொன்று பெருங்களிறு அடூஉம்

அரும்பொறி வயமான் அனையை பல்வேல்

........................................................

........................................................

நாடுஉடன் ஆடல் யாவணது அவர்க்கே" (பதிற்.75:1-14)

என்று அவனின் வீரமானது சிறப்பிக்கப்படுகிறது.

## பெருஞ்சேரல் இரும்பொறையின் புகழ்

அறிவுடையோர் மற்றும் அறிவில்லாதோர் எண்ணினாலும் அவன் பிறருக்கு உவமையாவானேயன்றி பிறர் அவனுக்கு உவமம் ஆகமுடியாது. காவிரி பரந்து செல்லும் புகாரின் செல்வன், பூழியர்களின் கவசம், கொல்லித் தலைவன், கொடி பறக்கும் தேர் கொண்ட பொறையன், அவனது வளமையும் ஆண்மையும் கைவண்மையும் மாந்தரின் அவாவைக் காட்டிலும் உயர்ந்தது. இத்தகைய பண்புடைய அவனுடன் மாறுபடும் பகைவர்கள் அவனைப் பற்றிய தெளிவில்லாமல் உள்ளனர். தான் தெளிவுபடுத்தியும் வேறு சான்றோர்கள்தெளிவுபடுத்தியும் அவனுடைய பெருமையை அவர்கள் அறியவில்லை. அத்தகையோருக்கும் அருளுடையவனாக விளங்குபவன் என்கிறார் அரிசில்கிழார்.

"உரவோர் எண்ணினும் மடவோர் எண்ணினும்

பிறர்க்கு நீவாயின் அல்லது நினக்குப்

........................................................

யாங்குஉரைப் பேன்என வருந்துவல் யானே" (பதிற்.73:1-17)

பொறையன் எண்ணிக்கையிலடங்காத தேர்ப்படை, குதிரைப்படை மற்றும் காலாட்படைகளையும் வைத்திருப்பவன். அவனது யானைப் படையானது கொங்கர் பசுக்களை மேய்ப்பதற்குத் திரள் திரளாகக் கொண்டு

செல்வது போல அவன் படையில் எண்ணற்ற யானைகள் பரந்து செல்கிறது என்று புகழ்கின்றார் (பதிற்.77:1-12).

### பெருஞ்சேரல் இரும்பொறையின் கொடை

வெற்றி வீரர்கள் வீரத்தோடு காக்கும் தகடூரைப் பெருஞ்சேரல் இரும்பொறை போரிட்டு அழித்தான். அத்தகடூரில் அவன் கொட்டிய வெற்றி முரசைப் போன்ற ஓசையோடு அருவி வீழும் மலையிலே அவன் வீற்றிருக்கின்றான். அங்கு சென்றால் வேண்டிய பொருளைப் பரிசாகப் பெறலாம் என்று விறலியை ஆற்றுப்படுத்தும் முகமாகப் பெருஞ்சேரல் இரும்பொறையின் கொடைத்தன்மையைப் புகழ்கின்றார் அரிசில்கிழார் (பதிற்.78). அத்தகையவன் போர்க்களத்தில் அவனது உயிரைப் பற்றிக் கவலைப்படமாட்டான். இரவலருக்குக் கொடை கொடுக்கும்போது பொருளைப் பார்க்கமாட்டான் என்று புகழ்கின்றார்.

### இளஞ்சேரல் இரும்பொறை

தமிழ் இலக்கண இலக்கியங்களோடு தொல்லியல் சான்றுகளையும் இணைத்து ஆராய்ந்தால்தான் ஒரு நாடடின் முழுமையான, உண்மையான வரலாற்றினை அறிந்துகொள்ள முடியும். அந்த வகையில் கரூர் மாவட்டம் வேலாயுதம் பாளையம் என்னும் ஊரின் அருகே ஆறுநாட்டார் மலை எனும் குன்றில் பதினொரு கல்வெட்டுக்கள் பொறிக்கப் பெற்றுள்ளன. இக்கல்வெட்டுகளில் ஒன்று சேர அரச மரபினரின் உறவுமுறையினைச் சுட்டுகின்றது (விவரம் : பின்னிணைப்பு-7). இக்கற்படுக்கைகளை அமைத்துக் கொடுத்தவன் இளங்கடுங்கோ. இவனது தந்தை பெயர் பெருங்கடுங்கோ, பாட்டன் பெயர் கோ ஆதன் செல்லிரும்பொறை. பதிற்றுப்பத்து குறிப்பிடும் அரசர்கள் இவர்களாக இருக்கலாம் என்று அறிஞர்கள் துணிகின்றனர். அக்கல்வெட்டு பின்வருமாறு :

"மூதா அமண்ணன் யாற்றூர் செங்காயபன் உறையப்

கோ ஆதன் செல்லிரும்பொறை மகன்

பெருங்கடுங்கோன் மகனி ளங்

கடுங்கோ ளங்கோ ஆக அறுபித கல்"[21]

பெருங்கடுங்கோ, இளங்கடுங்கோ என்பவர்கள் முறையே பதிற்றுப் பத்தின் 8 ஆம் 9 ஆம் பத்தின் பாட்டுடைத்தலைவர்களான பெருஞ்சேரல் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறை என்று குறிக்கப்பெறுகின்றனர். இளஞ்சேரல் இரும்பொறை மேல் பாடப்பட்ட பன்னிரண்டு பாடல்கள் சங்க இலக்கியத்தில் தொகுக்கப்பெற்றுள்ளன (பதிற்.81-90, புறநா.210, 211). இவற்றை எழுதிய புலவர் பெயர் பெருங்குன்றூர் கிழார். இப்பெயருடைய இரு புலவர்கள் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளனர். ஒருவர் பரணர் காலத்தில் வாழ்ந்தவர். பரணரால் பாடப்பெற்ற சோழன் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னியையும், பேகனையும் பாடியவர். இவரை முதலாம் பெருங்குன்றூர் கிழார் என்று அழைக்கலாம். இளஞ்சேரல் இரும்பொறையைப் பாடியவர் இரண்டாம் பெருங்குன்றூர் கிழார் ஆவார். இரு புலவர்களும் பாட்டனும் பேரனுமாக இருக்கலாம்.

செங்கோல் ஆட்சி செலுத்திக் குடிமக்களைப் பாதுகாத்த இளஞ்சேரல் இரும்பொறைமேல் பெருங்குன்றூர் கிழார் பத்துப் பாடல்களில் அவனது வீரம், புகழ், கொடை குறித்துப் புகழ்ந்து பாடியுள்ளார்.

### இளஞ்சேரல் இரும்பொறையின் வீரம்

பூழியர்களுக்கெல்லாம் அரசனாக விளங்குபவன் பொறையன். இவனிடம் சென்னியர் பெருமான் தோற்று ஓடியபோது அவர்கள் விட்டுச் சென்ற வேல்களை எடுத்துவரும்படி ஆணையிட்டான். அத்தகைய வேல்கள் கபிலர் நாடெல்லாம் கண்ணுக்குத் தெரியும்படி உயர்ந்த மலைச்

சிகரங்களைக் கொண்ட குன்றின் நாள் மகிழ் இருக்கையில் பெற்ற ஊர்களை விடச் சோழன் விட்டுச் சென்ற வேல்கள் பலவாகும் என்று இளஞ்சேரலின் வீரத்தினைப் புகழ்கின்றார்.

"ஒன்னாப் பூட்கைச் சென்னியர் பெருமான்
இட்ட வெள்வேல் முத்தைத் தம்என்
.................................................
நனவில் பாடிய நல்இசைக்
கபிலன் பெற்ற ஊரினும் பலவே" (பதிற்.85:3-13)

இப்பதிவின் வழிச் சோழனுக்கும் சேர வேந்தனான இளஞ்சேரல் இரும்பொறைக்கும் இடையே நிகழ்ந்த போரில் சோழன் தோற்றுப் புறமுதுகுகாட்டி ஓடினான் என்பது தெளிவாகின்றது.

## இளஞ்சேரல் இரும்பொறையின் புகழ்

கடல் பகைவர் தொலைய வேலை எறிந்து, கடம்ப மரத்தை அடியோடு வெட்டி, கழுவுளைப் புறங்காட்டி ஓடச் செய்து, அண்டரை ஓட்டி, நன்னனை அழித்து, அயிரை மலைக் கடவுளைப் பரவி, வேந்தரும் வேளிரும் பின்வந்து பணிய வெற்றிபெற்ற முன்னோரின் வழியில் வந்தவன். கொங்கர்க்கோ, தொண்டியோர் தலைவன் கொல்லிப்பாவையைப் போலும் அழகுடைய பெண்மணியின் கணவனான இளஞ்சேரலை ஞாயிறு போலப் பலநாள் வாழ்வாயாக என்று வாழ்த்துகிறார் (பதிற்.88).

"பண்டைக்கால மன்னர்களின் அரசுரிமை பிறப்புரிமையாகவே இருந்தது. இதனால் அவர்கள் தனி அதிகாரம் பெற்றிருந்தனர். இத்தனி அதிகாரம் காரணமாக அவர்களிலே சிலர் அறநெறி தவறி நடக்கவும் துணிந்தனர். அதிகார வெறி, அதிகாரச் செருக்கு அவர்களை அவ்வாறு நடக்கத் தூண்டியது. இது இந்த நாட்டில் மட்டும் அன்று எந்த நாட்டிலும்

இந்த நிலைதான் இருந்தது"[22] என்பர் சாமி சிதம்பரனார். அறத்தைச் சிதைத்த அரசர்களின் செயல் கண்டு அறிஞர்கள் சிறிதும் அஞ்சாமல் சுட்டிக்காட்டியிருக்கின்றனர்.

**இளஞ்சேரல் இரும்பொறையின் கொடை**

தன்னை நாடி இரந்து பாடிவருவோர்க்குப் பொருளை அள்ளி அள்ளிப் பரிசாகக் கொடுக்கும் குறையாத செல்வம் உடையவன் என்று இளஞ்சேரலின் கொடைத்திறனைப் பற்றி விளக்குகின்றார் பெருங்குன்றூர் கிழார்.

"பாடிக் காண்கு வந்திசின் பெருமை

பாடுநர் கொளக்கொளக் குறையாச் செல்வத்துச் செற்றோர்"

(பதிற்.82:11-12)

கடலை நோக்கிச் செல்லும் ஆற்றின் மேல் செல்வதற்குத் துணைபுரியும் கரும்பால் ஆன தெப்பத்தைவிடப் பொறையன் அருள் புரிவதில் வல்லவன். பாடினியே அவனிடம் சென்று அணிகலன்களைப் பெறுவாய் என்று புகழ்கின்றார்.

"செம்மோ பாடினி, நன்கலம் பெறுகுவை

..............................................................

ஒய்யும் நீர் வழிக் கரும்பினும்

பல்வேல் பொறையன் வல்லனால் அளிய" (பதிற்.87:1-5)

இவ்வாறு இளஞ்சேரலின் கொடைத்திறனைப் புகழ்கின்றார் பெருங்குன்றூர் கிழார்.

## குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

சங்ககாலத்தில் தமிழகம் சேர, சோழ, பாண்டியர்களால் ஆளப்பெற்றுள்ளது. இம்மூவேந்தர்கள் மட்டும் அல்லாது குறுநில மன்னர்களும் நாடுமுழுவதும் ஆட்சிபுரிந்தனர். இக்குறுநில மன்னர்கள் பற்றிய பதிவுகளும், பிற தலைவர்கள் பற்றிய பதிவுகளும் புறப்பாடல்களில் நேரடியாகவும், அகப்பாடல்களில் குறிப்பாகவும் புலப்படுகின்றன. சங்க இலக்கியங்களில் வீரத்தை முதன்மையாகக் கொண்டு பாடப்பெற்ற புற இலக்கியம் பதிற்றுப்பத்து. இப்பதிற்றுப் பத்தில் சேர அரசர்களின் வீரத்திற்கும் கொடைப் பண்பிற்கும் இணையாக விளங்கிய குறுநில மன்னர்களின் போரெதிர்வு இருப்பும் பற்றிய பதிவுகள் மிகுதியாகக் காணக்கிடைக்கின்றன. இப்பதிவுகளைக் கண்டறிந்து விளக்கும் முகமாக இப்பகுதி அமைகிறது.

## வீரத்தின் விளைநிலம்

சங்க காலத்தில் ‘வீரம்’ முதன்மையாகப் போற்றப்பட்டது. வீரமிக்கவர்களே சிறப்புக்குரியவர்களாகக் கருதப்பட்டனர். “தமிழருடைய நாகரிக வளர்ச்சியின் முதற்கட்டமான சங்ககாலத்தில் வீரர் ஒருவகை சமய உணர்வினைப் போல் மதித்துப் போற்றப் பட்டது. கடுமையான வீரதீரச் செயல்களுக்கும் அருள்கனிந்த அறச் செயல்களுக்கும் புகழார்வமே பேரளவிற்கு உந்துதல் சக்தியாக அமைந்திருந்தது எனும் விபுலானந்த அடிகளின் கருத்து இவ்விடம் ஒப்பு நோக்கத்தக்கது”[23] என்பர் இரா.இராமகிருட்டிணன்.

சங்க காலத்தில் மகனைப் பெற்று வளர்ப்பது தாயின் கடமை, அவனை நற்பண்புகள் நிறைந்தவனாக்குதல் தந்தையின் கடமை, வேல்பிடித்துக் கூரியதாக்கித்தருவது கொல்லனின் கடமை, நல்லொழுக்கத்தைக் கற்பிப்பது

நாடாளும் அரசனின் கடமை, வாளைக் கையில் ஏந்திச் சென்று தடுத்தற்கரிய போரைச் செய்து பகைவரின் களிற்றுயானைகளைக் கொன்று வெற்றியோடு மீள்வது காளையாகிய வீரனது கடமை, இவ்வாறு ஒவ்வொருவருக்கும் உரிய கடமைகளைப் பொன்முடியார் வரையறுத்துள்ளார்.

"ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறுவா ளருஞ்சம் முருக்கிக்
களிநெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே" (புறநா.312)

'சான்றோனாக்குதல் என்ற தொடருக்கு வீரனாக்குதல் என்று பொருள் கொள்வர்' உ.வே.சாமிநாதையர். "சான்றோன் என்னும் சொல் பழைய காலத்தில் வீரர் என்னும் பொருளிலேயே பயின்றிருக்கும்"[24] என்பர் வ.சுப.மாணிக்கம். போரில் விழுப்புண் படாத நாளெல்லாம் தம் வாழ்நாளில் வீணாகிவிட்ட நாள்களாகக் கருதுவர் வீரர். இதனை,

"விழிப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் நாளை எடுத்து"[25]

என்றுரைப்பர் வள்ளுவப் பெருந்தகை.

"மறவர்களின் வீர இயல்பை முதன்மையாக்கிப் படைக்கப்பட்ட பாடல்கள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றிருப்பதால் சங்க காலத்தை வீர ஊழிக்காலம்"[26] என்பர் அரங்க இராமலிங்கம். இத்தகைய காலக்கட்டத்தில் வளர்ச்சி பெற்ற பேரரசர்கள் நடத்திய போர்களை, குறுநில மன்னர்கள் எதிர்த்தும் ஆதரித்தும் வந்தனர் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன.

**பதிற்றுப்பத்துக் குறுநில மன்னர்கள்**

சங்கப் பாடல்களைப் பாடிய புலவர்களில் பலர் பதிற்றுப்பத்து முழுமையும் நோக்கப் பெருவேந்தர்களைக் காட்டிலும் சீறூர்த் தலைவர்களையே மிகுதியாகப் பாடியுள்ளனர். "பெருவேந்தர்களுக்கும் புலவர்களுக்கும் இருந்த தொடர்பினும் குறுநில மன்னர், சீறூர்த் தலைவர் ஆகியோர்க்கும் புலவர்களுக்கும் இருந்த தொடர்பே நெருக்கமும் இறுக்கமும் வாய்ந்ததாக இருந்திருக்கிறது"[27] என்பர் கு.வெ.பாலசுப்பிரமணியன்.

பதிற்றுப்பத்தில் குறிப்பிடப்பெறும் குறுநில மன்னர்களாக இருபது பேர் சுட்டப்படுகின்றனர். இவர்கள் பெரும்பாலும் சேர நாட்டு எல்லைக்கு உட்பட்டவர்களாகவும் சிறுபான்மை பிற நாட்டு எல்லைகளுக்கு உட்பட்டவர்களாகவும் திகழ்கின்றனர். இவ்விரு திறத்துக் குறுநில மன்னர்களும் பதிற்றுப்பத்துச் சேரமன்னர்களோடு பகைமை உணர்வு கொண்டவர்களாகவும் அவர்களின் படைத்தலைவர்களாகவும் நண்பர்களாகவும் விளங்கினர் என்பதைப் பதிற்றுப்பத்தின் மூலம் அறிய இயலும்.

பதிற்றுப்பத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள குறுநில மன்னர்களின் பெயர்கள் அகரநிரல்படிக் கொடுக்கப்பெற்றுள்ளன. அவை பின்வருமாறு : 1.அதியமான் எழினி 2.அறுகை 3.ஆரியர் 4.கழவுள் 5.குடவர் 6.கொங்கர் 7.நன்னன் 8.நெடுமிடல் 9.பதுமன் 10.பழையன் 11.பூழியர் 12.பெருங்கோக்கிள்ளி 13.மழவர் 14.யவனர் 15.வடவர் 16.வண்டன் 17.விச்சிக்கோன் 18.வெளியன் வேண்மான் 19.வேள்பாரி 20.வேளிர்.

இத்தகுக் குறுநில மன்னர்களின் வீரம், புகழ், கொடை போன்றவற்றைப் பற்றி ஆராயப் பெறுகின்றன. ஆய்வின் விரிவு அஞ்சி சில குறுநில மன்னர்களின் மாண்புகள் மட்டும் முன்வைக்கப் பெறுகின்றன.

**அதியமான் எழினி**

இக்காலத்துத் தருமபுரி என வழங்கும் பண்டைய தகடூரைத் தலைநகராகக் கொண்டு குதிரைமலை உள்ளிட்ட நாட்டை ஆண்டுவந்தவன் அதியரென்ற குடியினரான அரசமரபினன். இந்த அதியர்குடி சேரர் குடியின் இளைவழியைச் சேர்ந்தது. சேர அரசர்க்குரிய பனம்பூமாலை இக்குடியினருக்கும் உரியது என்று கருதப்படுகிறது.

"ஊராது ஏந்திய குதிரைக் கூர்வேல்

கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினி"[28]

என்று பெருஞ்சித்திரனாரும்

"நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி"[29]

என்று பரணரும் இக்குதிரை மலையோடு தொடர்புபடுத்தி பதிவுசெய்துள்ளனர். எழினியென்பது அதியமானுக்கு அமைந்த குடிப்பெயராகும் என்பதை, "அதியமான் எழினி, கண்ணன் எழினி, தலையாலங்கானத்துத் துஞ்சிய எழினி, வட்டாற்று எழினி ஆதன்"[30] என்று தமிழகத்தில் எழினி என்ற பெயர் உடைய பலர் இருந்தனர் என்ற கா.கோவிந்தன் கூற்றுவழி அறியமுடிகிறது.

"தகடூர் யாத்திரை தரும் வரலாற்றுக்கும் பதிற்றுப்பத்துப் பதிகத்தில் காணும் வரலாற்றுக்கும் இடையே சில முக்கியக் கூறுகளில் வேற்றுமைகள் உள்ளன. பதிற்றுப்பத்து தகடூரில் போர் புரிந்த தலைவன் அதியமான் என்று மட்டுமே குறிக்கிறது. ஔவையின் பாடல்கள் மூலம் இது நெடுமான் அஞ்சி என்று தோன்றுகிறது. ஆனால் தகடூர் யாத்திரையில் அது அவன் மகன் எழினி என்று கூறப்படுகிறது. தவிர பதிற்றுப்பத்தின் பதிகம் இரண்டரசரின் உதவி பற்றிக் குறிக்கிறது. மற்ற பாடல்களில் அக்குறிப்பு இல்லை"[31] என்ற கா.அப்பாத்துரையாரின் கருத்தினைச் சுட்டிக்காட்டுகின்றார்.

சேரமானின் படையெடுப்பை அறிந்து சோழ, பாண்டியராகிய இருபெரு வேந்தரும் படைகளோடு வந்து அதியமானுக்குத் துணையாகிச் சேரமானை எதிர்த்தனர். முதலில் போர் சேரமானுக்குரிய கொல்லிக் கூற்றத்திலேயே நீர்வளம் மிக்கதோர் மலைமேல் நிகழ்ந்தது. எனவே அதியமான் சேரமானின் படையெடுப்பினை முன்னமே அறிந்து, சோழ, பாண்டியர் துணையோடு தானே முந்திச் சென்று, அவன் நாட்டிலேயே அவனது படையை எதிர்த்து நின்று போரிட்டான். மேலும்,

"கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்

பல்வேல் தானை அதிக மானோடு

...............................................

தகடூர் எறிந்து, நொச்சிதந்து எய்திய" (பதிற்.பதி.8:3-9)

என்னும் அடிகளின் வழி அதியமானின் வீரச் சிறப்பினையும் ஆண்மையினையும் அறியமுடிகிறது.

கடையெழு வள்ளல்களில் அதியமானும் ஒருவன் என்பதனால் இங்கு அவனது கொடை பற்றி விளக்கப்படுகிறது. "குதிரை, தேர் ஆகியவை படைப்பொருளாக மட்டுமன்றிக் கொடைப் பொருளாகவும் விளங்குகின்றன. நாற்படைப் பொருளைப் பெருவேந்தர்கள் கொடைப் பொருளாக்கும் நிகழ்ச்சி குறுநில மன்னர்களாகிய வள்ளல்களிடையே சிறப்பாக நிகழக் காண்கிறோம்"[32] என்கிறார் கு.வெ.பாலசுப்பிரமணியன்.

கொடை என்பது "அதனை அளிப்பவரால் மனமுவந்து விருப்புடன் தானமாகக் கொடுக்கப்படும் ஒன்று. அது தன்னிச்சையுடன் எவரது தூண்டுதலும் பயமுறுத்தலும், வற்புறுத்தலும் இன்றி கொடுக்கப்படல் வேண்டும்"[33] என்கிறது வாழ்வியல் களஞ்சியம். "தளர்ந்த குடிக்கு வேண்டுவதைக் கொடுத்தல் கொடை"[34] என்பர் குழந்தை.

“உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப் பொருளும் கொடுத்தல் கொடை”[35] என்பர் வெள்ளைவாரணர்.

“வேந்தனின் புகழையும், அவனது ஆட்சியின் சிறப்பையும் எடுத்துப் பரப்பி வேந்தனது ஆட்சிக்கு உறுதுணையாகச் செயல்பட்ட புலவருக்கே வேந்தன் பொருள் கொடுத்தனர்”[36] என்பர் க.கைலாசபதி.

சங்க காலக் குறுநில மன்னர்கள் மாபெரும் வீரர்களாய் விளங்கியதோடு அமையவில்லை. கலைகளையும், கலைஞர்களையும் போற்றி ஆதரிப்பதில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாக் கொடை வள்ளல்களாக விளங்கினர். அவர்கள் பாணர்களையும், பாடினியரையும் புலவர்களையும், பொருநரையும் போற்றி ஆதரித்ததில் வேறு எத்தகைய உள்நோக்கமும் உறைந்து கிடப்பதாகத் தெரியவில்லை. இதை அவர்கள் ஒரு புனிதக் கடமையாகவே கருதினர். எனவே, ‘வரையாது வழங்கும் வள்ளமை சிறப்புமிகுக் குறிக்கோளாக அவர்களால் போற்றப்பட்டதில் வியப்பு இல்லை’ என்பர் க.த.திருநாவுக்கரசு. இவ்வாறு கொடை கொடுப்பதில் பெருஞ்சேரல் இரும்பொறையை மிஞ்சியவன் என்று புகழப்படுகின்றான் கடையெழு வள்ளல்களில் ஒருவனான அதியமான்.

**ஆரியர்**

சங்ககாலம் தொட்டு ஆரியர் என்றொரு இனக்குழுச் சமூகம் வாழ்ந்து வந்ததாகச் சங்க இலக்கியம் நமக்குச் சான்று பகர்கின்றது. இத்தகைய ஆரியர் என்பார் யார்? என்பதற்குத் “தமிழகத்திற்கு வடக்கேயுள்ள நாடு ‘ஆரியகா’ எனக் கிரேக்க நூல்களிற் கூறப்பட்டுள்ளது. இது அறுவரின் நாடான அறுவகம் அன்றாயின் ஆரியரின் நாடான அறுவகமாகும் எனல் வேண்டும். எனவே, ஆரியர் என்பார் தமிழகத்திற்கு வடக்கே உள்ள நாட்டில் வாழ்ந்த மக்கள் எனக் கொள்ளல் வேண்டும்”[37] என்பர் மொ.அ.துரைஅரங்கசாமி.

இவ்ஆரியர்களைச் சங்க இலக்கியம் நான்கு பொருண்மைகளில் சுட்டுகின்றது. அவை பின்வருமாறு :

1. ரிஷிகள் / முனிவர்கள் (அகநா.398:18-20)

2. தொம்பர் / மிலேச்சர் (முல்லை.65-66)

3. யானையைப் பழக்குவோர் (அகநா.276:9-12, முல்லை 30-66)

4. வடநாட்டு மக்கள் / மன்னர் (பதிற்.11:21-24, 43:6-7, 5ம் பதி.4-7)

ஆய்வின் விரிவு அஞ்சி, பதிற்றுப்பத்தில் ஆரியர் குறித்துக் குறிப்பிடப் பெற்றுள்ள பதிவுகள் மட்டும் ஆராயப் பெறுகின்றன. இவ்ஆரியர் குறித்த பதிவுகள் 2 ஆம் பத்திலும் 5 ஆம் பத்திலும் இடம் பெற்றுள்ளன.

இரண்டாம் பத்தின் பாட்டுடைத் தலைவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்பதால் இவனின் வட எல்லை இமயமலை வரை பரவி விரிந்திருந்தது என்பது புலனாகிறது. இவ்வட எல்லையான இமயமலையில் தன் இலச்சினையான வில்லினைப் பொறிப்பதற்கு ஆரிய மன்னர்களோடு போர் செய்து அலறத்தாக்கி வெற்றி கொண்டான் என்பதனை இரண்டாம் பத்தின் பதிகத்தின்வழி அறியமுடிகிறது.

ஐந்தாம் பத்தின் பாட்டுடைத் தலைவனான சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குப் படிமக்கல் எடுக்க எண்ணி இமயமலை சென்றபோது தமிழ் மன்னரை இழிவாகப் பேசியமைக்காக ஆரிய மன்னர்களான கனக, விசயரைப் போர் செய்து தோற்கடித்து அவர்களின் தலையில் கல்லினைச் சுமத்திக் கொணர்ந்து கங்கையில் நீராட்டினான் என்கிறது ஐந்தாம் பத்தின் பதிகம்.

மேற்குறித்த பதிவுகளின் வழி வடநாட்டுக் குறுநில மன்னர்களான ஆரியர்களைப் பெருநில வேந்தர்களான சேரர்கள் போர் செய்து

தோற்கடித்தனர். ஆரியர்கள் அப்பெருநில வேந்தர்களை எதிர்த்து வஞ்சினம் கூறிப் போர் செய்து தோற்றிருக்கின்றனர் என்பதன் வாயிலாக ஆரியர்கள் அஞ்சா நெஞ்சம் உடையவர்களாக இருந்திருக்கின்றனர் என்பது தெளிவாகின்றது.

**கொங்கர்**

அரசன் பெயரன்றி நாட்டின் பெயரால் சுட்டப்படும் சில மன்னர்கள் பற்றிய குறிப்புகளும் பதிற்றுப்பத்தில் இடம்பெற்றுள்ளன.

இரும்பினால் செய்த குந்தாலியில் பாறையை உடைத்தால் அங்குச் சிறிய அளவில் நீர் ஊறும். அத்தகைய நீரினை நீண்ட கயிற்றால் கட்டப்பட்ட வாளியால் இறைப்பர். இறைத்த நீரைக் குடிப்பதற்குப் பசுக்கள் மொய்க்கும். இத்தகைய பசுக்கூட்டங்களையுடைய கொங்கர், குட்டுவனை எதிர்த்துப் போர் செய்து தோற்றானர்.

"கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்

ஆகெழு கொங்கர் நாடு அகப்படுத்த

வேல்கெழு தானை வெருவரு தோன்றல்" (பதிற்.22:14-16)

என்னும் அடிகளின் வழிச் சீறூர் மன்னர்களான கொங்கர் மூவேந்தர்களுள் ஒருவனான குட்டுவனுக்குப் பயந்து திறை செலுத்தாமல் எதிர்த்து நின்று போர் புரியும் வல்லமை படைத்தவர்களாக இருந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

"வானில் பறக்கும் பருந்தின் நிழலைத் தன் கொம்பினால் குத்திப் பரற்கற்கள் பரவிக் கிடக்கும் மேட்டு நிலத்தில் பாறையினை உடைக்கும் படையுடைய கொங்கர்களின் பசுக்கள் பரவிச் செல்லும்"[38] என்பர் அ.மா.பரிமணம்.

## நன்னன்

*சேரநாட்டையொட்டிய மேல்கடற் கரையாகிய வியலூரில் இருந்து ஆண்டவன் நன்னன் வேண்மான். இவன் வேளிர்குலத் தலைவன் ஆவான். இதனைக் குறுந்தொகைப்பாடல் ஒன்று 'பெண் கொலை புரிந்த நன்னன்' (குறுந்.292) என்றுரைக்கின்றது.*

*நன்னன் வேண்மானைப் பற்றி பரணர், பெருந்தலைச் சாத்தனார், மாமூலனார், முள்ளியூர்ப் பூதியார், நக்கண்ணையார், மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவன் மள்ளனார், மாங்குடி மருதனார் ஆகிய புலவர்கள் பாடியுள்ளார்.*

*இவர்கள் பாடியுள்ள பாடல்களுள் குறுந்தொகையில் இரண்டு பாடல்களிலும் (குறுந்.73, 292) நற்றிணையில் இரண்டு பாடல்களிலும் (நற்.270, 391) அகநானூற்றில் பதினைந்து பாடல்களிலும் (அகநா.15, 44, 97, 142, 152, 173, 199, 208, 258, 349, 354, 356, 372, 392, 394) மதுரைக் காஞ்சியில் சில அடிகளிலும் (மதுரைக்.618, 619) பதிற்றுப்பத்தில் சில அடிகளிலும் (பதிற்.40, 88, பதி.4) புறநானூற்றில் 151 வது பாடலிலும் நன்னன் வேண்மான் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.*

*நன்னன் என்னும் குறுநில மன்னன் சேரவேந்தர்களுக்கு இணையாகப் பொன்னாலாகிய கண்ணியையும், தேரினையும், ஒளிமிக்க பூக்களைக் கொண்ட வாகை மரத்தினையும் உடையவன் என்று பதிற்றுப்பத்து உரைக்கின்றது.*

*கொண்கானத்தை ஆண்ட நன்னன் மரபில் நமக்குத் தெரியவரும் நன்னன்கள் நால்வர் என்பார் ராஜ்கௌதமன். அக்கருத்துப் பின்வருமாறு :*

1. *பழையனோடு (சோழன் படைத்தலைவன்) மோதிய சேரரின் தலைவர்கள் அறுவரில் ஒருவர் நன்னன் I. இவனது காவல் மரம் வாகை.*

2. வாகைப் பெருந்துறைப் போரில் நார்முடிச் சேரலுடன் பொருதி மாண்டவன் நன்னன்.II

3. மாமரத்தைக் காவல்மரமாகக் கொண்டவன் நன்னன் III (குறுந்.292:5 நற்.270:9-10)

4. மலைபடுகடாம் பாட்டின் தலைவன் நன்னன் IV"[39]

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் நன்னன் என்பானோடு போர் செய்து வெற்றிபெற்றான் என்பதால் நன்னன் எனும் குறுநிலமன்னன் சேரனுக்கு இணையான படைபலத்தினை வைத்திருந்தான் என்பது புலனாகிறது.

பதிற்றுப்பத்தில் குறிக்கப்பெறும் நன்னன், மேலே குறிப்பிடப் பெற்றுள்ள நான்கு வகை நன்னன்களில் இரண்டாம் வகையைச் சேர்ந்தவன் என்பது தெளிவாகின்றது.

**பதுமன்**

நெடுவேளாவிக்குப் பின்னோனாக ஆவியர்கோவாய் அறிய வருபவன் வேளாவிக்கோமான் பதுமன் என்பவனாவான். இவன் மகளிர் இருவருள் ஒருத்தியை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும், மற்றொருத்தியைச் செல்வக்கடுங்கோ வாழியாதனும் மணந்துகொண்டனர் என்பதை,

"வேளாவிக் கோமான்
பதுமன் தேவி ஈன்ற மகன்" (பதிற்.பதி.4:2-3)

"குடக்கோ நெடுஞ்சேர லாதற்கு வேளள்
ஆவிக் கோமான் தேவி ஈன்ற மகன்" (பதிற்.பதி.6:1-2)

"பொய்கில் செல்வக் கடுங்கோ வுக்கு
வேளாவிக் கோமான் பதுமன் தேவி என்ற மகன்" (பதிற்.பதி.8:1-2)

என்பன போன்ற அடிகள் விளக்குகின்றன.

பதுமன் இமயவரம்பனுக்கும் செல்வக் கடுங்கோவுக்கும் மாமனாகும் முறை உள்ளவன். வஞ்சிமாநகராகிய கருவூர்ப் புறத்தே இவன் பெயரோடு விருந்தினர் மாளிகையொன்று இருந்ததைச் சிலப்பதிகாரம்,

"ஆரிய அரசரை அருஞ்சிறை நீக்கிப்

பேரிசை வஞ்சி மூதூர்ப் புறத்துத்

தாழ்நீர் வேலித் தண்மலர்ப் பூம்பொழில்

வேளா விக்கோ மாளிகை காட்டி" (சிலம்.பா.28:195-198)

என்றுரைக்கும். இச்சான்றுகளின் அடிப்படையில் பதுமன் என்பவன் சேரவேந்தர்களாகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கும், செல்வக்கடுங்கோ வாழியாதனுக்கும் உறவுடையோன் என்பது தெளிவாகிறது.

**பழையன்**

"குறுநில மன்னரில் பலர் வேந்தர் பொருட்டுப் படைமேற் சென்று மற்ற மன்னர்களோடுப் போரிட்டு அவர்களுக்கு வெற்றி தேடித் தந்தவர்கள் என்பதால் அத்தகைய குறுநில மன்னர்கள் மூவேந்தர்க்கு உரிய குடிப்பெயரால் அழைக்கப் பட்டுள்ளனர்"[40] என்பர் பெ.மாதையன். போஓர் கிழவோன் எனப்பட்ட பழையன்,

"இழைஅணி யானைப் பழையன் மாறன்

மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்

வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுத்த

கிள்ளி வளவன் நல்லமர் சாஅய்"[41]

எனப் பாண்டியர் பெயரால் அழைக்கப்பட்டுள்ளமை இதற்குச் சான்று. இவ்வாறே நாலை கிழவன் நாகன்,

"திருவீழ் நுண்பூண் பாண்டியர் மறவன்

படை வேண்டுவழி வாள் உதவியும்

வினை வேண்டுவழி அறிவு உதவியும்

வேண்டுப வேண்டுப வேந்தன் தேஎத்து

அசைநுகம் படாஅ ஆண்தகை உள்ளம்"[42]

எனப் பாண்டியன் மறவன் எனப்பட்டமைக்கு அவனது வேந்துவிடு தொழிலே காரணமாக இருப்பதை அறிய முடிகிறது. இச்சான்றுகளின் வழிக் குறுநில மன்னர்கள் வேந்தர்களுக்கு அடங்கியவர் என்பது உறுதியாகிறது. மோகூரை ஆண்டவன் பழையன் மாறன். இவன் பாண்டியன் படையில் பணியாற்றியவன். பாண்டியரிடம் கொண்ட நட்பால் பழையன் என்ற தன் பெயரைப் பழையன் மாறன் என்று மாற்றிக் கொண்டுள்ளான். கோசர்கட்குப் படைத்தலைவனாக விளங்கியுள்ளான். 'பாண்டிய நாட்டில் மதுரைக்கு அண்மையில் பிற்காலத்து வைணவத்திருப்பதியாக விளங்கிய திருமோகூரே இப்பழையனுடைய மோகூர்' என்று அறிஞர் மயிலை சீனி.வேங்கடசாமி சுட்டுவர்.

'இன்றைய விழுப்புரம் மாவட்டம், கள்ளக்குறிச்சியை அடுத்துள்ள மோகூரே இப்பழையனின் மோகூர்' எனப் புலவர் கா.கோவிந்தன் கூறுவர். ஆயின், அது பாண்டிய நாடாகாமையால் பொருந்தாது.

கூடல் நகரில் பழையனுக்கும் கிள்ளிவளவனுக்கும் போர் நடந்ததால் கூடல் நகர் பழையனுக்கு உரிய பகுதியாக விளங்கியுள்ளது. போர் முடிந்ததும் பழையன் அவன் ஊராகிய மோகூருக்குச் சென்று விட்டாலும் 'பழையன் மாறனைக் கூடலை யாண்ட பேரரசராகக் கருதுவாரும் உளர்' என்பார் ரா.இராகவையங்கார். பழையன்மாறன் என்பவன் பாண்டிய மரபைச் சேர்ந்தவன். இவன் வித்தை என்னும் ஊரினை ஆண்டுவந்தான் என்பதை,

"வித்தை ஆண்ட இளம்பழையன் மாறனையும்" (பதிற்.பதி.9:7)

எனும் அடியின் மூலம் அறியலாம். வித்தை - இதனைக் கல்வி என்றும், இப்பெயரில் அமைந்த ஒரு புலவர் என்றும் விளக்கியுள்ளனர். புலவர் பெயராக இச்சொல் சங்க நூலுள் காணப்படவில்லை. "தமிழ்ச் சங்கத்தைப் பேணித் தமிழ் வளர்த்த பாண்டியன் மரபில் வந்தவன் என்பதனைக் குறிக்கும் வகையில் வித்தையாண்ட என்னும் தொடர் பயன்படுத்தப் பட்டிருத்தல் வேண்டும்"[43] என்பார் அ.மா.பரிமணம்.

உழிஞை மாலை சூடிப் போர் புரியும் அறுகை என்னும் சிற்றரசன் தன் பகைவனான மோகூர்ப் பழையன் என்னும் மன்னனுக்கு அஞ்சித் தன் நாட்டிலிருந்து ஓடி ஒளிந்தான். இதனை அறிந்த கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் தன் நண்பனின் தாளாத் துயரைத் தீர்க்க மோகூர் மன்னன் மேல் படையெடுத்தான். மோகூர் மன்னனும் குட்டுவனுக்கு எதிராகத் தன் படையை ஒன்று திரட்டிப் போர் செய்தான். இதன் வழிப் பழையன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனுக்கு இணையான படை வலிமை உடையவன் என்பது புலனாகிறது. இதனை,

"நுண்கொடி உழிஞை வெல்போர் அறுகை

..............................................................

மோகூர் மன்னன் முரசங் கொண்டு" (பதிற்.44:10-14)

என்னும் அடிகள் விளக்கும். வெல்போர் வேந்தரும், வேளிர்களும் ஒன்றுபட்டு வஞ்சினம் கூறியவர்களாய் மோகூர்ப் பழையனுக்குத் துணையாக உடன்வந்தனர். இவர்களைத் துணையாக வைத்துக் கொண்டு மோகூர் மன்னன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனோடு போர்புரிந்தான். இப்போரில் தன்னுடைய காவல் மரமாகிய வேம்புவை இழந்தான். இவன் நாடும் சேரமன்னன் வசமானது.

## யவனர்

எகிப்திய நாட்டில் பிரமிடு கோபுரங்கள் தோன்றிய காலம் தொட்டே தமிழர்கள் மேலைநாடுகளுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதற்கு அங்குக் காணப்படும் மலையாள நாட்டுத் தேக்கு மரங்களே சான்று. அந்த வகையில் வாணிகத் தொடர்பை முன்வைத்துத் தமிழ்நாடு சிறப்புப் பெற்றுள்ளது. பழங்காலத்தில் சிறந்து விளங்கிய முசிறி, கரூர், தொண்டி (இத்தொண்டி என்பது சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள சேர நாட்டுத் தொண்டி, தற்பொழுது கேரளத்தின் ஒரு பகுதியாகத் திகழ்ந்து வருகிறது) கொற்கை ஆகிய பெருநகரங்களில் மேல்நாட்டு வியாபாரிகளும் வடநாட்டு வியாபாரிகளும் வந்து குடியேறினர். அவ்வாறு குடியேறியவர்களில் ஒரு இனத்தவர் அல்லது பகுதியினர் யவனர் என்று அழைக்கப் பெற்றனர்.

இவ்யவனர் என்ற சொல் அயோனியர் என்ற கிரேக்கச் சொல்லிருந்து பிறந்ததாகும். அச்சொல் "ஆதியில் கிரேக்கரை மட்டும் குறித்திருக்க வேண்டும். நாளாவட்டத்தில் அது மேலை நாட்டு மக்கள் அனைவரையும் உளப்படுத்துவதாயிற்று எனல் வேண்டும்"[44] என்பர் மொ.அ.துரைஅரங்கசாமி.

இரண்டாம் பத்தின் பாட்டுடைத் தலைவனான இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனிடம் முரண்பட்டு எதிர்த்த யவனர் எனும் வன்சொல் யவனரைத் தன் ஆற்றலால் அடக்கி, ஒடுக்கிச் சிறை செய்ததோடு மட்டுமல்லாது அவர்களின் கைகளைப் பின்புறமாகக் கட்டித் தலையில் நெய்யை ஊற்றி அவமானப்படுத்தினான் (பதிற்.பதி.2) என்பதன் வழிச் சேரலன் வலிமை மிக்கவனாகின்றான். இருப்பினும் இது போன்ற ஒரு கொடுஞ்செயலை வேறு எந்தப் பகைவரிடமும் காண்பிக்கவில்லை அல்லது கோபப்படவில்லை என்பதால் யவனர் செய்த குற்றம் எல்லையற்றதாக

இருந்திருக்க வேண்டும். அதாவது, பெருநில வேந்தர் என நினையாது மதிப்பிலியின் என எண்ணிப் போர் செய்யத் துணிந்திருக்கலாம். அதிகப்படியான துன்பங்களை அல்லது இடையூறுகளைச் செய்திருக்கலாம்.

மேற்குறித்த பதிவுகளின் வழி யவனர் சேரரை எதிர்க்கும் உரத்த நெஞ்சம் உடையவராய் இருந்துள்ளனர் என்பது புலனாகிறது.

**வேள்பாரி**

பறம்பு மலையையும் அதனைச் சூழ்ந்த முந்நூறு ஊர்களைக் கொண்ட பறம்பு நாட்டையும் ஆண்ட வேளிர் வழியினன் வேள்பாரி. இவன் எவ்வியின் தொல்குடியில் தோன்றியவன் என்பார் கபிலர்.

"............................... இயல்தேர் அண்ணல்

எவ்வி தொல்குடிப் படீஇயர்"[45]

பாரியும் பாண்டியன் மண்டலமே எனவரும் பாண்டி மண்டல சதகப் பாடல் (66) அடியினால் பாரியின் பறம்புமலை பாண்டிய நாட்டில் உள்ளமை புலனாகும். பாண்டிநாட்டுத் திருப்புத்தூர்ச் சிவன் கோயில் கல்வெட்டு ஒன்றில் "புறமலை நாட்டுப் பொன்னமராவதி யூருடையான் திருக்கொடுங்குன்றூருடையான் என்ற தொடர் காணப்படுகின்றது"[46] "பாரியின் பரம்பு நாட்டிற்குப் பறநாடென்ற பெயர் வழக்கமும் உண்டென்பதை, பாரி பறநாட்டுப் பெண்டிரடி"[47] என்ற பாடலடியால் அறிய இயலும். ஆதலின் அம்முறையே பறம்பு மலைநாடு பறமலை நாடென்று ஆகி அப்பறமலை நாடே காலப்போக்கில் புறமலை நாடாயிற்று. ஆகவே பொன்னமராவதியையும் திருக்கொடுங்குன்றூரையும் உள்ளடக்கிய இப்புறமலை நாடே பாரியின் பறம்புமலை நாடாகும்.

இப்போது “பிரான்மலையென வழங்கும் கொடுங்குற்றமே பாரியின் பறம்புமலை என்பது விளங்கும். இப்பிரான்மலையிலுள்ள சிவன்கோயிலான மங்கைநாதன் கோயிலின் ஆறுகால் மண்டபத்தில் அக்கோயிலின் பெயர் பாரியின் பெயராலேயே பாரீசுவரமென்று குறிக்கப் பட்டிருப்பதும் இதற்குத் தக்க சான்றாகும்”[48] என்பர் வ.குருநாதன்.

சேர அரசர்கள் எவ்வாறு ஈகைத்தன்மையும், படை வலிமையும் உடையவராக இரந்தார்களோ அதைப் போன்று குறுநில மன்னனான பாரிவேளும் சிறப்புடையவனாகத் திகழ்ந்தான் என்பதனை “பூசிக் காய்ந்த சந்தனத்தையும் கொடுத்து மாறாத ஈகையினையும், மலர்ந்த மார்பினையும் கொண்டு மிகவும் வண்மை பொருந்தியவனாய்த் திகழ்ந்தான்”[49] என்பர் அ.மா.பரிமணம்.

குறுநில மன்னர்களைப் பற்றிய பாடல்கள் பெரும்பாலும் கொடைப் பண்பைப் பாடுவனவாகவே உள்ளன (புறநா.179:1-3) எனும் பாடலடிகள் சீறூர் மன்னரிடம் விருந்துபேணும் பண்பு இருந்ததைப் போல் குறுநில மன்னரிடமும் கொடைப் பண்பு மேலோங்கியிருந்ததைக் காட்டுகிறது என்பர் பெ.மாதையரன்.

‘பாரி வாரச் சேண்புலம் படர்ந்தோன்’

என்பதில் பாரியுடன் தொடர்பு கொண்டிருந்த கபிலர். அவ்வள்ளல் இறந்த பின்னர் அவனையொத்த வீரமும், கொடைப் பண்பும் கொண்டு விளங்குபவன் நீ என்றதனால் உன்னிடம் வந்தேன் என்றுரைப்பதன் மூலம் பாரியின் நிலைத்த புகழ் புலனாகிறது.

**வேளிர்**

சங்க இலக்கியங்களில் சேர, சோழ, பாண்டியராகிய முடிவேந்தர்களை அடுத்து மொழிப்பெறுவோர் வேளிர். இவ் வேளிரை

"பதினொரு வேளிரொடு வேந்தர் சாய"[50]

"இருபெரு வேந்தரொடு வேளிர் சாய"[51]

என்றெல்லாம் வேந்தரோடே வேளிர் உடன்படுத்தி மொழியப் பெறுகின்றனர். ஆதலால் பண்டைத் தமிழகத்தில் வேந்தரையடுத்த நிலையில் சிற்றரசருள் சிறப்பிற்குரியோராய்த் திகழ்ந்தவர் வேளிரே என்பது விளங்கும். வேளிர் எனும் வடநாட்டுக் குடியினர் அகத்தியருடன் தமிழகம் வந்து குடிபெயர்ந்தனர் எனச் சங்க நூல்கள் சுட்டுகின்றன. இவ்வேளிர் தமிழ் நாட்டில் சேர, சோழ, பாண்டியருடன் படைப்புக்காலம் தொட்டு வாழ்ந்து வந்த குறுநில வேந்தர் என்று உரைப்பாரும் உளர். நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிர உரையில் அகத்தியர் தென்திசை செல்லும் பொழுது துவாரகையிலிருந்த நெடுமுடி அண்ணல் வழி அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையும் கொண்டுவந்து காடு கொடுத்து நாடாக்கி வேளிரை வடநாட்டிலிருந்து தென்னாடு குடியேறியவராகக் கூறுவர்.

"அழும்பில், குதிரைமலை, பாலி, தகடூர் ஆகியவற்றைத் தலைமை இடமாகக் கொண்ட வேளிர் சேர அரசனுக்கு உட்பட்டவர்கள்"[52] என்பார் கா.அப்பாத்துரை.

"செந்தமிழ் வளர்த்த பெருமையில் சேர, சோழ, பாண்டியருக்கு எவ்வளவு பாகமுண்டோ அதற்கு அதிகமில்லாமற்போயினும் அவரளவு சமபாகம் பெற்று நின்ற ஒரு பெருங் கூட்டத்தார் முற்காலத் தமிழ் நாட்டில் இருந்தனர் என்றால் அது வேளிற்குடியே"[53] என்பார் மு.இராகவையங்கார்.

"சிற்றரசு வேளிர்களும் அதிக வலுப்பெற்றிருந்த சூழ்நிலைகளிலும் கூட அவர்களுக்கென்று சின்னமேதும் கற்பித்துக் கொண்டார்களில்லை. மூன்று சின்னங்களும் தொன்மைத் தமிழகம் மூன்றாகப் பிரிக்கப்பட்ட காலத்தில் அப்பகுதிகளின் வடிவமைப்பிலிருந்து அமைக்கப் பெற்றதுதான்"[54] என்பார் மா.கந்தசாமி.

தொல்காப்பியத்தில் கிழவர், கிழவன், கிழவோர் என்னும் சொற்கள் தலைவனைக் குறிக்க மிகுதியாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. கிழவனினும் தகுதியில் மேம்பட்டவராக வேளிர் காணப்படுகின்றனர். வேளிர்களைப் பொறுத்தளவில் அவர்கள் குறுநிலத் தலைவர்களாக இருந்த போதிலும் வேந்தர்களுக்குச் (சேர, சோழ, பாண்டியர்) சமமாகக் கருதப்பட்டனர். பதிற்றுப்பத்தில் நான்கு இடங்களில் வேந்தரும் வேளிரும் என்ற குறிப்பு இடம்பெற்றுள்ளது. வேளிருக்கு இருந்த மேம்பாட்டை இது உணர்த்துகிறது. சேலம், நீலகிரிப் பகுதிகளில் தொடக்ககால வேளாண்மைக் குடியிருப்புகளை முதன்முதலாக உருவாக்கியவர்கள் வேளிர் ஆவர்.

"அரசியலில் உரிமை மிக்கவர்களாக விளங்கியமையால் துவரையை (துவார சமுத்திரம்) ஆண்டவர்களோடு வேளிர்களை இணைக்கும் தொன்மம் உருவாயிற்று. புறநானூறு (201, 202) தரும் இறை, கோ மற்றும் வேளிர் குறிப்புகள் அவர்கள் இரத்த உறவுடைய சமூகக் குழுக்களின் தலைவர்களாக விளங்கியவர்கள் என்றும் தங்களிடையே உருவாகி வளர்ந்த அதிகார முறையால் உயர்ந்தவர்கள் என்றும் தெரிகிறது"[55] என்பர் தி.அன்புச்செல்வன்.

இவ்வேளிர் என்னும் குறுநில மன்னனும் ஐந்து வகை நிலப்பகுதிகளிலும் பிறபகுதிகளிலும் வாழ்கின்ற மக்களும், வெற்றி முரசு கொண்ட ஏனைய இருபெருவேந்தரும் தம்முள் ஒன்று பட்டுத் தமக்குப்

பாதுகாப்பாக அமைந்த அரண்களைக் காக்க முடியாமல் குட்டுவனிடம் தோற்றனர் என்பதை

"வெல்போர் வேந்தரும் வேளிரும் ஒன்று மொழிந்து
மொய்வளம் செருக்கி மொசிந்துவரு மோகூர்" (பதிற்.49:7-8)

"உருகெழு மரபின் அயிரை பரைஇ
வேந்தரும் வேளிரும் பின்வந்து பணிய" (பதிற்.88:12-13)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. "இவ்வேளிரே சிந்து சமவெளி நாகரிக மக்களுடன் தொடர்பு கொண்டு பின்னர்த் தென்னாடு போந்தனர் என்றும் ஊகிக்க இடமுண்டு என்கிறார்"[56] ரா.இராகவய்யங்கார். வெல்போர் வேந்தரும் வேளிர்களும் ஒன்றுபட்டு மோகூர் மன்னனுக்குத் துணையாகச் சென்று குட்டுவனை எதிர்த்துப் போர் செய்து தோற்றனர் என்பதை விடக் குட்டுவனை எதிர்க்கும் ஆற்றல் படைத்தவர்கள் வேளிர் வகையினர் என்பது தெள்ளத் தெளிவாகின்றது.

**புறநானூறு**

தமிழகமெங்கும் பரவியிருந்த பெருநில வேந்தர்கள், குறுநில மன்னர்கள், பிறகுழுத்தலைவர்கள், கடையெழு வள்ளல்கள், புலவர் பெருமக்கள் போன்றோரின் வரலாறுகள் பதிவு செய்யப் பெற்ற வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ்கின்றது புறநானூறு.

வேந்தர்கள், மன்னர்கள், வள்ளல்கள், 178 பேரைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு 157 புலவர்பெருமக்கள் 400 பாடல்களைப் புனைந்துள்ளனர். இந்நானூறு பாடல்களில் 267, 268 ஆகிய இரு பாடல்களும் கிட்டவில்லை. ஏனைய 398 பாடல்களில் 14 பாடல்களுக்கு ஆசிரியர் பெயர் குறிப்பிடப்படவில்லை.

வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்னும் பதினொரு திணைக்குரிய பாடல்கள் புறநானூற்றில் அமைந்துள்ளன. இத்தகு புறநானூற்றினைத் தொகுத்தவர், தொகுப்பித்தவர் பெயர்கள் கிட்டவில்லை. டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்கள் பல்வேறு ஓலைச்சுவடிகளை ஒப்புநோக்கி 1894 ஆம் ஆண்டு புறநானூற்றினைப் பழைய உரையுடன் முதன் முதலில் பதிப்பித்து வெளியிட்டார். மேற்குறித்த பழைய உரை முழுமையும் கிட்டவில்லை. 1 முதல் 266 பாடல்களுக்கு மட்டும் கிட்டியுள்ளது.

புறநானூற்றுப் பாடல்கள் பெரும்பான்மை ஆசிரியப்பாவாகவும் சில பாடல்கள் வஞ்சிப்பாவாகவும் அமைந்துள்ளன. இப்பாடல்களில் 2 முதல் 86 வரையுள்ள பாக்கள் மூவேந்தர்களின் மாண்புகள் குறித்துக் கூறுவன. 87 முதல் 181 வரையுள்ள பாக்கள் குறுநில மன்னர்கள், கடையெழு வள்ளல்கள் குறித்துக் கூறுவன. 182 முதல் 195 வரையுள்ள பாக்கள் அறங்களையும், நீதிகளையும் கூறுவன. 196 முதல் 211 வரையுள்ள பாக்கள் பரிசில் குறித்துப் பேசுவன. 212 முதல் 256 வரையுள்ள பாக்கள் வடக்கிருத்தல், இரங்கல் குறித்துப் பேசுவன. 257 முதல் 335 வரையுள்ள பாக்கள் உண்டாட்டு, கையறுநிலை, குதிரை மறம், மூதின்முல்லை குறித்துப் பேசுவன. 336 முதல் 354 வரையுள்ள பாக்கள் மகட்பாற் காஞ்சி குறித்துப் பேசுவன, ஏனைய பாக்கள் துறவறம், பெருங்காஞ்சி, மறக்களவழி குறித்துப் பேசுவன.

புறநானூறு தோன்றிய காலத்தில் தொல்காப்பியரின் புறத்திணைக் கோட்பாடுகள் மாற்றமும் புதுமையும் அடைந்துவிட்டன என்பதை இத்தொகை நூலிலுள்ள பாடல்களுக்கு வகுக்கப்பெற்ற திணை, துறைவழி அறியமுடிகிறது. இத்தகு சிறப்பிற்குரிய புறநானூற்றில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 28 இடங்களிலும் சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள்

74 இடங்களிலும், பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 39 இடங்களிலும் குறுநில மன்னர்கள், பிற குழுத் தலைவர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 182 இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன (விவரம் : பின்னிணைப்பு-8).

**சேரர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

"அரசர்க்குரிய அரங்களுள் தலைசிறந்தது படை. படைத்திறத்தால் அரசன் உட்பகையை அழிப்பான், புறப்பகையை ஒழிப்பான். முன்னாளில் தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்னும் நாற்படையுமுடைய அரசன் மிகச் சிறந்தவனாக மதிக்கப் பெற்றான்"[57] எனும் ரா.பி.சேதுப்பிள்ளையின் கூற்றிற்கு இணங்க சேரர்கள் நால்வகைப் படைகளையும் பெற்றிருந்தனர். இத்தகு படை வன்மையுடைய சேரர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் புறநானூற்றில் 28 இடங்களில் பதிவு செய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தும் சேரர்களின் வீரம், புகழ், கொடை என மூன்று பொருண்மைகளாகப் பகுத்து விளக்கப் பெற்றுள்ளன.

**சேரனின் வீரம்**

சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியான 'விளங்கில்' என்னும் ஊரினைச் சோழவேந்தனான இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் அவனது படைவீரர்களும் முற்றுகை இட்டு ஆவ்வூர் மக்களுக்குத் துன்பம் விளைவித்தனர். இதனையறிந்த மாந்தரஞ்சேரல் விரைந்து செல்லக்கூடிய, குதிரைப்படையையும், பலம் மிக்க யானைப்படையையும் கொண்டு சென்று சோழ வேந்தனையும் அவனது படை வீரர்களையும் விரட்டியடித்தான் என்பது வரலாறு. இதனை,

"விளங்குநீர் விளங்கில் விழுமம் கொன்ற
களங்கொள் யானைக் கடுமான் பொறைய" (புறநா.53:4-5)

என்ற பாடல் அடிகள் சான்று பகர்கின்றன. இப்பாடலின் வழி சங்க காலத்தில் பொருந்தில், கிடங்கில் எனும் ஊர்களைப் போல் 'விளங்கில்' எனும் ஊர் இருந்துள்ளது. இவ்வூரில் சேரவேந்தனான மாந்தரஞ் சேரலுக்கும், சோழ வேந்தனான இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்கும் இடையே போர் நிகழ்ந்துள்ளது. இப்போர் வரலற்றை வரும் தலைமுறையினர் அறிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக இளங்கீரனார் புறநானூற்றில் பதிவுசெய்துள்ளார் என்பதைத்தெளிவுற உணர முடிகின்றது.

### சேரனின் புகழ்

பொறையன் மரபில் வந்தவன் சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன். இவன் திருமாலிடத்து மிகுந்த ஈடுபாடுடையவன் என்பதையும், கபிலருக்கு நூறாயிரம் காணம்பொன் கொடுத்து 'நன்றா' என்னும் குன்றின்மேல் ஏறிநின்று தன் கண்ணில் கண்ட நாடெல்லாம் கொடையாகக் கொடுத்தான் என்பதையும் பதிற்றுப்பத்து ஏழாம் பதிகம் சுட்டுகின்றது.

விரைவாகச் செல்லக்கூடிய கதிரவன் பகல் பொழுதை மட்டும் தன் எல்லையாக வைத்துக் கொண்டு நிலவு வரும் பொழுது போர்க்களத்தில் தன் எதிரியை எதிர்த்துப் போரிட முடியாமல், கோழை வீரன் ஓடி ஒளிவதைப் போல் புறமுதுகு காட்டி ஓடி மறையும். நிலையாக ஓர் இடத்தைத் தக்க வைத்துக் கொள்ள முடியாமல் தெற்கும் வடக்குமாக இடம் மாறி மாறி அமையக் கூடிய கதிரவன் மாலை வந்துவிட்டால் மலையின் அடிவாரத்தில் போய் மறையும். இப்படிப் பட்ட கதிரவன் சேரனுக்கு ஒப்பாகாது. உலகம் பலர்க்கும் பொது என்னும் சொல்லைப் பொறுக்காமல் தன் நாட்டின் எல்லை சிறிது என எண்ணி அதை விரிவுபடுத்தும் ஊக்கமுடையவன், பகைவரை வெல்லும் நால்வகைப் படையை உடையவன், நிலையான ஆட்சியை நிலைநிறுத்த எண்ணிக் கோட்டையை அமைத்துக் கொண்டவன். தனக்கென

எதுவும் சேர்க்காமல் பிறர்க்குக் கொடை வழங்கும் பேரன்பு உடையவன் சேரன் என்பதை,

"வையம் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொல் பொறாஅது
இடஞ்சிறிது என்னும் ஊக்கம் நுரப்ப
ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலல் மண்டிலம்?
.........................................................
பகல்விளங் குதியால் பல்கதிர் விரித்தே" (புறநா.8:1-10)

எனும் பாடல் அடிகள் விளக்குகின்றன.

மேற்குறித்த பாடலின்வழி இயற்கையாக நிகழக்கூடிய கதிரவனின் செயல்பாடுகளைச் சேரனின் செயல்களுக்கு ஒப்புமை காட்டிக் கதிரவனின் செயல்களை விடச் சேரனின் செயல்பாடுகள் உயர்ந்தவை என்பதைப் புகழ்வது போல் இகழ்வதும் இகழ்வதுபோல் புகழ்வதுமான வஞ்சப் புகழ்ச்சி அணியில் பதிவுசெய்துள்ளார் கபிலர்.

சேரவேந்தர்களுக்குப் பல பட்டப்பெயர்கள் உண்டு. அவற்றில் வானவரம்பன் எனும் பெயருக்கு மயிலை சீனி.வேங்கடசாமி வானத்தை எல்லையாக வைத்து ஆட்சி செய்தவர்கள் சேரர்கள் என்பர். இக்கருத்தாக்கத்திற்கு வலிமை சேர்க்கும் மற்றொரு கருத்தாக்கம் வருமாறு: வானத்தில் ஆட்சி செய்யக்கூடிய கதிரவன், நிலவு ஆகிய இரண்டின் நிகழ்வுகளைச் சேரரின் செயல்பாடுகளுக்கு ஒப்புமை காட்டும் போது வானத்தில் நிகழக்கூடிய ஆட்சியைக் காட்டிலும் மண்ணுலகில் சேரனின்

ஆட்சி உயர்ந்தவையாகப் புலப்படுவதால் அதன் அடையாளமாக வானவரம்பன் எனும் பெயர் பெற்றிருக்கலாம்.

**சேரனின் கொடை**

பகையரசர் பணிந்து தந்த திறைப் பொருளைக் கொண்டு தன்னை நாடிவந்த வறியவரையும், சுற்றத்தாரையும் வாழவைப்பவன் கொல்லிமலைக்குத் தலைவன். யானையின் பார்வைபோல் கூர்மையான பார்வையும் வெற்றியின் மீது விருப்பமும் உடையவன். சேரனைப் பாடிய புலவர்பெருமக்களின் செவ்விய நாவால் வேறு யாரையும் பாடாத அளவிற்குப் பொருள் வழங்கக் கூடியவன். இப்படிப்பட்டவனின் நாடு வானுலகத்திற்கு ஒப்பானது என்று கூறக்கேட்டு வந்தேன். வந்ததன் விளைவு அதன் உண்மைத்தன்மையைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தேன் எனக் குறுங்கோழியூர் கிழார் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் கொடைத் தன்மையைப் புகழ்கின்றார் என்பதை,

“வேந்து தந்த பணிதிறையால்

சேர்ந்தவர் கடும்பார்தீதும்

......................................

மாந்தரஞ் சேரல் இரும்பொறை ஓம்பிய நாடே

புத்தேள் உலகத்து அற்றுஎனக் கேட்டுவந்து

இனிது கண்டிசின் பெரும...” (புறநா.22:26-36)

எனும் பாடல் அடிகள் தெளிவு படுத்துகின்றன.

**சோழர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்**

“முத்தான இத்தமிழ் நாட்டை ஆண்ட மூவேந்தரும் சிலவேளை ஒருவரோடு ஒருவர் முட்டி மோதிப் போரிட்டனர். திறமை சான்ற இவர் தம் ஆட்சியில் நாட்டின் அமைதியே நிலவிற்று ; எனினும், சில வேளை

அவ்வமைதிக்கு ஊறு நேர்ந்தது. அவ்வாறு அமைதிக்கு ஊறு நேர்கின்ற வேளையில் நாட்டின் அமைதியைக் காக்கப் போரிட வேண்டிய சூழ்நிலை அவர்களுக்கு ஏற்பட்டது. அமைதி வேண்டுமென்றால் போருக்குத் தயாராய் இரு என்ற ஒரு ஆங்கிலப் பழமொழி கூறுகின்றது."[58] இப் பழமொழிக்கு ஏற்பச் சங்ககால வேந்தர்களும் இலக்கணமாய்த் திகழ்ந்தனர். இவ்வாறு திகழ்ந்தவர்களில் சோழர்கள் குறிப்பிடத்தகுந்தவர். இச்சோழர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் புறநானூற்றில் 74 இடங்களில் பதிவு செய்யப்பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தும் சோழர்களின் வீரம், புகழ், கொடை என மூன்று பகுதிகளாகப் பகுத்து விளக்கப் பெற்றுள்ளன.

**சோழனின் வீரம்**

செம்பியன் வழிவந்தவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன். இவன் புறாவின் வருத்தத்தை நீக்க வேண்டி, வெண் நிறத்தந்தத்தால் செய்யப்பெற்ற துலாக்கோலின் தன்னை நிறுவைப் பொருளாக வைத்தவன்.

பகைவரை எதிர்த்து நின்று வெல்லக்கூடிய ஆற்றலையும், கணைய மரத்தை ஒத்த வலிமையான தோளையும், செருக்குடைய குதிரைப் படையையும் உடைய கிள்ளி வளவனும், உயர்ந்து விளங்கக் கூடிய இமயமலையில் தன் அடையாளச் சின்னமான 'வில்'லினைப் பொறித்தவனும் மாட்சிமைப் பட்ட தேரை உடையவனுமாகிய சேரனும் போர் செய்து கொண்டனர் என்பதை,

"எழுசமம் கடந்த எழுவுறழ் திணிதோள்
கண்ணார் கண்ணிக் கலிமான் வளவ
..................................................
மாண்வினை நெடுந்தேர் வாணவன் தொலைய

*வாடா வஞ்சி வாட்டும் நின்*

*பீடுகெழு நோன்தாள் பாடுங் காலே"* (புறநா.39:11-18)

என்ற மாறோக்கத்து நப்பசலையார் பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

இப்பாடலின் வழி, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்கும் வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு அரசாட்சி செய்த சேரனுக்கும் இடையே போர் நிகழ்ந்தது என்பது வரலாற்று உண்மையாகின்றது. இப்போரில் சேரனைத்தோற்கடித்துக் கிள்ளிவளவன் வெற்றி கொண்டான் என்பதையும் இப்பாடல் அடிகள் சுட்டுகின்றன.

**சோழனின் புகழ்**

"சங்க காலத் தமிழர் புகழ் எனின் உயிரும் கொடுத்தனர். பழி என்றால் உலகமே கிடைப்பதாக இருப்பினும் ஏற்காது மறுத்தனர். எலியனையவர் நட்பினை நீக்கிப் புலியனையவரின் நட்பை நாடினர்"[59] ஆத்திப்பூவால் தொடுக்கப்பெற்ற மாலையை அணிந்த கிள்ளியின் முன்னோர்கள் யாவரும் பார்ப்பனர் மனம் நோகும்படியான செயல்களைச் செய்ததில்லை. ஆனால் கிள்ளி வெறுக்கும் அளவிற்குத் தவறு செய்துவிட்டாய், ஆகையால் உன் பிறப்பில் எனக்குச் சந்தேகம் உண்டாயிற்று என்றதும் கிள்ளி நாணமடைந்து வெட்கித் தவறினை மன்னிக்குமாறு வேண்டினான். ஆனால் தவறு செய்தவன் நான். தவறு செய்யாமல் பழியை ஏற்று வருந்திய கிள்ளியின் குணம் வேறு யாருக்கும் வராது. ஆகவே பெருக்கொடுத்து வரும் காவிரி நீர் ஒதிக்கிவிட்ட மணல்மேட்டு மணலின் எண்ணிக்கையைக் காட்டிலும் பல நாள் வாழவேண்டும் எனக் கிள்ளிவளவனைத் தாமப்பல் கண்ணனார் புகழ்கின்றார் என்பதை,

"ஆர்புனை தெரியல்நின் முன்னோர் எல்லாம்

பார்ப்பார் நோவன செய்யலர் ; மற்றுஇது

............................................................

மிக்குவரும் இன்நீர்க் காவிரி

எக்கர் இட்ட மணலினும் பலவே" (புறநா.43:13-23)

என்ற மேற்குறித்த பாடல் அடிகள் விளக்குகின்றன. இம்மரபு தொடர்ந்து இருந்தமையை

"நின்பெயர் வாழியரோ... காஞ்சியம்

பெருந்துறை மணலினும் பலவே"[60]

எனப் பதிற்றுப்பத்திலும்,

"நன்னீர்ப்பஃறுளி மணலினும் பலவே"[61]

எனப் புறநானூற்றிலும் இருந்தமையைக் காணமுடிகிறது.

தாமப்பல் கண்ணனார் பார்ப்பன சமூகத்தினைச் சேர்ந்தவர், கூர்மையான அறிவுடையவர். செய்த தவற்றை விரைவில் உணர்ந்து திருத்திக் கொள்ளும் நல்ல பண்பாளர். இவர் "தாமல் என்னும் ஊரினர். தாமல், காஞ்சிபுரத்துக்கு மேற்கில் உள்ளதொரு நல்லவூர். இடைக்காலச் சோழவேந்தர் காலத்தில் இவ்வூர் மிக்க சிறப்புற்று விளங்கியதென்பதை இவ்வூரிலுள்ள கோயிற் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இக்கல்வெட்டுக்கள் இவ்வூரைத் தாமர் (S.I.Vo1.V.1004.A.R.139 of 1896) என்று கூறுதலின், இவர் பெயர் தாமர்ப்பல்கண்ணனாரென இருக்க வேண்டுமென்று துணியலாம். ஏடெழுதியோர் தாமற்பல் கண்ணனாரென எழுதிவிட்டனர் : இவ்வூர் இப்போதும் தாமல் என்று வழங்குவது நோக்கி, இவ்வாறு கொள்ளப்பட்டதென்று கொள்க. பல்கண்ணன் என்பது இந்திரனையும் குறிக்கும் பெயராதலின், பார்ப்பனராகிய இவர் இவ்வாறு

பெயர்பெற்றனர் என்றறிய இவர் கூறுவதே, இவர் பார்ப்பனரென்பதை வற்புறுத்துகிறது"[62] என்பார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

**சோழனின் கொடை**

"இன்றைய வறுமை நிலை அன்றும் இருந்தது. அவ்வறுமையினும் அக்காலத் தமிழர் செம்மை சான்றவராய் விளங்கினர்"[63] என்பதற்குச் சோழர்கள் தக்கதோர் சான்று. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் உறையூரிலிருந்து சோழநாட்டை ஆட்சி செய்துவந்தான். அவனைக் காண்பதற்காக ஒருநாள் ஆலந்தூர் கிழாரென்ற புலவர் சென்றார். அப்போது அங்கிருந்த வாயில்காப்போன் எதுவும் சொல்லாமல் உள்ளே செல்ல அனுமதித்தான். கிள்ளி வளவனும் அவரை அன்போடு வரவேற்றான். வரவேற்ற நாள்முதல் அங்கேயே சிலநாள் தங்கியிருந்தார். தங்கிய நாட்களில் வளவனின் கொடைத்தன்மையைக் கண்ணாரக் கண்டு

> "கிள்ளி வளவற் படர்குவை ஆயின்
> நெடும்கடை நிற்றலும் இலையே; கடும்பகல்
> ..............................................................
> ஆடும் வண்டு இமிராத் தாமரை
> சூடாய் ஆதல் அதனினும் இலையே" (புறநா.69:16-21)

எனப் புகழ்ந்து பாடினார். இப்பாடலில் இரவலராக வருபவர்களுக்குத் தேரைக் கொடையாக வழங்குபவன் கிள்ளி வளவன் எனப் பதிவு செய்யப் பெற்றிருக்கிறது. இதனை நோக்கும் பொழுது கிள்ளிவளவன் எவ்வளவு செல்வச் செழிப்புடன் வாழ்ந்திருக்க வேண்டும் என்பதை உய்த்துணர வேண்டியுள்ளது.

## பாண்டியர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

படைப்புக் காலம் தொட்டுப் பரவலாகப் பேசப்பட்டு வரும் ஒரு தொல்குடியினர் பாண்டியர்கள். இப்பாண்டியர்கள் எக்காலத்திலிருந்து ஆட்சியுரிமை பெற்றனர் என்பது தெரியவில்லை. ஆனால் வால்மீகியால் எழுதப்பெற்ற இராமாயணத்தில் பாண்டியர்களின் தலைநகரம் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. வியாசரால் எழுதப்பெற்ற மகாபாரதத்தில் பாண்டியர்குலப் பெண்ணொருத்தியை அருச்சுனன் மணந்தான் என்ற குறிப்பு காணப்படுகின்றது. கிரேக்க, ரோமானிய எழுத்தாளர்களும் பாண்டிய நாட்டைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

“கி.மு.நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்தவராகக் கருதப்படும் காத்தியாயனாரும் பாண்டியரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இலங்கையின் பழைய வரலாற்றைக் கூறும் மகாவம்சமும் பாண்டியரைப் பற்றிப் பேசுகின்றது. மகா அலெக்ஸாந்தருக்குப் பின்வந்த செல்யுகஸ் நிகேடார், சந்திரகுப்த மௌரியரது அவைக்கு அனுப்பிவைத்த தூதுவரான மெகஸ்தனிஸ் என்பவர் தாம் எழுதியுள்ள ‘இண்டிகா’ எனும் நூலில் பாண்டிய நாட்டைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.”[64] இத்தகு தொன்மை வாய்ந்த பாண்டியர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் புறநானூற்றில் 39 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தும் பாண்டியர்களின் வீரம், புகழ், கொடை என மூன்று பொருண்மைகளாகப் பகுத்து விளக்கப் பெற்றுள்ளன.

## பாண்டியனின் வீரம்

பழந்தமிழரின் பழக்க வழக்கம், தொழில், விளையாட்டு ஆகியன யாவும் மறப்பண்புடன் திகழ்ந்தன. “தம் தொழில் முயற்சியிலும், விளையாட்டிலும், பழக்க வழக்கங்களிலும், இயற்கைப் பண்பிலும் தமிழர்

போர்க்குணம் படைத்தவராகவே விளங்கினர். இரவு, பகல் என்ற வரையறையில்லாமல், கடல் நடுவில் சென்று மீன்வேட்டையாடுதலும், காடுகளிலும் மலையுச்சியிலும் கொடிய வழிகளிற் சென்று விலங்கு வேட்டையாடுதலும் அவருடைய பழைமையான தொழில்கள்”[65] என்பர் அரங்க இராமலிங்கம்.

வீரத்தின் வித்தாக விளங்கிய இத்தொழில்கள் பின்பு விருட்சமாகித் தன் வீரத்தின் ஆண்மையை நிலைநிறுத்துவதற்கும் பொருளினைச் சேர்ப்பதற்கும் ஆட்சி எல்லையை விரிவுபடுத்துவதற்கும் ஒருவரோடு ஒருவர் போர் செய்து கொண்டனர். அவ்வகையில் பாண்டியன் நெடுஞ்செழியனின் வீரத்தினை,

“ஒளிறிலைய எஃகேந்தி
அரைசுபட அமர் உழக்கி
...................................
மன்னர் ஏவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே” (புறநா.26:5-15)

என்று புகழ்கின்றார் மாங்குடிகிழார்.

இப்பாடலில் பாண்டியன் நெடுஞ்செழியன் பகைவர்களின் தலையைக் கொய்து அடுப்பாக்கி, குருதியை உலைநீராக்கி, தோளைத் துடுப்பாக்கிச் சமைத்துக் களவேள்வி செய்தான் என மாங்குடிகிழார் பதிவு செய்திருப்பதால் பாண்டியன் வீரத்தன்மை உடையவன் என்பது தெளிவாகின்றது.

**பாண்டியனின் புகழ்**

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் “ஆலங்கானத்தில் இருபெரு வேந்தரையும் எழுபெரு வேளிரையும் வெற்றி

கொண்ட சிறப்பின் காரணமாகத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என அழைக்கப் பெற்றான். இவன் பாடிய வஞ்சினப் பாடல் ஒன்று புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது. பழந்தமிழ் வேந்தருள் மிகப்பல புலவர்களின் பாராட்டைப் பெற்ற சிறப்புக்குரியவன். பத்தொன்பது புலவர்கள் பாண்டியனின் வெற்றிச் சிறப்பையும், பண்பு நலன்களையும் போற்றிப் புகழ்ந்துள்ளனர். புலவரைப் போற்றுவதிலும், தனிமனித ஒழுக்கத்திலும், தன் குடிமக்களைப் பேணுவதிலும், மிகுந்த நாட்டமுடையவன் என்பதை இவன் உரைத்த வஞ்சினத்தால் அறியலாம்.

'ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி

மாங்குடி மருதன் றலைவ னாக

உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்

புலவர் பாடாது வரைகவென் னிலவரை'

என்னும் கூற்றிலிருந்து புலவர் கூறும் புகழ்ச்சியைப் பெரிதாகக் கருதினான் என அறியலாம். பத்துப்பாட்டுள் மதுரைக் காஞ்சி நெடுநல்வாடை இரண்டும் இவன் புகழ் எடுத்துரைக்கும் நூல்களாகும்"[66] என்பர் அரங்க இராமலிங்கம்.

நல்ல ஊர்களை இடமாகக் கொண்ட எவ்வி என்பானுக்குரிய மிழலைக் கூற்றத்தையும், முதுவேளிர்க்குரிய முத்தூற்றுக் கூற்றத்தையும் வென்று தன் ஆட்சி எல்லைக்குட்பட்ட பகுதியாக இணைத்துக் கொண்டவன் பாண்டியன் நெடுஞ்செழியன். இந்நெடுஞ்செழியனின் நாள் மீன் நிலைக்கட்டும். பகைவருடைய நாள்மீன் பட்டழிந்து போகட்டும் என மாங்குடி கிழார் நெடுஞ்செழியனைப் புகழ்கின்றார். இதனை,

"முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்

தாங்கா உறையுள் நல்லூர் கெழீஇய

ஓம்பா ஈகை மாவேள் எவ்வி

புனலம் புதவின் மிழலையொடு கழனிக்

கயலார் நாரை போர்வில் சேக்கும்

பொன்னணி யானைத் தொன்முதிர் வேளிர்

குப்பை நெல்லின் முத்தூறு தந்த

கொற்ற நீள்குடைக் கொடித்தேர்ச் செழிய

நின்று நிலைஇயர்நின் நாள்மீன் ; நில்லாது

படாஅச் செலீயர்நின் பகைவர் மீனே;" (புறநா.24:16-25)

என்ற பாடல் அடிகள் சான்று பகர்கின்றன.

இப்பாடலின் வழித் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் எவ்வி, வேளிர் என்ற இரு குறுநில மன்னர்களையும் வென்று அடக்கி ஆண்ட வரலாற்றினை அறியமுடிகின்றது.

**பாண்டியனின் கொடை**

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி "அறத்தாறு நுவலும் பூட்கையும் யானைமேற் கொடிகட்டிய சிவிகையமைத்து அமர்ந்து வரும் பெருமிதமும் உடையவன் என்றும், இவனுடைய முன்னோனாகிய பாண்டியன் நெடியோனென்பான் பஃறுளியாறு கடலிற் கலக்குமுடத்தே முந்நீர் விழா ஆற்றினான் என்றும், அவ்வியாற்று மணலினும் பல வாண்டுகள் இப்பாண்டியன் முதுகுடுமி வாழ்வானாக"[67] என்னும் நெட்டிமையாரின் கருத்தினை எடுத்தியம்புகிறார் ஔவை துரைசாமிப்பிள்ளை.

இத்தகு சிறப்புக்குரிய பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி தன் பகைவர்களை வென்று அவர் நாட்டுப் பொன்பொருளைக் கவர்ந்து வரக்கூடியவன். தன்பால் இல்லையென இரந்து வரும் பாணர்களுக்குப் பொற்றாமரைப் பூவைச் சூடுவான், புலவர்களுக்கு

யானையையும் அலங்கரிக்கப்பெற்ற தேரினையும் கொடையாக வழங்கக் கூடியவன் என்பதை,

"பாணர் தாமரை மலையவும், புலவர்

பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்

..................................................................

இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே" (புறநா.12:1-5)

என்ற பாடல் விளக்குகின்றது. இப்பாடலின் வழி "புலவர்க்கு வரையாது வழங்கும் வள்ளல்களாக வேந்தர் விளங்கினர். அவர்களது சிறப்பான பண்புகளில் இவ்வள்ளன்மைப் பண்பு குறிப்பிடத்தக்க ஒன்று"[68] என்பர் அரங்க.இராமலிங்கம்.

## குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள்

பழஞ்சிறப்பும் வரலாற்றுப் பெருமையும் உடைய தமிழகத்தில் பன்னெடுங்காலமாகத் தமிழ்க் குடிமக்கள் வாழ்ந்து வந்தனர் என்பதற்கு,

"எந்தையுந் தாயு மகிழ்ந்து குலாவி

யிருந்தது மிந்நாடே - அதன்

முந்தையரா யிரமாண்டுகள் வாழ்ந்து

முடித்தது மிந்நாடே"[69]

என்ற வரிகள் சான்று பகர்கின்றன.

தொன்மையுடைய இத்தமிழகத்திற்குக் கி.பி.150 இல் வந்த தாலமி, இந்தியாவைப் பற்றியும் குறிப்பாகத் தமிழகத்தைப் பற்றியும் பல விவரங்களைத் தருகின்றார்.

"மூவேந்தர் ஆட்சியில் தமிழகம் தழைத்திருந்ததென்றும், சேரர், பாண்டியர், பரதர், சோழர், அருளாளர், கரையார் போன்ற பல இனத்தவர்கள் இங்கு வாழ்ந்தனர் என்றும், மதுரை, உறையூர், தொண்டி,

முசிறி, கருவூர், கொற்கை, நாகப்பட்டினம், பொதுச (புதுவை), மாவிலங்கை, கோடிக்கரை, காவிரிப் பூம்பட்டினம், மோகூர் முதலிய நகரங்கள் சிறந்திருந்தன என்றும் அவர் குறிப்புகள் கூறுகின்றன."[70]

இக்குறிப்பில் மூவேந்தர்களை மட்டுமல்லாது பரதர், அருளாளர், கரையார் போன்ற குறுநில மன்னர்களையும், மாவிலங்கை, மோகூர் போன்ற குறுநில மன்னர்களால் ஆட்சி செய்யப் பெற்ற நகரங்களையும் தாலமி பதிவு செய்திருப்பதால் மூவேந்தர்களுக்கு ஈடாகக் குறுநில மன்னர்களும் தங்கள் ஆளுமையை நிலைநிறுத்தியிருந்தனர் என்பது வெளிப்படையாகத் தெரிகின்றது.

இத்தகைய ஆளுமை மிக்க குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் புறநானூற்றில் 182 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் அனைத்தும் குறுநில மன்னர்களின் வீரம், புகழ், கொடை என மூன்று பொருண்மைகளாகப் பகுத்து ஆராயப் பெறுகின்றன.

**ஆமூர் மல்லனின் வீரம்**

தொண்டை நாட்டின் உட்பிரிவுகளாகிய இருபத்து நான்கு கோட்டங்களுள் ஆமூர்க் கோட்டமும் ஒன்று. இவ் ஆமூர் அந்தணர் நிறைந்தது ஆழ்ந்த அகழியையும், அரிய காவலையும் உடையது என்பதை,

"அந்தணர் அருகா, அருங்கடி வியன்நகர்,

அந்தண் இடங்கின் அவன் ஆமூர்"[71]

என்ற அடிகள் விளக்கி நிற்கின்றன.

ஆமூர்நாடு, முக்காவல் நாடு என அழைக்கப் பெறும். இம்முக்காவல் நாட்டில் உள்ள ஆமூரில் வாழ்ந்திருந்தமையால் இம்மல்லன் முக்காவல் நாட்டு ஆமூர் மல்லன் என அழைக்கப் பெற்றான். ஆமூர் மல்லன் மற்போரில்

வல்லவனாய் வாழ்ந்து வந்தான். இவன் நாட்டை கைப்பற்ற எணணிய போரவைக்கோப் பெருநற்கிள்ளி என்ற சோழர் குலச் சிற்றரசன் ஆமூரில் வந்து தங்கியிருந்தான். போரவைக்கோ, பேராண்மையடையவன் எனப் பலராலும் பாராட்டப் பெறுவதை ஏற்றுக்கொள்ளாத ஆமூர் மல்லன் போரவைக்கோவை மற்போர் செய்து வீழ்த்த வேண்டும் என முடிவுசெய்தான். அவ்வாறே இருவரும் மற்போர் செய்யத் தொடங்கினர். போரவைக்கோ, ஆமூர் மல்லனைக் காட்டிலும் வலிமை மிக்கவனாகி மல்லன் மார்பில் ஒரு காலை மண்டியிட்டு ஊன்றி அவன் ஆற்றல் குன்றச் செய்தான். மல்லன், போரவைக் கோவை அழிக்க நினைத்த செயல்களை எல்லாம் சிதறடித்து, ஒரு காலை மல்லன் முதுகில் இட்டு வளைத்துக் கொண்டான். இதனால் மல்லன் செயலற்று இறுதியில் காலும் தலையும் முறியப் பெற்றுப் போர்க்களத்திலேயே வீர மரணம் அடைந்தான். இதனை,

> "இன்கடுங் கள்ளின் ஆமூர் ஆங்கண்
> மைந்துடை மல்லன் மதவலி முருக்கி,
> ஒருகால் மார்பு ஒதுங்கின்றே ; ஒருகால்
> வருதார் தாங்கிப் பின்ஒதுங் கின்றே ;
> ..................................................
> இருதலை ஓசிய எற்றிக்
> களம்புகு மலலற் கடந்தடு நிலையே" (புறநா.80:1-8)

என்ற பாடல் பறைசாற்றுகிறது. இப்பதிவின் வழி உறையூரை அரசாண்ட தித்தன் மகனான சோழன் போரவைக்கோ பெருநற்கிள்ளிக்கும் ஆமூரை ஆட்சிசெய்த குறுநில மன்னனான மல்லனுக்கும் ஆமூரில் மற்போர் நிகழ்ந்தது என்ற வரலாற்று உண்மையை அறிய முடிகின்றது.

மூவேந்தர்களுள் ஒருவனான சோழனை எதிர்க்கும் அளவிற்குக் குறுநில மன்னனான மல்லனிடம் நெஞ்சுரம் இருந்ததை இப்பாடல் வெளிப்படையாகச் சித்திரிக்கின்றது.

### பண்ணனின் புகழ்

"சிறுகுடியென்பது, சோழநாட்டில் காவிரிக்கரையில் இருந்ததோர் ஊர். இச்சிறுகுடியில் வாழ்ந்த வேளாளர் தலைவன் இப்பண்ணன். இவன் போராண்மையும் கைவண்மையும் மிகவுடையவன். புலவர் பாடும் புகழ்பெற்ற இவனை மாற்றூர் கிழார் மகனார் கொற்றங்கொற்றனார், கோவூர் கிழார், செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் என்ற சான்றோர்கள் பெரிதும் பாராட்டிப் பாடியிருக்கின்றனர்"[72]

"தனக்கென வாழாப் பிறர்க் குரியாளன்
பண்ணன்"[73]

எனக் கொற்றங்கொற்றனாரும்,

"................வென்வேல்,
இலைநிறம் பெயர வோச்சி, மாற்றோர்
மலைமருள் யானை மண்டம ரொழித்த
கழற்கால் பண்ணன்"[74]

என்று செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனாரும் சிறுகுடிகிழான் பண்ணனைப் புகழ்கின்றனர்.

இப்பண்ணனுக்கும் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்கும் நெருங்கிய நட்புண்டு. இக்கிள்ளி வளவனைக் காணச் சென்ற கோவூர் கிழார் கிள்ளி இரவலர்க்கு வழங்கும் கொடை நலத்தைப் பாராட்டலுற்றுச் சிறுகுடிகிழான் பண்ணன்பால் அவன் கொண்டிருந்த நட்பு

நலத்தையும் உடன் கூட்டி "கைவள் ஈகைப் பண்ணன் சிறுகுடி" (புறநா.70:13) என்று புகழ்கின்றார்.

மேற்குறித்த புகழுக்குரியவனான சிறுகுடிகிழான் பண்ணனைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனும் 'மழைக்காலத்தைக் குறிப்பால் உணர்ந்த எறும்பு தம் முட்டைகளை மேட்டு நிலத்திற்குச் சாரை சாரையாகக் கொண்டு செல்லும். அதைப்போல் சோற்றைக் கொண்ட கையினராய்ப் பக்கம் பக்கமாகச் செல்லும் சுற்றத்தாருடன் கூடிய சிறுவர்களைக் கண்டு கேட்போம். பசி என்னும் நோய்க்கு மருந்தாகத் திகழ்பவன் இல்லம் பக்கமா? தூரமா? தெளிவாகக் கூறுங்கள். எங்கள் வறுமையைத் தீர்க்கின்ற அந்தப் பண்ணன் யான் உயிர் வாழும் நாளையும் சேர்த்து அவர் உயிர் வாழட்டும் என்று புகழ்கின்றார். இதனை,

"யான்வாழும் நாளும் பண்ணன் வாழிய ;

பாணர் காண்கிவன் கடும்பினது இடும்பை ;

............................................................

பசிப்பிணி மருத்துவன் இல்லம்

அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே" (புறநா.173:1-12)

என்ற பாடல் அடிகள் தெளிவுபடுத்துகின்றன. இவ்வரலாற்றுப் பதிவின் வழி, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்கும் குறுநில மன்னனான சிறுகுடிகிழான் பண்ணனுக்கும் இடையே ஓர் இணக்கமான நட்புணர்வு இருந்ததை இப்பாடல் வெளிக்காட்டுகின்றது.

பண்ணனைப் பல புலவர்கள் புகழ்ந்திருப்பதால் பண்ணனுக்கும் புலவர்களுக்குமான இணக்கமான உறவுநிலையினை அறியமுடிகிறது. மூவேந்தர்களைக் காட்டிலும் பண்ணன் மேம்பட்ட நிலையில் இருந்திருக்க வேண்டும்.

**குமணனின் கொடை**

வள்ளல்கள் எனப் பல்லோர் வாழ்த்த வாழ்ந்த பாரி, ஓரி, மலையன், எழினி, பேகன், ஆய், நள்ளி என்ற எழுவர்க்கும் காலத்தால் பிற்பட்ட கொடைவள்ளல் குமணன். வள்ளல்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மலைக்கு உரியவராய் வாழ்ந்ததைப் போன்று குமணனும் 'முதிரம்' எனும் மலைக்கு உரியவனாய் வாழ்ந்தான். "முதிரமலை பழனிமலைத் தொடர்களுள் உள்ளது. இதன் அடியில் குமணமங்கலம் என்னுமொரு சிற்றூருமுண்டு. இந்நாடு உடுமலைப்பேட்டையைத் தன்னகத்தே கொண்டிருந்ததாகும். வள்ளல் பேகன் காலத்தில் ஆவியர் குடிக்குரியதாயிருந்த நாடு, பிற்காலத்தே குமணனுக்குரியதாயிற்று. இக்காலநிலையில் வைத்து நோக்கின், பழனித் தாலுகாவின் தென்மேலைப் பகுதியும் உடுமலைப்பேட்டைத் தாலுகாவின் தென் கீழ்ப் பகுதியும் குமணனுக்குப் பண்டு உரியவாயிருந்தன"[75] என்பர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

இயற்றமிழ் வளர்த்த புலவரும், இசைத்தமிழ் வளர்த்த பாணரும், நாடகத்தமிழ் வளர்த்த கூத்தருமாகிய இம்மூவரும் தமிழ் வளர்க்கும் பொருட்டு நாடோடி வாழ்க்கை வாழ்ந்தனர். முத்தமிழையும் ஊர், ஊராகச் சென்று வளர்த்துவந்த கலைஞர்கள் வறுமையடையும் போது பெருநில வேந்தர்களும், குறுநில மன்னர்களும், வள்ளல்களும், செல்வந்தர்களும் அவர்கள் வறுமை தீர வாரி வாரி வழங்கினர்.

வாரி வாரி வழங்கிய கொடை வள்ளல்களுள் குமணன் குறிப்பிடத்தகுந்தவன். இக்குமணனுக்குத் தம்பி ஒருவன் இருந்தான். அவன் பெயர் இளங்குமணன். தன் அண்ணனுக்குக் கிடைத்த பேரும் புகழும் கண்டு பொறாமை கொண்டான். இப்பொறாமைக்குணம் சிற்றினச் சேர்க்கையால்

பெரிதாக வளர்ந்து இறுதியில் குமணனின் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். நாட்டை இழந்த குமணன் காட்டில் வாழ்ந்துவந்தான். ஒருநாள் பரிசில் வேண்டி வந்த பெருந்தலைச் சாத்தனார் அவனைக் காட்டில் கண்டு பாடினார். பாடிய புலவனுக்குப் பரிசு வழங்கும் நெறியால் தன் வாளை அவர் கையில் கொடுத்துத் தன் தலையைக் கொய்து தம்பி இளங்குமணனிடம் காட்டி வேண்டும் பொருளைப் பரிசாகப் பெற்றுச்செல்க எனக் கூறினான். இதனை,

"பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்

நாடிழந் ததனினும் நனிஇன் னாதுஎன

வாள்தந் தனனே தலைஎனக்கு ஈய" (புறநா.165:10-13)

என்ற பாடல் அடிகள் பறைசாற்றுகின்றன.

மேற்குறித்த வரலாற்றுப் பதிவின் வழி, குமணனின் கொடைத் தன்மையினைப் பெருநில வேந்தர்களின் கொடைத் தன்மையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது குமணன் தான் தலைசிறந்த கொடையாகத் தன் தலையினை வழங்கியிருக்கிறான். வேறு யாரும் இதுபோன்ற கொடையை வழங்கியதாகச் சங்க இலக்கியத்தில் சான்றேதும் இல்லை.

இல்லையென இரந்துவரும் இரவலர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் கொடுக்கும் தமிழர் மரபினைத் தன் உயிர் கொடுத்து நிரூபித்துள்ளான் குமணன்.

## தொகுப்புரை

- சங்க காலத்தில் தமிழகத்தைச் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர்கள் ஆட்சி செய்தனர். இம்மூவேந்தரில் முதன்மைபெறுபவர் சேரர். இச்சேரவேந்தரின் வரலாற்றினை முழுமையாக அறிந்துகொள்ளப் பதிற்றுப்பத்து துணைசெய்கின்றது.

- பதிற்றுப்பத்து பாடிய புலவர்களின் பாடல்களைப் பார்க்கும் பொழுது அவை, எட்டுச் சேர அரசர்களின் வீரச்சிறப்பினை எடுத்துரைப்பதாக உள்ளன. இதன் பின்னணியாகச் சேர அரசர்களின் ஆழ்மனதில் பகை மன்னர்களின் பொன்பொருளைக் கவர்ந்து, நிலங்களை அபகரித்து அல்லது பாழ்ப்படுத்தி அவர்களை அடிமைப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் இருந்திருக்கின்றது என்பதை உய்த்துணரமுடிகிறது.

- பதிற்றுப்பத்தால் அறியலாகும் புலவர்பெருமக்கள்; தாம் அரிய பெரிய பரிசைப் பெற வேண்டுமென எண்ணித் தகுதியில்லாத வேந்தனை ஒருபோதும் பாடுவதில்லை. போர் வீரர்களின் உயிர்காக்கும் மார்புக் கவசமாகவும் மக்களின் நலன் காக்கும் உற்ற வேந்தனாகவும் விளங்கும் நல்லியல்பு கொண்ட வேந்தர்களின் புகழினை மட்டும் புகழ்ந்து பாடிச் சிறப்பித்துள்ளனர் என்பதற்குப் பதிற்றுப்பத்துப் பாக்கள் சான்றுரைக்கின்றன.

- பதிற்றுப்பத்தில் குறுநில மன்னர்களாக இருபதுபேர் சுட்டப்படுகின்றனர். இவர்கள் சேர மன்னர்களோடு பகைமை உணர்வு உடையவர்களாகவும், நட்புணர்வு உடையவர்களாகவும், படைத்தலைவர்களாகவும் விளங்கிய தன்மையை அறியமுடிகின்றது.

- தமிழகமெங்கும் பரவி இருந்த பெருநில வேந்தர்கள், குறுநில மன்னர்கள், பிற குழுத்தலைவர்கள், கடையெழு வள்ளல்கள், புலவர் பெருமக்கள்

போன்றோரின் வரலாறுகள் பற்றிப் பதிவு செய்யப்பெற்ற வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ்கின்றது புறநானூறு.

- வேந்தர்கள், மன்னர்கள், வள்ளல்கள், 178 பேரைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு 157 புலவர் பெருமக்கள் 400 பாடல்களைப் புனைந்துள்ளனர். இந்நானூறு பாடல்களில் 267, 268 ஆகிய இரு பாடல்களும் கிட்டவில்லை. ஏனைய 398 பாடல்களில் 14 பாடல்களுக்கு ஆசிரியர் பெயர் கிட்டவில்லை.

- புறநானூற்றுப் பாடல்கள் பெரும்பான்மை ஆசிரியப்பாவாகவும் சில பாடல்கள் வஞ்சிப்பாவாகவும் அமைந்துள்ளன. இப்பாடல்களில் 2 முதல் 86 வரையுள்ள பாக்கள் மூவேந்தர்களின் மாண்புகள் குறித்துக் கூறுவன. 87 முதல் 181 வரையுள்ள பாக்கள் குறுநில மன்னர்கள், கடையெழு வள்ளல்கள் குறித்துக் கூறுவன. 182 முதல் 195 வரையுள்ள பாக்கள் அறங்களையும், நீதிகளையும் கூறுவன. 196 முதல் 211 வரையுள்ள பாக்கள் பரிசில் குறித்துப் பேசுவன. 212 முதல் 256 வரையுள்ள பாக்கள் வடக்கிருத்தல், இரங்கள் குறித்துப் பேசுவன 257 முதல் 335 வரையுள்ள பாக்கள் உண்டாட்டு, கையறுநிலை, குதிரை மறம், மூதின்முல்லை குறித்துப் பேசுவன. 336 முதல் 354 வரையுள்ள பாக்கள் மகட்பாற் காஞ்சி குறித்துப் பேசுவன. ஏனைய பாக்கள் துறவறம், பெருங்காஞ்சி, மறக்களவழி குறித்துப் பேசுவன.

- சேரர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் புறநானூற்றில் 28 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

- சங்க காலத்தில் பொருந்தில், கிடங்கில் எனும் ஊர்களைப் போல் விளங்கில் எனும் ஊர் இருந்துள்ளது. இவ்வூரில் சேரவேந்தனான மாந்தரஞ்

சேரலுக்கும், சோழ வேந்தனான இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்கும் இடையே போர் நிகழ்ந்துள்ளது.

- ♦ சோழர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் புறநானூற்றில் 74 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.
- ♦ வால்மீகியால் எழுதப்பெற்ற இராமாயணத்தில் பாண்டியர்களின் தலைநகரம் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது.
- ♦ தொன்மை வாய்ந்த பாண்டியர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் புறநானூற்றில் 39 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.
- ♦ எவ்வி என்பானுக்குரிய மிழலைக் கூற்றத்தையும் முதுவேளிர்க்குரிய முத்தூற்றுக் கூற்றத்தையும் வென்று தன் ஆட்சி எல்லைக்குட்பட்ட பகுதியாக இணைத்துக் கொண்டவன் பாண்டியன் நெடுஞ்செழியன்.
- ♦ இல்லையென இரந்து வரும் பாணர்களுக்குப் பொற்றாமரைப் பூவையும், புலவர்களுக்கு யானையையும், அலங்கரிக்கப் பெற்ற தேரினையும் கொடையாக வழங்கக் கூடியவன் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி.
- ♦ ஆளுமை மிக்க குறுநில மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் புறநானூற்றில் 182 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.
- ♦ தொண்டை நாட்டின் உட்பிரிவுகளாகிய இருபத்து நான்கு கோட்டங்களுள் ஆமூர்க் கோட்டமும் ஒன்று.
- ♦ போரவைக்கோவை எதிர்க்கும் அளவிற்கு மல்லன் நெஞ்சுரம் கொண்டவனாகத் திகழ்ந்துள்ளதைப் புறநானூறு சான்று பகர்கின்றது.

- சிறுகுடியென்பது சோழநாட்டில் காவிரிக்கரையில் இருந்ததோர் ஊர். இச்சிறுகுடியில் வாழ்ந்த வேளாளர் தலைவன் பண்ணன். பண்ணனுக்கும் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்கும் நெருங்கிய நட்புணர்வு இருந்துள்ளது.

- பண்ணனைப் பல புலவர்கள் புகழ்ந்திருப்பதால் பண்ணனுக்கும் புலவர்களுக்குமான உறவுநிலை வலுவான நிலையில் இருந்ததையை அறியமுடிகிறது.

- இயற்றமிழ் வளர்த்த புலவரும், இசைத்தமிழ் வளர்த்த பாணரும், நாடகத் தமிழ் வளர்த்த கூத்தருமாகிய இம்மூவரும் தமிழ் வளர்க்கும் பொருட்டு நாடோடி வாழ்க்கை வாழ்ந்தனர். இம்முத்தமிழை ஊர், ஊராகச் சென்று வளர்த்துவந்த கலைஞர்கள் வறுமையடையும் போது பெருநில வேந்தர்களும், குறுநில மன்னர்களும் வள்ளல்களும் செல்வந்தர்களும் கலைஞர்களின் வறுமைதீர வாரி வாரி வழங்கியுள்ளனர்.

## சான்றெண் விளக்கம்


1. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, கலைக்களஞ்சியம் (6ம் தொகுதி), ப.718
2. மு.இராகவையங்கார், சேரவேந்தர் செய்யுட்கோவை (2ம் தொகுதி), ப.190
3. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.183
4. வ.குருநாதன், சங்ககால அரசவரலாறு, ப.75
5. வி.பி.புருஷோத்தம், சங்ககால மன்னர் காலநிலை வரலாறு, ப.142
6. வ.குருநாதன், சங்ககால அரச வரலாறு, ப.84
7. சி.பாலசுப்பிரமணியன், சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள், பக்.40-41
8. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.60
9. மு.இராகவையங்கார், சேரன் செங்குட்டுவன், ப.8
10. மயிலை சீனி.வேங்கடசாமி, சங்ககால வரலாற்று ஆய்வுகள் (முதல் தொகுப்பு), ப.231
11. மயிலை சீனி.வேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப.2
12. வி.பி.புருஷோத்தம், சங்ககால மன்னர் காலநிலை வரலாறு, ப.175
13. மு.இராகவையங்கார், சேரன் செங்குட்டுவன், ப.123
14. மயிலை சீனி.வேங்கடசாமி, துளு நாட்டு வரலாறு, ப.7
15. கா.கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை (தொகுதி - II), ப.10
16. வி.பி.புருஷோத்தம், சங்ககால மன்னர் காலநிலை வரலாறு, ப.230
17. மயிலை சீனி.வேங்கடசாமி, கொங்கு நாட்டு வரலாறு, ப.1
18. வி.பி.புருஷோத்தம், சங்ககால மன்னர் காலநிலை வரலாறு, ப.154
19. இரா.இளங்குமரன், புறநானூறு மூலமும் உரையும், ப.370
20. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் படைப்புகள் கவிதையியல், சமுதாயவியல் நோக்கு, ப.200
21. இரா.நாகசாமி முதலியோர், கல்வெட்டியல், ப.58

22. சாமி.சிதம்பரம், பழந்தமிழர் அரசியல், ப.47

23. இரா.இராமகிருட்டிணன், தகடூர் வரலாறும் பண்பாடும், ப.88

24. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.5

25. எஸ்.கௌமாரீஸ்வரி, திருக்குறள் பரிமேலழகர் உரை, குறள்.776

26. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப.134

27. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள், ப.83

28. புறநானூறு, பாடல்.158

29. அகநானூறு, பாடல்.372




30. கா.கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை (தொ.க.), ப.34

31. இரா.இராமகிருட்டிணன், தகடூர் வரலாறும் பண்பாடும், ப.107

32. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள், ப.99

33. நா.பாலுச்சாமி, வாழ்வியற் களஞ்சியம் (தொ.8), ப.75

34. குழந்தை, குறள் உரைக் களஞ்சியம், ப.56

35. வெள்ளைவாரணர், தொல்காப்பியம், ப.67

36. க.கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.34

37. மொ.அ.துரை அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், ப.363

38. அ.மா.பரிமணம், பதிற்றுப்பத்து, ப.275

39. ராஜ்கௌதமன், பதிற்றுப்பத்து ஐங்குறுநூறு சில அவதானிப்புகள், ப.37

40. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள், காலமும் கருத்தும், ப.26

41. அகநானூறு, பாடல் 346

42. புறநானூறு, பாடல் 179

43. அ.மா.பரிமணம், பதிற்றுப்பத்து, ப.327

44. மொ.அ.துரை அரங்கசாமி, சங்ககால இலக்கியச் சிறப்புப் பெயர்கள், ப.357

45. புறநானூறு, பாடல் 202

46. வ.குருநாதன், சங்ககால அரசவரலாறு, ப.270

47. மேலது, ப.270

48. மேலது, ப.270

49. அ.மா.பரிமணம், பதிற்றுப்பத்து, ப.214

50. அகநானூறு, பாடல் 246

51. மதுரைக்காஞ்சி, பாடல் 55

52. கா.அப்பாத்துரை, 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், ப.147

53. மு.இராகவையங்கார், வேளிர் வரலாறு, ப.1

54. மா.கந்தசாமி, தமிழகத் தொன்மையும் சிறப்பும், ப.16

55. தி.அன்புச்செல்வன், பண்டைத்தமிழரின் அரசமைப்புச் சிந்தனைகள், ப.59

56. ரா.இராகவய்யங்கார், தமிழ்க் குறுநில வேந்தர்கள், ப.29

57. ரா.பி.சேதுப்பிள்ளை, தமிழர் வீரம், ப.7

58. _______________, சோழர் ஆட்சி, ப.110

59. மேலது, பக்.111-112

60. உ.வே.சாமிநாதையர், பதிற்றுப்பத்து மூலமும் உரையும், பா.48

61. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (1-200 பாடல்கள்) பா.9:11

62. மேலது, ப.118

63. _______________, சோழர் ஆட்சி, ப.112

64. ஜே.எம்.சோமசுந்தரம், பாண்டியர் பெருமாட்சி, பக்.23-24

65. அரங்க இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.132

66. மேலது, பக்.121-122

67. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (1-200 பாட்டுக்கள்), ப.25

68. அரங்க இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர்கள், ப.81

*69. ச.மெய்யப்பன், பாரதியார் கவிதைகள், ப.131*

*70. _______________, தமிழ்ப் பேழை, ப.26*

*71. சிறுபாணாற்றுப்படை, பா. அடிகள் 187-188*

*72. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (1-200 பாட்டுக்கள்), ப.372*

*73. அகநானூறு, பா.54:13-14*

*74. மேலது, பா.177:13-16*

*75. . ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு (1-200 பாட்டுக்கள்), ப.333.*

## இயல் நான்கு

# அகப்புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்

பழந்தமிழ்ப் புலவர்பெருமக்களால் பாடப்பெற்று, பல நூற்றாண்டுகள் கழித்துத் தொகுக்கப் பெற்ற நூல் கருவூலம் சங்க இலக்கியம். இச்சங்க இலக்கியத் தொகைநூல்களுள் பரிபாடலும் ஒன்று. இதன் பாடல்கள் 'பரிபாடல்' எனும் ஒருவகைப் பாவினால் இயற்றப்பெற்றதால் இப்பெயர் பெற்றது. "இப்பாவகை பலநூறு வருடங்களுக்கு முன்னதாகவே வழக்கொழிந்துவிட்டன. பிற்காலத்தில் ஆழ்வார் திருநகரி சந்நிதிக் கவிராயர் மரபினர் ஒருவர் தமது பாப்பாவினம் என்ற நூலில் முந்தைய பாடல் முறையைத் தழுவி நான்கு பரிபாடல்களைப் புதியனவாகப் பாடியிருக்கின்றார்"[1] என்பார் கு.அருணாசலக் கவுண்டர். இப்பா பலவகைப் 'பா' வடிவங்களையும் தன்னுள் ஏற்கும் தன்மையுடையது என்பதனைத் தொல்காப்பியர்,

"பரிபா டல்லே தொகைநிலை வகையின்

இது பா என்னும் இயல்நெறி இன்றிப்

பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப"[2]

எனக் குறிப்பிடுகின்றார். 25 முதல் 400 அடிவரையுள்ள பரிபாடல் பொருள் சிறப்பாலும், நுண்மாண் நுழைபுலச் செம்மையாலும் அறிஞர் பெருமக்களால் 'ஓங்கு பரிபாடல்' எனப் பாராட்டப் பெற்றுள்ளது. இவற்றில் திருமால், செவ்வேள் ஆகிய தெய்வ வழிபாட்டுப் பாடல்களும், வையை, மதுரை ஆகிய இயற்கைக் காட்சிப் பாடல்களும் அமைந்துள்ளன. இத்தகு பரிபாடலில் பழந்தமிழர்களின் வாழ்வியல் விழுமியங்களான பழக்க வழக்கங்களும், அறம், பொருள், இன்பம், வீடுபேறுக்கானக் கூறுகளும், இயற்கையின் இயல்பு நலன்களும், காதல் சிறப்பும், வீரச்சிறப்பும், ஆடலும்,

பாடலும், புலமை சான்ற புலவர்பெருமக்களால் பொருள் பொதிந்த கருத்தாக்கங்களாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

தலைச்சங்க காலத்தில் பரிபாடலில் எத்துணை பாடல்கள் இருந்தன என்பது தெரியாது. கடைச்சங்க காலத்தில் 70 பரிபாடல்கள் கிட்டின. கிட்டிய பாடல்களும் முறையான பாதுகாப்பு இன்றி சிதைந்து அடியும் முடியும் இன்றி 22 (திருமால் - 6, செவ்வேள் - 8, வையை - 8) பாடல்கள் மட்டும் எஞ்சின. எஞ்சிய பாக்களை அரிதின் முயன்று உ.வே.சாமிநாதையரவர்கள் 1918 இல் முதன் முதலாகப் பதிப்பித்தார். “பரிபாடல் பிற சங்க நூல்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. பரிபாடல் என்னும் பாடல் வகையால் ஆக்கப்பட்டது மட்டுமன்றிப் பாண்டியர்களையே சிறப்பித்துக் கூறுவதுமாகும். எனவே இதைத் தொகுப்பித்தோன் ஏதாவது ஒரு பாண்டியனாக இருக்கலாம் என்று கருதுவர்”[3] இரா.சாரங்கபாணி.

**பரிபாடல்**

தொகை நூல்களில் ஒன்றான பதிற்றுப்பத்தில் எவ்வாறு சேர வேந்தர்களை முன்னிறுத்திப் பாடப்பெற்றதோ அதைப்போல பரிபாடலில் வையை பாடல்களிலும் மதுரைப் பாடல்களிலும் பாண்டியரை முன்னிறுத்திப் பாடப் பெற்றுள்ளன. பதிற்றுப்பத்தில் சேர வேந்தர்கள் யார் யாருடன் போர் செய்தனர் என்ற வரலாற்றுப் பதிவுகள் இடம் பெற்றிருப்பதைப் போல் பரிபாடலில் பாண்டியர் யார் யாருடன் போர் செய்தனர் என்ற வரலாற்றுப் பதிவுகள் இடம்பெறவில்லை. இருப்பினும் பாண்டியரின் புனைப்பெயர்களைக் கையாண்டு புலவர்பெருமக்கள் போருக்குப் புறப்பட்ட நிகழ்வுகள் பற்றியும், நால்வகைப் படைச் சிறப்புகள் பற்றியும், போர்கள் வெற்றி பற்றியும் உவமையாக ஆங்காங்குப்

பதிவுசெய்துள்ளனர். இவ்வாறு உவமையாகப் பதிவுசெய்த பாண்டியர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகளில் ஏழு இடங்களில் வையை பாடல்களிலும், ஏழு இடங்களில் மதுரைப் பாடல்களிலும், இரண்டு இடங்களில் பரிபாடல் திரட்டிலும் இடம் பெற்றுள்ளன (விபரம் : பின்னிணைப்பு - 9). மேற்குறித்த பதிவுகள் அனைத்தும் பாண்டியனின் வீரம், பாண்டியனின் கொடை எனும் இருபிரிவுகளாகப் பிரித்து விளக்கப் பெற்றுள்ளன.

**பாண்டியரின் வீரம்**

பாண்டியரின் படைவீரத்தினைச் சங்க இலக்கியங்கள் பலபடப் பாராட்டுகின்றன. பரிபாடலில் பதிவு செய்யப்பெற்றுள்ள பாண்டியர் குறித்த பதிவுகள் புற இலக்கியங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ள வரலாற்றுப் பதிவுகள் போல் இல்லை என்றாலும் புற இலக்கியங்களில் காணப்படும் போர்முறையே நிகழ்ந்திருக்க வேண்டும். எனினும் இயல்பாக நேரும் போர்க்களச் சூழல்கள் பரிபாடலில் உவமையாக எடுத்தாளப் பெற்றுள்ளன.

கடல்நீரைக் குடித்த மேகங்கள் மேலே சென்று திரண்டு கருக்கொண்டு மேகமாகி இடியுடன் கூடிய மழையாகப் பொழியும். மலை உச்சியில் பெய்த மழைநீர் அருவிகளாகத் திரண்டு வையை ஆற்றின் வழியாக வருவதைக் கண்ட ஆசிரியர் வெற்றி முரசினை முழங்கிக் கொண்டுப் பகைவர் நாட்டின் மீது படையெடுக்கும் பாண்டியர்தம் படை நீண்ட அணிவகுப்பில் எழுச்சியுடன் செல்லுமிடம் அரியது என நினையாமல், இரவு பகல் பாராமல் இருபொழுதிலும் இடைவிடாது செல்வதைப் போல வையை ஆற்றின் நீரும் இடைவிடாமல் ஓடிவருகின்றது என்று சுவைபடக் கூறுகின்றார். இதனை,

> "இரவுஇருள் பகலாக, இடம்அரிது செலவுஎன்னாது
> வலன்இரங்கு முரசின் தென்னவர் உள்ளிய
> நிலன்உற நிமிர்தானை நெடுநிரை நிவப்புஅன்ன" (பரி.7:5-7)

எனும் பாடல் அடிகள் தெளிவுர விளக்குகின்றன. பாய்ந்துவந்தப் புதுவெள்ளமானது, வையையில் நீராடிக் கொண்டிருக்கும் மகளிரது கையில் அணிந்திருந்த வளையல், தலையணி, உடுத்திய உடை, மேகலை, காஞ்சி போன்றவையும், ஆடவர் அணிந்திருந்த உடை, மோதிரம், தோள்வலயங்கள் போன்றவற்றையும் கவர்ந்து சென்றது; எவ்வாறெனில், பாண்டியனின் படைவெள்ளம் பகைவர் நாட்டுக்குள் புகுந்து அப்பகைவரை வென்று அவர் நாட்டின் பொன் பொருளை எவ்வாறு கவர்ந்து வருவானோ அதைப்போல என ஆற்றின் புதுவெள்ளத்திற்குப் பாண்டியனின் படைவெள்ளத்தை உவமையாக்கிப் பதிவு செய்துள்ளார் ஆசிரியர். இதனை,

> "எல்லாங் கவரும் இயல்பிற்றாய்த் தென்னவன்
> ஒன்னார் உடைபுலம் புக்கற்றால்; மாறுஅட்ட
> தானையான் வையை வனப்பு" (பரி.7:48-50)

எனும் பாடல் அடிகள் விளக்குகின்றன. மகளிரும் ஆடவரும் அணிஅணியாக வையை ஆற்றின் உள்ளே நின்று விளையாடும் காட்சி, பகைவரை வென்று அவர்களது குதிரைகளைக் கவர்ந்து கொள்ளுபவனும் விரைந்து செல்லும் தேரினையும் உடையவனுமான பாண்டியனின் போர்க்களம் போன்றிருந்தது என்பதை,

> "உருகெழு தோற்றம் உரைக்குங்கால், நாளும்
> பொருகளம் போலும் தகைத்தே, பரிகவரும்
> பார்தேரான் வையை யகம்" (பரி.11:59-61)

எனும் பாடல் விளக்குகின்றது. மேற்குறித்த பதிவுகளை நோக்குங்கால் வெற்றி பொருந்திய பாண்டிய வேந்தனின் இயல்பும் அவன் நாட்டில் ஓடும் வையையின் இயல்பும் ஒன்றாக இருப்பதை ஒப்புமை காட்டி ஆசிரியர் விளக்கியிருப்பது இன்புறத்தக்கது. காட்டுவெள்ளத்திற்கு அணைபோட முடியாது என்ற முதுமொழிக்கு இணங்க பாண்டியன் காட்டுவெள்ளத்தைப்

போல் விரைந்து போர்செய்யக் கூடியவன். இவனின் படையை எதிர்த்து பகைவர்கள் நிற்க இயலாது என்பதனை உள்ளுரையாகச் சுட்டியிருப்பது பாண்டியனின் வீரத்தன்மையினைப் பறைசாற்றுகின்றது.

**பாண்டியனின் கொடைத் தன்மை**

"சேர, சோழ, பாண்டியர் என்ற உலக வழக்கிலும், சேர, பாண்டிய, சோழர் என்ற பழநூல் வழக்கிலும், பாண்டியர் முதலிடம் பெறாவிட்டாலும், இவர்களே மிகப் பழைய தமிழ் மன்னராகக் கருதப்படுகின்றனர்"[4] என்பார் சு.குலசேகரன்.

"தென்னாட்டு மதுரையைப் போல வடக்கே யமுனைக் கரையில் ஒரு மதுரை (மதுரா) இருப்பதும், அம்மாநகர் திங்களைக் குறிக்கும் 'மதி' என்ற சொல்லோடு ஒலிப் பொருத்தம் உடைய மது என்ற அசுரனால் அமைக்கப்பட்டதாகப் புராணங்கள் கூறுவதும் நமது ஐயப்பாட்டை அதிகப்படுத்துகின்றன. மேலும், இந்திரனுக்கு உதவிய முசுகுந்தன் ஒரு பூதத்தைப் பெற்றுவந்ததாகவும், தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் அகத்தியர் ஆணைப்படி புகாரில் இந்திரனுக்கு ஒரு விழா எடுத்ததாகவும் மணிமேகலையிற் சொல்லப்படுவதும் 'ஒருவீர்; ஒருவீர்; மிக்காரை ஒறுப்பல் யான்' எனப் பாண்டியன் மாகீர்த்தி தேவாசுரர்களுக்கிடையே சந்து செய்வித்ததாக இறையனார் அகப்பொருள் 35 ஆம் சூத்திரத்தில் அதன் உரை கூறுதலும் கொண்டு, சோழர், பாண்டியர் தேவாசுரர் வாழ்ந்த வடநாட்டுப் பகுதியில் பழங்காலத்தே வதிந்தவராதல் தேறலாம். இந்திரனை வென்றவன் எனவும், தேவரார மார்பன் எனவும், பாண்டியனைச் சிலப்பதிகாரம் கூறுவதும், தேவகண ஆரியர்களுக்கும், பாண்டியர்க்கும் இருந்த பகைமைக்குச் சான்று. 'பஞ்சவன்' என்ற பாண்டியரின் பெயர் இவ்வரசர்கள் ஒரு காலத்துப் பஞ்ச நதி பாயும் நாட்டில்

வதிந்ததைக் குறிப்பதுமாகலாம். வேதங்களில் ஆரியர்களின் பகை அரசாகத் தெரியும் 'ஹர்யூபியா' ஆக நம்பப்படும் (பஞ்சாப் மாநிலத்திய) ஹரப்பா அரசு பாண்டியர்களுடையதே ஆகக்கூடும். 'பஞ்ச நதி பாயும் பழனத் திருநாடு எங்கள் நாடே' என்று ஒரு கவிஞன் பாடியது பொருள் பொதிந்த சொல்லே ஆகும். "மச்ச புராணத்தில் பிரளயத்தின் போது ஒரு பெரிய மீனால் காப்பாற்றப்பட்டவனாகச் சொல்லப்பட்டவனை பாகவத புராணம் ஒரு பாண்டியன் போலவே குறிப்பிடுகின்றது. இக்காரணம் பற்றி அறிஞர் புருஷோத்தம்லால் பார்க்கவா"[5] பாகவதத்தையே பாண்டி நாட்டினரால் செய்யப்பட்டதாகக் கருதுகிறார். பாண்டியர்களின் இலச்சினை மீன் ஆவதற்கும், இக்கதைக்கும் தொடர்பேதும் இருக்கலாமோ"[6] எனச் சுட்டுகின்றார் சு.குலசேகரன்.

இத்தகு தொன்மை வாய்ந்த பாண்டியர்கள் பகைவர்களை வென்று அவர் நாட்டுப் பொன் பொருளைக் கவர்ந்து வருதலை மட்டும் தொழிலாகக் கொள்ளவில்லை. வறுமையால் இரந்துவரும் புலவர்களுக்கும் பாணர்களுக்கும், கூத்தர்களுக்கும் பொருளை வாரி வழங்கும் கொடைத்தன்மை உடையவராகவும் விளங்கியுள்ளனர் என்பதை,

"இலம்படு புலவர் ஏற்றகை ஞெமரப்
பொலஞ்சொரி வழுதியின் புனலிறை பரப்பி" (பரி.10:126-127)

என்ற பாடல் விளக்குகின்றது.

"நீர்இன்று அமையாது உலகெனின் யாயர்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு"[7]

எனும் குறள் மழையின் சிறப்பைக் கூறும். மழையினால் வையை ஆற்றில் நீர்பெருகி வருவதை ஆற்றின் கரையில் நின்று கண்டோர், வாரி வாரி வழங்கும் வள்ளல் தன்மை மிக்கப் பாண்டியனது கொடைத்தன்மை போன்று

வையை நீர் சந்தனமரம், தயிர் போன்ற நுரை, மலர், கனி, பொன், மணி முதலான பிறபொருள்களையும் வாரிக் கொண்டுவந்து கரையில் வீசுகின்றது என்பதை,

"கரையே கைவன் தோன்றல் ஈகைபோன்ம்என,

மைபடு சிலம்பின் கறியொடும், சாந்தொடும்,

நெய்குடை தயிரின் நுரையொடும், பிறவொடும்" (பரி.16:1-3)

எனும் பாடல், வாரி வழங்கக்கூடிய பாண்டியனின் கொடைத்தன்மைக்கு வையை நீரில் வாரிக் கொண்டுவரும் பொருள்கள் உவமையாக்கப் பெற்றுள்ளன.

## தொகுப்புரை

- தொகைநூல் எட்டனுள் அகப்புற இலக்கியமாகக் கருதப்பெறுவது பரிபாடல்.
- 'பரிபாடல்' எனும் ஒருவகைப் பாவினால் இயற்றப்பெற்றதால் பரிபாடல் எனும் பெயர் பெற்றது.
- 'ஓங்கு பரிபாடல்' என்று சான்றோர் பெருமக்களால் பாராட்டப் பெற்றது.
- திருமால், செவ்வேள் ஆகிய தெய்வ வழிபாட்டுப் பாடல்களும் வையை, மதுரை ஆகிய இயற்கைக் காட்சிப் பாடல்களையும் மையப் பொருள்களாகக் கொண்டுள்ளது.
- தலைச் சங்க காலத்தில் பரிபாடலில் எத்துணைப் பாடல்கள் இருந்தன என்பது தெரியவில்லை. கடைச்சங்க காலத்தில் 70 பாடல்கள் கிட்டின. கிட்டிய பாடல்களுக்கு முறையான பாதுகாப்பு இன்றி சிதைந்து அடியும் முடியும் குறைந்து 22 பாடல்கள் மட்டும் எஞ்சியுள்ளன.
- பரிபாடலை உ.வே.சாமிநாதையரவர்கள் 1918 இல் முதல் முதலாகப் பதிப்பித்தார்.
- பதிற்றுப்பத்து எவ்வாறு சேரவேந்தர்களை முன்னிறுத்திப் பாடப்பெற்றதோ அதைப்போல பரிபாடல் வையைப் பாடல்களிலும், மதுரைப் பாடல்களிலும் பாண்டியரை முன்னிறுத்திப் பாடப் பெற்றுள்ளது.
- பாண்டியர் யார் யாருடன் போர் செய்தனர் என்ற வரலாற்றுப் பதிவுகள் இடம்பெறவில்லை. புனைப் பெயரைக்கொண்டு போருக்குப் புறப்பட்ட நிகழ்வு பற்றியும், படையின் சிறப்பு பற்றியும், வெற்றி பற்றியும் உவமையாகப் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

- பரிபாடலில் பாண்டியர் குறித்த பதிவுகள் ஏழு இடங்களில் வையை பாடல்களிலும், ஏழு இடங்களில் மதுரைப் பாடல்களிலும், இரண்டு இடங்களில் பரி. திரட்டிலும் இடம் பெற்றுள்ளன.
- வையை ஆற்றில் வரக்கூடிய புதுவெள்ள நீர் எவ்வாறு இரவு பகல் பாராமல் செல்லுமோ அதைப்போல பாண்டியனின் படை பகைவரை வெல்லுவதற்கு இரவுபகல் பாராமல் செல்லுகின்றது.
- வையை ஆற்றில் நீராடிக்கொண்டிருக்கும் மகளிர், ஆடவர் அணிகலன்களை எவ்வாறு பரித்துக்கொண்டு வருமோ அதைப்போல பாண்டியனின் படைவெள்ளம் பகைவர் நாட்டுக்குள் புகுந்து அப்பகைவரை வென்று அவர்நாட்டு பொன் பொருளை கவர்ந்து வரும்.
- பாண்டியனின் கொடைத் தன்மைக்கு வையை நீரில் வாரிக்கொண்டு வரும் பொருள்கள் உவமையாக்கப் பெற்றுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. பேராசிரியர் ஐவர் (கு.அருணாசலக்கவுண்டர்), பரிபாடல் சொற்பொழிவுகள், ப.9

2. தொல்காப்பியம், பொருளதிகாரம், பா.1377

3. இரா.சாரங்கபாணி, பரிபாடல் திறன், ப.137

4. சு.குலசேகரன், பழந்தமிழின் புதிய பரிமாணங்கள், ப.60

5. C.Sivaramamurthy, India in the vedic Age, P.61

6. சு.குலசேகரன், பழந்தமிழின் புதிய பரிமாணங்கள், பக்.61-62

7. திருக்குறள் 20.

# இயல் ஐந்து
# வரலாற்றுப் பதிவுகள் ஒரு மதிப்பீடு

சங்ககால வாழ்க்கை நெறிகள் அகம், புறம் எனும் இரு பகுப்பினுள் அடங்குகின்றன. ஒரு நாணயத்தின் இரு பக்கங்களைப் போல் அமைந்த சங்க அகப்பாடல்களும் புறப்பாடல்களும் சங்ககால மூவேந்தர்களின் வரலாற்றினையும் குறுநில மன்னர்களின் வரலாற்றினையும் ஒருங்கே விளக்குவனவாய் அமைந்துள்ளன. இவ்வரலாற்றுப் பதிவுகள் அக இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள், புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள், அகப்புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள் எனும் முப்பகுதிகளாகப் பகுக்கப் பெற்று, இப்பதிவுகளின் வழி மூவேந்தர்களுக்கும் குறுநில மன்னர்களுக்குமான உறவுநிலை, மூவேந்தர்களுக்கும் புலவர்களுக்குமான உறவுநிலை, குறுநில மன்னர்களுக்கும் புலவர்களுக்குமான உறவுநிலை என்ற அடிப்படையில் மதிப்பீடு செய்யும் முகமாக இவ்வியல் அமைகிறது.

### அக இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்

தொகைநூல் அக இலக்கியத்தில் 372 இடங்களில் வரலாற்று நிகழ்வுகள் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. அவ்வகையில் நற்றிணையில் 67 இடங்களில் வரலாற்றுப் பதிவுகள் பதிவுசெய்யப்பெற்றுள்ளமையினைக் காணமுடிகிறது. அவை முறையே சேரர் குறித்து ஏழு இடங்களிலும் சோழர் குறித்து 11 இடங்களிலும் பாண்டியர் குறித்துப் பத்து இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்து 39 இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

குறுந்தொகையில் 31 இடங்களில் வரலாற்று நிகழ்வுகள் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. அவை முறையே சேரர் குறித்து மூன்று இடங்களிலும் சோழர்

குறித்து ஓர் இடத்திலும் பாண்டியர் குறித்து ஓர் இடத்திலும் குறுநில மன்னர்கள் குறித்து 26 இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

ஐங்குறுநூற்றில் 18 இடங்களில் வரலாற்று நிகழ்வுகள் பதிவு செய்யப் பெற்றுள்ளன. அவை முறையே சேரர் குறித்து ஓர் இடத்திலும் சோழர் குறித்து இரண்டு இடங்களிலும் பாண்டியர் குறித்து மூன்று இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்து 12 இடங்களிலும் வரலாறு காணப்பெறுகின்றன.

கலித்தொகையில் மூன்று இடங்களில் பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

அகநானூற்றில் 253 இடங்களில் வரலாற்று நிகழ்வுகள் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. அவை முறையே சேரர் குறித்து 32 இடங்களிலும் சோழர் குறித்து 27 இடங்களிலும் பாண்டியர் குறித்து 29 இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்து 165 இடங்களிலும் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

நற்றிணையில் 67 இடங்களிலும் குறுந்தொகையில் 31 இடங்களிலும் ஐங்குறுநூற்றில் 18 இடங்களிலும் கலித்தொகையில் மூன்று இடங்களிலும் அகநானூற்றில் 253 இடங்களிலும் வரலாற்று நிகழ்வுகள் பதிவு செய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகளின் கூட்டுத்தொகை மொத்தம் 372. இவை எட்டுத்தொகையில் உள்ள அக இலக்கியத்தில் காணலாகும் ஒட்டுமொத்த வரலாற்றுப் பதிவுகளாகும்.

மேற்குறிப்பிட்ட அக இலக்கிய வரலாற்றுப் பதிவுகள் 372 இல் சேரர் குறித்து 43 இடங்களிலும் சோழர் குறித்து 41 இடங்களிலும் பாண்டியர் குறித்து 46 இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்து 242 இடங்களிலும் வரலாறு பதிவு செய்யப் பெற்றுள்ளன.

## புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்

புறப்பொருள் குறித்துப் பேசக்கூடிய தொகைநூல் இரண்டனுள் பதிற்றுப்பத்து முதல்நிலையிலும், புறநானூறு இரண்டாம் நிலையிலும் வைத்து நோக்கப்பெறுகின்றன. இவ்வாறு அமைப்பதற்குக் காரணம் 'நற்றிணை நல்லகுறுந்தொகை...' எனும் பழம்பெரும் பாட்டில், புறநூல் வரிசையில் பதிற்றுப்பத்து முதலாவதாகவும் புறநானூறு இரண்டாவதாகவும் அமைக்கப் பெற்றுள்ள தற்கேற்ப ஆய்வாளர் பலராலும் இவ்வரிசை முறையே பின்பற்றப்பட்டு வந்துள்ளது. இவ் அமைப்பு முறையே இங்கும் கையாளப் பெறுகிறது.

பதிற்றுப்பத்தில் 123 இடங்களில் வரலாற்று நிகழ்வுகள் பதிவு செய்யப் பெற்றுள்ளன. முறையே சேரர் குறித்து 84 இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்து 39 இடங்களிலும் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

புறநானூற்றில் 323 இடங்களில் வரலாற்று நிகழ்வுகள் பதிவுசெய்யப் பெற்றுள்ன. முறையே சேரர் குறித்து 28 இடங்களிலும் சோழர் குறித்து 74 இடங்களிலும் பாண்டியர் குறித்து 39 இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்து 182 இடங்களிலும் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

புற இலக்கியத்தில் ஒன்றான பதிற்றுப்பத்தில் 123 இடங்களிலும் புறநானூற்றில் 323 இடங்களிலும் வரலாற்றுப் பதிவுகள் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் மொத்தம் 446. இப்புற இலக்கிய வரலாற்றுப் பதிவில் சேரர் குறித்து 112 இடங்களிலும் சோழர் குறித்து 74 இடங்களிலும் பாண்டியர் குறித்து 39 இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்து 221 இடங்களிலும் வரலாறு பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

**அகப்புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்**

தொகை நூலின் அகப்புற இலக்கியமாகக் கருதப்பெறும் பரிபாடலில் பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 16 இடங்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகள் முறையே வையை குறித்த பாடல்களில் ஏழு இடங்களிலும் மதுரை குறித்த பாடல்களில் ஏழு இடங்களிலும் பரிபாடல் திரட்டில் இரண்டு இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.

மேற்குறிப்பிட்ட மூன்று பகுப்பின் வரலாற்றுப் பதிவுகளையும் நன்கு ஆராயும்கால் எட்டுத்தொகை அக இலக்கியத்தில் குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் முதல்நிலையிலும் பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் இரண்டாம் நிலையிலும், சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் மூன்றாம் நிலையிலும் சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் நான்காம் நிலையிலும் நிலைபெறுகின்றன.

எடடுததொகைப் புற இலக்கிய வரலாற்றுப் பதிவுகளை ஆராயும்கால் குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் முதல்நிலையிலும் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் இரண்டாம் நலையிலும் சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் மூன்றாம் நிலையிலும் பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் நான்காம் அங்கம் பெறுகின்றன.

அகப்புற இலக்கியத்தில் பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் முதன்மை பெறுகின்றன.

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களின் ஒட்டுமொத்த வரலாற்றுப் பதிவுகள் 834. இப்பதிவுகள் முறையே எட்டுத்தொகையில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 155 இடங்களிலும் சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 115 இடங்களிலும் பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 101

இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 463 இடங்களிலும் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

மேற்குறிப்பிட்ட எட்டுத்தொகை நூல்களின் வரலாற்றுப் பதிவுகளை ஒட்டுமொத்தமாக ஆராயுங்கால் குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப்பதிவுகள் முதல் இடத்தினைப் பெறுகின்றன. சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் இரண்டாம் இடத்தினைப் பெறுகின்றன. சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் மூன்றாம் இடத்தினைப் பெறுகின்றன. பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் நான்காம் இடத்தினைப் பெறுகின்றன.

தொகை நூல்களில் பதிவு செய்யப்பெற்றுள்ள சேர மன்னர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவுகளில் எந்தச் சேரமன்னர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் அதிகமாக பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இதே போல் சோழ மன்னர்களில் எந்தச் சோழ மன்னர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் அதிகமாக பதிவுசெய்யப் பெற்றுள்ளன. பாண்டிய மன்னர்களில் எந்தப் பாண்டிய மன்னர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் அதிகமாக பதிவுசெய்யப் பெற்றுள்ளன. எனக் காண இயலவில்லை. காரணம் சங்கப் புலவர் பெருமக்கள் தாங்கள் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்த வரலாற்று நிகழ்வுகளை அம்மன்னர்களின் இயற்பெயர் அல்லது புனை பெயர் மட்டும் கொண்டுப் பதிவு செய்யப்பெறவில்லை, சில பதிவுகள் பொதுப் பெயரில் அதாவது சேர, வேந்தே, சோழர், கோமான், பாண்டியர் என்று பதிவு செய்யப் பெற்றிருப்பதால் இம் மன்னர்களின் இயற்பெயர் என்னவென்று தெரியவில்லை. ஆகையால் தொகை நூல்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ள வரலாற்றுப் பதிவுகளில் எந்த மன்னர் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் அதிகமாக பதிவு செய்யப் பெற்றுள்ளன என்று கூற இயலவில்லை.

இனக்குழுச் சமுதாயத்தின் பொதுமைப் பண்புகள் மறைந்து நிலவுடைமைச் சமுதாயத்தின் தனியுடைமைப் பண்புகள் வளர்ந்து, நிலவுடைமைப் பாதுகாப்பிற்கான அரசு எனும் அமைப்பும், பல்வேறுபட்ட தொழில் பிரிவினரும், வருணமும், வர்க்கமும் உருவான சமுதாயச் சூழலில் அரசின் நலன்களைப் பாதுகாப்பதற்கு உரியவராக அந்தணர்கள் இருந்ததைப் போல் அரசனின் சமுதாய உறவுகளை நிலைநிறுத்துபவர்களாகப் புலவர்கள் இருந்துள்ளனர். அரசர்களுக்குள் பல்வித வேறுபாடுகள், மனநிலைகள், உடைமை வேறுபாடுகள், வேறுபட்ட சமுதாய உறவுகள் இருந்ததைப் போல் புலவர்களுக்குள்ளும் வெவ்வேறுபட்ட உறவு நிலைகள் இருந்துள்ளன. எல்லாப் புலவர்களையும் அரசர்கள் ஒத்த நிலையில் கருதவில்லை. அதே போல் எல்லா அரசர்களையும் புலவர்கள் ஒத்த கருத்துநிலையில் பாடவில்லை என்பதை மூவேந்தர்களுக்கும் குறுநில மன்னர்களுக்குமான உறவுநிலை, மூவேந்தர்களுக்கும் புலவர்களுக்குமான உறவுநிலை, குறுநில மன்னர்களுக்கும் புலவர்களுக்குமான உறவுநிலை எனும் முப்பகுப்பின் வழி அறியலாகும் மதிப்பீடுகளைக் கீழ்வருமாறு காணலாம்.

### மூவேந்தர்களுக்கும் குறுநில மன்னர்களுக்குமான உறவுநிலை

சங்க காலத்தில் மூவேந்தர்களுக்கு எவ்வகைப்பட்ட மதிப்பும், பெருமையும் வழங்கப் பெற்றிருந்ததோ அதே அளவிற்கு மதிப்பும், பெருமையும் உடையவர்கள் குறுநில மன்னர்கள். இக்குறுநில மன்னர்களுக்கும் மூவேந்தர்களுக்கும் இடையே நட்பு, பகை என்ற இருவேறுபட்ட கருத்துநிலை நிலவியதை சங்க இலக்கியம் சான்றுபகர்கின்றன.

### நட்பு

மூவேந்தர்களை எதிர்க்கும் படைவலிமை இல்லாத குறுநில மன்னர்கள் மூவேந்தர்களில் ஒருவரோடு நட்புரிமை கொண்டு

அவ்வேந்தனின் ஆட்சிக்குக் கீழ் தன் குறுகிய எல்லையை அல்லது மலையை ஆண்டுவந்துள்ளனர். சில குறுநில மன்னர்கள் மூவேந்தர்களில் ஒருவரின் படையில் படைத்தளபதியாக தலைமைப் பொறுப்பு ஏற்று, பிற மன்னர்களை எதிர்த்து வெற்றியைத் தேடித் தரும் நண்பர்களாக இருந்துள்ளனர். அந்த வகையில் காரி எனும் குறுநிலமன்னன் சேரர்க்கு உதவியாய்ப் போரிட்டு ஓரியைக் கொன்று கொல்லிமலையைச் சேரர்க்குக் கொடுத்தான் என்பதை,

"முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க்கு ஈத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (புறநா.209:12-15)

என்று புறநானூற்றுப் பாடலும்

'கொல்லிப் பொருந கொடித்தேர்ப் பொறைய" (பதிற்.73:15)

என்று பதிற்றுப்பத்துப் பாடலும் சான்று பகர்கின்றன.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலுக்கு உதவியாக வெளியன் வேண்மான் ஆய் எயினன் எனும் குறுநில மன்னன் நன்னன் மேல் படையெடுத்துச் சென்றான். நன்னனின் படைத்தலைவன் மிஞிலி என்பவனோடு பாழி எனும் இடத்தில் போர் செய்து அந்த இடத்திலேயே உயிர் துறந்தான் ஆய் எயினன். என்பதை,

"வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்
அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
இழையணி யானை இயல்தேர் மிஞிலியொடு
நண்பகல் உற்ற செருவிற் புண்கூர்ந்து
ஒள்வாள் மயங்கமர் வீழ்ந்தென" (அகநா.208:5-9)

என்ற வரிகள் சான்று பகர்கின்றன. இவ்வாறான பதிவுகள் சங்க இலக்கியத்தில்

ஆங்காங்கு மட்டும் இடம் பெற்றுள்ளன. ஏனெனில் குறுநில மன்னர்கள் மூவேந்தர்களுக்கு அடங்கி நட்பாக இருந்ததைவிட அடங்காமல் பகைமை உணர்வு கொண்டு இருந்ததே அதிகம்.

**பகை**

மூவேந்தர்கள் நெய்தல்நிலப் பகுதியையும் மருதநிலப் பகுதியையும் அடிப்படையாகக் கொண்டு ஆண்டுள்ளனர். இயற்கை வளம்மிகுந்த மலைப்பகுதிகளும் பொருளாதாரத்திற்கு அடிப்படையாய் அமையும் நிலப்பகுதிகளும் மூவேந்தர்களின் ஆட்சிக்கு உட்பட்டதாய் இருந்துள்ளன.

வளம் மிகுந்த நிலப்பகுதியையும் மலைப்பகுதியையும் ஆட்சி செய்த குறுநில மன்னர்களின் மேல் மூவேந்தர்கள் படையெடுத்துச் சென்று தோற்கடித்து, அடிமைப்படுத்தி அவர்களின் செல்வங்களைக் கவர்ந்து தங்களுடைய ஆளுமையினை நிலைநிறுத்தியுள்ளனர். அந்த வகையில் சேரனால் பாரியின் பறம்புமலை முற்றுகையிடப் பெற்று கவரப்பட்டதைக் கபிலரின் பாடல்கள் (புறநா.109, 110) சான்று பகர்கின்றன.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலும் அவன் தம்பி சேரன் செங்குட்டுவனும் இளையதம்பி ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் துளுநாட்டின் மீது படையெடுத்துச் சென்று குறுநில மன்னன் நன்னனையும் அவன் படைத்தளபதியாகிய மிஞிலியையும் கடம்பின் பெருவாயில் எனும் இடத்தில் போர் செய்து கொன்றனர். நன்னன் இறந்தபிறகு அவன் நாடான துளுநாட்டையும், பூழிநாட்டையும் தன் ஆட்சியின் கீழ் இணைத்துக் கொண்டான் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்பதை,

"ஊழின் ஆகிய உயர்பெருஞ் சிறப்பிற்
பூழிநாட்டைப் படை யெடுத்துத் தழீஇ

உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை

நிலைச் செருவின் ஆற்றலை யழித்துஅவன்

பொன்படு வாகை முழுமுதல் தடிந்து" (பதிற்.பதி.4:5-9)

என்ற வரிகள் சான்று பகர்கின்றன. நார்முடிச்சேரலின் தம்பியாகிய சேரன் செங்குட்டுவன் இப்போரில் துளுநாட்டின் கடற்கரைப் பகுதியில் இருந்த வியலூர், கொடுகூர் என்னும் ஊர்களையும் கைப்பற்றிக் கொண்டான் என்பதை,

"உறுபுலி யன்ன வயவர் வீழச்

சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி

அக்கரை நண்ணிக் கொடுகூர் எறிந்து" (பதிற்.பதி.5:10-12)

என்ற பாடல் விளக்குகின்றது.

மேற்குறித்த வரலாற்றுப் பதிவுகளை நோக்குங்கால் குறுநில மன்னர்கள் மூவேந்தர்களோடு நட்புணர்வோடு இருந்ததைக் காட்டிலும் பகைமை உணர்வுதான் மேலோங்கி இருந்துள்ளது என்பது தெளிவாகின்றது.

**மூவேந்தர்களுக்கும் புலவர்களுக்குமான உறவுநிலை**

பண்டைய கிரேக்க, ஜெர்மானிய, எகிப்திய, சமூகங்களிலே அரசு உருப்பெற்ற வீரயுகத்தில் புலவர்கள் மன்னர்குடைநிழலில் ஒதுங்கியதைப் போல் தமிழகத்தில் மூவேந்தர்களின் குடைநிழலுக்குள்ளும் குறுநில மன்னர்களின் குடைநிழலுக்குள்ளும் புலவர்பெருமக்கள் அடைக்களமாயினர். இத்தகைய புலவர் பெருமக்கள் சங்க காலத்தில் மூவேந்தர்களோடு கொண்டிருந்த உறவு நிலை எத்தகையது என்பதை மேற்கணடறியப் பெற்ற எட்டுத்தொகை வரலாற்றுப் பதிவுகளின் வழி காணலாம்.

இல்லையென இரந்துவரும் இரவலர்களை வரவேற்று, அவர்களுக்கு விருந்தோம்பி, கொடை கொடுத்தல் சங்ககால விழுமியங்களில் ஒன்றாக இருந்துவந்தது. இந்தப் பொது விழுமியம் வேந்தரின் உடைமைச் சமுதாயத்தில் மாற்றம் பெற்று. 'வரிசை அறிதல்' எனும் பண்பு மன்னர்களிடம் வலியுறுத்தப் பெற்றது. இவ்வரிசை அறிதல் எனும் சொல் போர்ச் சூழலில் முறைமை எனும் பொருண்மையிலும், கொடைச் சூழலில் தகுதி எனும் பொருண்மையிலும் கையாளப்பெற்றுள்ளது.

சோழன் நெடுங்கிள்ளியிடம் கோவூர்கிழார் தகுதிக்கேற்பக் கொடை கொடுக்க வேண்டிய இயல்பைக் கற்றுக்கொள் என வலியுறுத்துவதை,

"வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை" (புறநா.47:6)

என்ற வரி விளக்குகின்றது. இவ்வரியின் வழி மூவேந்தர்கள் புலவர்களின் தகுதியறிந்து கொடை கொடுக்க வில்லை என்பதைச் சுட்டிக் காட்டுவதாக மேற்குறித்த பதிவு விளக்குகின்றது.

கபிலர் பாரியைப் பற்றி பாடுகையில் அறிவில்லாதவர்க்கும் பொருள் கொடுக்கக் கூடியவன் (புறநா.106) என்று புகழ்கின்றார். அந்த வகையில் மூவேந்தர்கள் வலியுறுத்திய வரிசை அறிதல் எனும் செயலால் புறந்தள்ளப்பட்ட புலவர்கள் வறுமை நிலைக்கு ஆட்பட்டதால் குறுநில மன்னர்களின் கொடைப்பண்பினை உயர்த்தியும் வேந்தர்களின் கொடைப் பண்பினைத் தாழ்த்தியும் பேசுவதாகச் சுட்டுவர் பெ.மாதையன் (2004:113).

நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியிடம் ஊன்பொதி பசுங்குடையார் இன்னும் எமக்குப் பரிசில் வேண்டும் என என்னைப் போன்றோர் பரிசில் கேட்டால் முன்பே பெற்றுவிட்டாய் என மறுக்காதே. இரந்துவரும் புலவரைப் பாதுகாப்பது உன் கடமையாகக் கொள் (புறநா.203)

என அறிவுறுத்துகிறார். அன்பு மாறிப்போன அறன் இல்லாத பார்வையோடு கூடிய உம்மைப் போன்றவர் அருள் பண்பு மாறுபட்டவர்களானால் எம்மைப் போன்ற இரவலர் இவ்வுலகத்தில் இனி பிறக்கமாட்டார் (புறநா.214) எனச் சேரமான் குடக்கோச் சேரல் இரும்பொறையிடம் பெருங்குன்றூர் கிழார் அறிவுறுத்துகின்றார். கொடுக்க இயலாததை இயலும் என்பதும் இயலுவதை இல்லை என்று மறுத்தலும் பரிசிலரை வாட்டுவதோடு அவை பாதுகாப்போரின் புகழ் குறையும் வாயில்கள் எம் குடியில் உள்ளோர் முன்பு எவரும் காணாத இயல்பு இது (புறநா.196) என ஆவூர்மூலங்கிழார். பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனிடம் கூறுவதும் கொடைப்பண்பில் ஏற்பட்ட மாற்றத்தைக் காட்டுவனவாய் உள்ளன.

'ஈயென இரத்தல் இழிந்தது ; ஈயேன் என்பது அதைவிடவும் இழிந்தது' என ஈயாமையின் இழிவு காட்டப்பெற்றுள்ளது. அத்துடன் பெருஞ் செல்வத்திற்குரிய உடைமையாளர்களாய் உயர்ந்த வேந்தரின் செல்வம் தாகத்தைத் தீர்காத கடலுக்கும், இருப்பதைப் பலருக்கும் அளிந்து வரும் வள்ளல்களின் செல்வம் சேறுடன் கலங்கியிருந்தாலும் நீர் உண்ணும் துறைகள் பலவற்றையும் உடைய நன்னீர் நீர்நிலைக்கும் உவமையாய்க் கையாளப் பெற்றுள்ளது.

மேற்கண்டறியப்பெற்ற வரலாற்றுப் பதிவுகளின் வழி மூவேந்தர்களுக்கும் புலவர்களுக்கும் இடையே இருந்த தொடர்பு குறுநில மன்னர்களின் வரலாற்றுப் பதிவினை நோக்க குறைவாகவே பதிவுசெய்யப் பெற்றுள்ளது. இப்பதிவுகள் மூவேந்தர்களுக்கும் புலவர்களுக்கும் தொடர்பு இருந்ததைக் காட்டுகின்றதே தவிர இருவருக்கும் ஓர் இணக்கமான உறவுநிலை நிலவி இருந்ததாக பதிவுகள் சுட்டவில்லை.

**குறுநில மன்னர்களுக்கும் புலவர்களுக்குமான உறவுநிலை**

விருந்தோம்பலும் கொடையும் வேறு பிற அரசர்களிடம் ஆங்காங்குக் காணப்பட்டாலும் சிறப்பாக குறுநில மன்னர்களிடம் இப்பண்பு மேலோங்கியிருந்தது. விருந்து பெறவேண்டி நடுகல்லை வழிபட்ட குறுநிலத் தலைவியின் பண்பு இதற்குச் சான்று (புறநா.306) அடுத்த நிலையில் கொடைப் பண்பு கடையெழு வள்ளல்களிடமும் குறுநில மன்னர்களிடமும் மிக்கிருந்தது. அதியமானின் சிறப்பைப் பாடும் ஔவையார்,

"அருந்தலை அரும்பாணர் அகல்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல்நுண் தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்று வீழ்ந் தன்றுஅவன்
அருநிறத் தியங்கிய வேலே;
ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ;
இனிப் பாடுநரும் இல்லை பாடுநர்க்கொன்று ஈகுநருமில்லை
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்
சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்று
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே" (புறநா.235:10-20)

என அதியமானின் இறப்பைப் பாணர், இரப்போர், புலவர் ஆகியோரின் வாழ்வியலைக் காட்டியுள்ளார். பிறர்க்கு ஈயாமல் இறந்துபடும் உயிர்கள் இவ்வுலகத்தில் உள்ளனர் எனப் பாடுகின்றார்.

குமணனிடம் பரிசில் வேண்டிச் சென்ற பெருஞ்சித்திரனார் கடையெழு வள்ளல்கள் எழுவரும் இறந்தபின் இரந்து வருபவர்களின் துன்பத்தைத் தீர்ப்பவன் நீ என்று உன்னிடம் வந்தேன் (புறநா.158) எனப்

பாடியுள்ளார். இக்கொடைப் பண்பு குமணனிடம் தலையாய பாண்டாய் இருந்ததை மேற்சுட்டிய பாடல் தெளிவுபடுத்துகின்றது.

"அலத்தற் காலை ஆயினும்

புரத்தல் வல்லன் வாழ்கவன் தாளே" (புறநா.103:11-12)

என அதியனும்

"முந்நூ ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு

முந்நூ ஊரும் பரிசிலர் பெற்றனர்" (புறநா.110:3-4)

எனவும், மழைபோல் உலகைப் பாதுகாப்பவன் எனப் பாரியும், நின் மனைவியது தோளைத் தவிர உனக்கென எதுவும் இல்லாதவன் (புறநா.122) எனக் காரியும், சான்றோர் சொல்லியபடி நெறிவழிப்பட்டது. அவனது கொடைப் பண்பு (புறநா.134) என ஆய்அண்டிரனையும், கொடுத்து ஓம்புதலைத் தலையாயக் கடமையாகக் கொண்டவன் (புறநா.149) என நள்ளியும் வரையறை இல்ல வள்ளல் தன்மை உடையவன் (புறநா.152) என ஓரியும்,

"எத்துணை ஆயினும் ஈத்தல் நன்றென

மறுமை நோக்கின்றோ அன்றே

பிறர், வறுமை நோக்கின்று அவன் கைவண்மையே"

(புறநா.141:13-15)

என மறுமைப் பயன் கருதாமல் பிறர் வறுமையைப் போக்குதலை அடிப்படை நோக்கமாய்க் கொண்டது அவன் கொடைப் பண்பு எனப் பேகனும் புகழப்பட்டுள்ளனர். வீரப் பண்பைவிட இவர்களின் கொடைப் பண்பே மிகுதியாய்ப் பாடப்பெற்றுள்ளது. மேலும் வேந்தர் சமுதாயத்தைச் சேர்ந்த சோழன் குராப்பள்ளித் துஞ்சிய திருமாவளவனை (புறநா.197) இகழ்வதுடன் குறுநில மன்னர் சமுதாயத்தைப் புகழ்ந்துள்ளார் மாடலன்

மதுரைக்குமரனார். இப்பதிவையும் சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களில் பதிவுசெய்யப் பெற்றுள்ள ஒட்டுமொத்த (834) வரலாற்றுப் பதிவுகளையும் ஆராயுங்கால் வேந்தர்களுக்கும் புலவர் பெருமக்களுக்கும் இடையே இருந்த உறவுநிலையைக் காட்டிலும், குறுநில மன்னர்களுக்கும் புலவர்பெருமக்களுக்கும் இடையே இருந்த உறவுநிலை தான் அதிகமாக பதிவு செய்யப்பெற்றுள்ளன. இப்பதிவுகளின் வழி குறுநில மன்னர்களுக்கும் சங்கப் புலவர்களுக்கும் இடையே ஓர் இணக்கமான உறவுநிலை நிலவியிருந்தது வெளிப்படையாக தெரிகின்றது.

## தொகுப்புரை

- சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களில் பதிவுசெய்யப்பெற்றுள்ள வரலாற்றுப் பதிவுகள் அக இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள், புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள், அகப்புற இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள் என முப்பகுதிகளாகப் பகுக்கப் பெற்றுள்ளன.
- தொகைநூல் அக இலக்கியத்தில் 372 இடங்களில் வரலாற்று நிகழ்வுகள் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகளில் சேரர் குறித்து 43 இடங்களிலும் சோழர் குறித்து 41 இடங்களிலும் பாண்டியர் குறித்து 46 இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்து 242 இடங்களிலும் பதிவுசெய்யப் பெற்றுள்ளன.
- தொகைநூல் புற இலக்கியத்தில் 446 இடங்களில் வரலாற்று நிகழ்வுகள் பதிவுசெய்யப் பெற்றுள்ளன. இப்பதிவுகளில் சேரர் குறித்து 112 இடங்களிலும் சோழர் குறித்து 74 இடங்களிலும் பாண்டியர் குறித்து 39 இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்து 221 இடங்களிலும் பதிவு செய்யப்பெற்றுள்ளன.
- தொகைநூல் அகப்புற இலக்கியத்தில் பாண்டியர் குறித்து 16 இடங்களில் வரலாறு பதிவுசெய்யப் பெற்றுள்ளன.
- சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களின் ஒட்டுமொத்த வரலாற்றுப் பதிவுகள் 834. இப்பதிவுகள் முறையே எட்டுத்தொகையில் சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 155 இடங்களிலும் சோழர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 115 இடங்களிலும் பாண்டியர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 101 இடங்களிலும் குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் 463 இடங்களிலும் பதிவு செய்யப் பெற்றுள்ளன. பதிவுகளில் குறுநில மன்னர்கள் குறித்த வரலாற்றுப்பதிவுகள் முதல் இடத்தினைப் பெறுகின்றன. சேரர் குறித்த வரலாற்றுப் பதிவுகள் இரண்டாம்

